॥ ஸ்ரீஹரி: ॥ 1353▲

# ராமாயணத்தில் முக்கிய பாத்திரங்கள்

रामायणके कुछ आदर्श पात्र ( तमिल )



गीताप्रेस गोरखपुर
GITA PRESS, GORAKHPUR

ஸ்ரீஜயதயால் கோயந்தகா

|| ஸ்ரீஹரி: || 1353

# இராமாயணத்தில் சில உன்னத பாத்திரங்கள்

## रामायणके कुछ आदर्श पात्र (तमिल)

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸகா$_2$ த்வமேவ ।
த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!

தமிழாக்கம்
திரு. K.P. மணியன்,

ஆக்கியோர்
ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா

|| ஸ்ரீஹரி: ||

# நூல் அறிமுகம்

ஆதிகாவியமான ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் முக்கிய கதாபாத்திரங்களான இராமபிரான், சீதாப்பிராட்டி, லட்சுமணன், பரதன், சத்ருக்னன், சிறிய திருவடியென போற்றப்படும் ஆஞ்ஜநேயர் ஆகியோரின் அற்புதமான சரிதங்களைப் பெருமதிப்புக்குரிய ஸ்ரீஜயதயால் கோயந்தகா [நிறுவனர் – கீதா பிரஸ்] அவர்கள் மிக எளிய நடையில் அனைவரும் புரிந்து கொள்ளும்வண்ணம் இந்நூலின்கண் தொகுத்தளித்துள்ளார். மாவீரர் மாருதியின் வரலாற்றில் மட்டும் ஸ்ரீராமசரிதமானசம், அத்யாத்ம ராமாயணம், பத்மபுராணம் ஆகிய நூல்களிலிருந்தும் பொருத்தமான மேற்கோள்களை வெகு அழகாக கையாண்டுள்ளார் ஸ்ரீகோயந்தகா அவர்கள்.

இந்நூல், மனிதகுலம் முழுவதற்குமே வழிகாட்டியாக விளங்கிவரும் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் சுருக்கம் என்றே கருதத்தக்கது. அன்பர்களனைவரும் இந்நூலைப் படித்து வாழ்வில் பயனை உய்ய வேண்டும் என பணிவுடன் வேண்டிக் கொள்கிறோம்.

— பதிப்பாளர்கள்



**குறிப்பு:–** ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் பால–அயோத்தியா–ஆரண்ய–கிஷ்கிந்தா–சுந்தர–யுத்த–உத்தரம் ஆகிய ஏழு காண்டங்களும் (தமிழ் மூலம் – மொழிபெயர்ப்புடன் கூடிய) ஐந்து பாகங்களாகவும் மற்றும் மேற்படி ஏழு காண்டங்களும் தமிழ் மொழிபெயர்ப்பு மட்டும் அடங்கிய இரண்டு பாகங்களாகவும் எமது பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

|| ஸ்ரீஹரி: ||

# பொருளடக்கம்


| வரிசை எண் | பொருள் | பக்கம் எண் |
|---|---|---|
| 1. | ஆதர்ச புருஷர் இராமபிரான் | 5 |
| 2. | சீதாதேவியின் ஆதர்ச வாழ்க்கை | 32 |
| 3. | இராமபிரானின் தொண்டரான லட்சுமணன் | 59 |
| 4. | பரதனுடைய ஆதர்ச வாழ்க்கை | 84 |
| 5. | ஸ்ரீராமனுடைய அடியார்க்கடியான் சத்ருக்னன் | 106 |
| 6. | ஆதர்ச பக்தரான அனுமான் | 117 |




|| ஸ்ரீஹரி: ||

# இராமாயணத்தில் சில உன்னத பாத்திரங்கள்

## 1. ஆதர்ச புருஷர் இராமபிரான்

[பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் குணங்கள் கொண்ட ஆதர்ச (உன்னத) புருஷர்]

ரகுகுலத்திற்கு அணிகலமாக விளங்குபவரும், சிறந்த நடத்தைக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவரும், குணங்கள் மற்றும் பண்புகளின் எல்லையைக் காப்பவருமான பகவான் ஸ்ரீராமச்சந்திரனுக்கு ஒப்பானவராக, வேறு ஒருவர் இதுவரை பிறந்ததில்லை என்று சொல்வது மிகையாகாது. இராமபிரான் பூரண பிரம்மமான பரமாத்மாவே! அவர் தருமத்தைக் காக்கவும், உலகை உய்விக்கவுமே அவதரித்தார் எனினும், நன்னடத்தை கொண்ட ஓர் ஆதர்ச மனிதராகவே எல்லோரிடமும் நடந்து கொண்டார். ஆதர்ச லீலைகள் கொண்ட அவருடைய சரித்திரத்தைக் கேட்பதாலும் படிப்பதாலும் நினைப்பதாலும் இதயத்தில் மிகவும் தூய உணர்வலைகள் கிளர்ந்தெழுகின்றன; மனம் களிக்கிறது. அவருடைய ஒவ்வொரு செயலும் பிறர் பின்பற்றி நடக்கத்தக்கதாக இருந்தது.

அவர் நற்குணங்களின் பெருங்கடல். உண்மை, நல்லெண்ணம், தயவு, பொறுமை, மென்மை, வீரம், ஆழம், படைக்கலங்களைப் பயன்படுத்தும் கலையில் தேர்ச்சி, பராக்கிரமம், அச்சமின்மை, பணிவு, அமைதி, சகிப்புத்தன்மை, மனஅமைதி, அடக்கம், பற்றின்மை, நீதி காக்கும் தன்மை, திறமை, அன்பு, தியாகம், மரியாதை காத்தல், பிறன்மனை நோக்கா பேராண்மை, மக்களின் மனத்தைக் கவரும் நடத்தை, அந்தணர்களிடம் பக்தி, தாய்–தந்தையர் மீது பக்தி,

குரு பக்தி, உடன்பிறந்தோர் மீது பாசம், நல்லோரைக் காத்தல், நட்பு, அடைக்கலம் புகுந்தோரிடம் அன்பு, எளிமை, செயல்திறன், கொடுத்த வாக்கைக் காத்தல், சாதுக்களைக் காத்தல், துஷ்டர்களை அழித்தல், பகையின்மை, எல்லோருக்கும் இனியவராய் இருத்தல், புறங்கூறாமை, பலவும் அறிந்திருத்தல், தருமஞானம், தருமத்தின் வழிநடத்தல், தூய்மை முதலிய நற்குணங்கள் அனைத்துமே இராமபிரானிடம் முழுமை பெற்று விளங்கின. உலகில் இவ்வளவு மகத்தான குணங்கள் எந்த ஒரு மனிதனிடமும் ஒருங்கே காணப்படவில்லை. வால்மீகி ராமாயணத்தில் பால–அயோத்தியா காண்டங்களின் தொடக்கத்தில் பகவான் ஸ்ரீராமனுடைய குணங்களின் அழகிய வர்ணனை இடம் பெறுகிறது. அதைக் கட்டாயம் படிக்க வேண்டும்.

தாய்–தந்தையர், உற்றார்–உறவினர், மனைவி–மக்கள், வேலைக்காரர்கள், குடிமக்கள் போன்ற அனைவரிடமும் அவர் எவ்விதமான, அசாதாரணமான, ஆதர்சமான நடத்தை கொண்டிருந்தார் என்று எண்ணிப் பார்த்தாலே மனம் மகிழ்ச்சியில் திளைக்கிறது. அவரிடம் மக்கள் வைத்திருந்தது போன்ற அன்பை வேறு எங்கும் காண்பதரிது. அவர், இந்த உலகில் வாழ்ந்த காலத்தில், அன்பும் இனிமையும் கொண்ட அவரது நடத்தையினால் உள்ளம் நெகிழாதவர் யாருமே இருந்ததில்லை.

பகவானது திருவுள்ளப்படியும், தேவர்களின் தூண்டுதலினாலும், உலக நன்மையின் பொருட்டுமே கைகேயி, இராமபிரானிடம் அன்பில்லாதது போல் கடுமையாக நடந்து கொண்டார். இதிலிருந்து கைகேயிக்கு ஸ்ரீராமனிடம் அன்பில்லை என்று முடிவு செய்துவிடக் கூடாது. ஏனென்றால், இராமபிரானுக்கு எதிராக, கைகேயியைத் தூண்டிவிட மந்தரை முயன்றபோது கைகேயி என்ன சொன்னார் பாருங்கள்—

''மந்தரையே! என் செல்வன் இராமன் தருமமறிந்தவன்; ஆசார்யர்களிடம் பணிவுள்ளவன்; செய்ந்நன்றி மறவாதவன்;

சத்தியம் பேசுபவன்; நெருப்பைப் போல் தூயவன். [இவற்றிற்கெல்லாம் மேலாக] மன்னரின் மூத்த புதல்வன் என்பதால், அவன்தானே இளவரசுப் பட்டத்திற்கு உரியவன்?

சகோதரர்களையும் வேலைக்காரர்களையும் [உன்னையும் சேர்த்துதான்] ஒரு தந்தையைப் போல் போஷிப்பவன். அவன் நீண்ட நாள் வாழட்டும்! கூனிக் கிழவியே! இராமப் பட்டாபிஷேகத்தைக் கேட்டு, நீ ஏன் இவ்வளவு எரிச்சல் அடைகிறாய்? பரதன், [என் சொந்தப் பிள்ளை என்பதால்] எனக்கு மிகவும் பிரியமானவன். ஆனால், அதைக் காட்டிலும் எனக்கு மிகவும் பிரியமானவன், இராகவன். [தன் சொந்த தாயாரான] கௌசல்யைக்குச் செய்வதைக் காட்டிலும், எனக்கே அதிகமாகப் பணிவிடை செய்கிறான். ராஜ்யம் இராமனுக்குக் கொடுக்கப்பட்டது என்றால், அது பரதனுக்குக் கொடுக்கப்பட்டதாகவே எண்ண வேண்டும். ஏனெனில் இராகவன், தன்னைப் போலவேதான் தன் உடன்பிறந்தோரையும் எண்ணுகிறான்'' [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், அயோத்தியா காண்டம் 8/14, 15, 18, 19] என்கிறார்.

எவ்வளவு உயர்ந்த வாத்ஸல்யம் [பிள்ளைப் பாசம்]! ஸ்ரீராமன் மீது கைகேயிக்குத்தான் எவ்வளவு அன்பு! எவ்வளவு நம்பிக்கை! இதிலிருந்தே கைகேயி செய்த கொடுஞ்செயல், அவருடைய இயற்கை குணத்தின் காரணத்தால் நடந்ததன்று; பகவானுடைய விருப்பத்தினால்தான் நடந்தது என்பது தெளிவாகிறது.

## தாயிடம் பக்தி

இராமபிரானுக்குத் தம்முடைய தாயிடம் இருந்த பக்தி சிறந்த ஆதர்சனமானது. [பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது.] அதை முழுவதும் விவரிப்பது என்பது இயலாது. எனவே, இங்கே சுருக்கமாக மட்டுமே எழுதப்படுகிறது.

தாயான கோசலை, மற்ற தாய்மார்கள் – இவர்களின் நிலையைப் பற்றிச் சொல்வானேன்! தாயார் கைகேயி, தம்மிடம் தயையில்லாமல் நடந்துகொண்ட போதிலும்,

அவரிடத்தில் ஸ்ரீராமன் நடந்து கொண்டவிதம் எப்போதுமே பக்தியும் மரியாதையும் நிரம்பியதாக இருந்தது. கோசலையின் அரண்மனையிலிருந்து திரும்பி வருகின்றபோது, அவர் லட்சுமணனிடம் பின்வருமாறு சொல்கிறார்—

''லட்சுமணா! என்னுடைய பட்டாபிஷேகத்தைக் காண வேண்டுமென்று என்னுடைய தாயாரின் மனம் துடித்தது. [ஆனால், முடிசூட்டுவிழா நடைபெறவில்லை.] அவருடைய மனம் எவ்விதத்திலும் சஞ்சலப்படாதபடி நீ நடந்து கொள்ள வேண்டும். அவருடைய மனத்தில் சந்தேகம் காரணமாகத் துக்கம் ஏற்படுவதை ஒரு முகூர்த்த காலம்கூட என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது. அதை அலட்சியப்படுத்தவும் முடியாது. தெரிந்தோ, தெரியாமலோ, தாயார்களுக்கோ, அல்லது தந்தையாருக்கோ பிடிக்காத எந்தவொரு சிறு செயலையும் செய்ததாக எனக்கு நினைவேயில்லை'' [அயோத்தியா காண்டம் 22/6–8] என்று சொல்கிறார்.

இராமபிரான் தாயார் மீது கொண்டிருந்த பக்திக்கு இதைத் தவிர, வேறு பல எடுத்துக்காட்டுகளும் கிடைக்கின்றன. பரதன் சித்திரகூடத்திலிருந்து திரும்பும்போது இராமபிரான் பரதனிடம், ''தம்பி பரதா! நீ அரசை அடையவேண்டும் என்ற விருப்பத்தாலோ அல்லது ராஜ்யத்தின் மேல் உள்ள ஆசையாலோ, உன் தாய் கைகேயி செய்துள்ள செயலை மனத்தில் வைத்துக் கொள்ளாதே! வணங்குதற்குரிய ஒரு தாயாரிடம் நடந்துகொள்ள வேண்டிய முறைப்படியே அவரிடம் நடந்துகொள்'' என்றார்.

அதே சமயம் அவர் சத்ருக்னனிடம், ''என் மீதும் சீதையின் மீதும் நான் ஆணையிட்டுச் சொல்கிறேன். தாய் கைகேயியிடம் நீ ஒருபொழுதும் கோபித்துக் கொள்ளாதே. எப்பொழுதும் அவருக்குப் பணியாற்றிக் கொண்டிரு'' என்றார். காட்டில் இருக்கும்போது ஒருமுறை லட்சுமணன் கைகேயியை நிந்தித்தார். அப்பொழுதும் இராமபிரான், ''தம்பி! நீ, தாய் கைகேயியை நிந்திக்கக் கூடாது'' என்றே கூறினார்.

இதிலிருந்து மற்ற தாய்மார்களிடம் இராமபிரானுக்கு எவ்வளவு மதிப்பும் பக்தியும் இருந்தது என்பது தெளிவாகிறது. அவர் காட்டிற்குப் போகும்போது தசரதருடைய மற்ற ராணிகள்— "தந்தையின் தூண்டுதல் இல்லாமலேகூட, அந்தப்புரப் பெண்களின் அவசியத் தேவைகளைத் தானே கவனித்து நிறைவேற்றி வந்த இராமன் – கைகொடுத்துக் காப்பவன், நமக்கு அடைக்கலம் தருபவன். அந்த இராமன் – இன்று காட்டிற்குப் போய்விடப் போகிறான். ஸ்ரீராமன் பிறந்த நாளிலிருந்தே, பெற்ற தாய் கௌசல்யையிடம் எவ்வளவு அன்பும் மரியாதையுடனும் நடந்து கொண்டானோ, அவ்வாறே நம்மிடமும் நடந்து கொண்டான்" [அயோத்தியா காண்டம் 20/2,3] என்று சொல்லிப் புலம்பி அழுதனர்.

ஸ்ரீராமன் தாயிடம் கொண்ட பக்திக்கு இதைவிடச் சிறந்த சான்று வேறு என்ன இருக்க முடியும்?

## தந்தையிடம் பக்தி

இவ்விதமே அவர் தந்தையிடம் கொண்டிருந்த பக்தியும் மிகமிக அற்புதமானது. தந்தையின் ஆணையை நிறைவேற்றுவதில் ஸ்ரீராமனது மனத்தில் எவ்வளவு உற்சாகமும் துணிவும் திடமான உறுதியும் இருந்தது என்ற விஷயம், வால்மீகி ராமாயணத்தைப் படிப்பவர்களுக்குப் புலப்படாமல் போகாது! தாயான கைகேயியிடம் ஸ்ரீராமன் சொல்வதைப் பின்வருமாறு வால்மீகி குறிப்பிடுகிறார்— "மன்னர் உத்தரவிட்டால் நான் நெருப்பிலும் வீழ்வேன்; கொடிய விஷத்தையும் குடிப்பேன்; கடலில் மூழ்குவேன் [அயோத்தியா காண்டம் 18/28,29]. ஏனென்றால், தந்தைக்குப் பணிவிடை செய்வது மற்றும் அவர் சொற்படி நடப்பது என்பதைக் காட்டிலும் மேலான தருமானுஷ்டானம் உலகில் வேறு ஒன்றுமில்லை. [அயோத்தியா காண்டம் 19/22]"

அங்கே இதே போன்ற மொழிகள் பல காணப்படுகின்றன. பிறகு, தாயார் கோசலையிடமும் அவர்— "தந்தையாரின்

ஆணையை மீறி நடக்கும் சக்தி என்னிடம் இல்லை. தங்கள் திருப்பாதங்களில் தலை வைத்து வேண்டிக் கொள்கிறேன். நான் காட்டிற்குப் போகவே விரும்புகிறேன்'' [அயோத்தியா காண்டம் 21/30] என்றே சொல்கிறார்.

இதைத் தவிர லட்சுமணன், பரதன் மற்றும் ரிஷி முனிவர்களுடன் உரையாடும்போது, பித்ரு–பக்தியைப் பற்றி இராமபிரான் பல முறை சொல்லியிருக்கிறார்.

மகரிஷி வால்மீகி, இராமபிரானது இளமைப் பருவத்தைப் பற்றிச் சுருக்கமாக வர்ணிக்கும்போதுகூட, தந்தைக்குச் சேவை செய்வதிலேயே இராமபிரான் எப்போதும் ஈடுபட்டிருந்தார் என்று கூறுகிறார்.

## ஏகபத்தினி விரதம்

ஸ்ரீராமன் கடைப்பிடித்த 'ஏகபத்தினி விரதம்' மிகச்சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ஜானகிதேவியைத் தவிர வேறு ஒரு மங்கையை மணக்க, இராமபிரான் ஒருபோதும் கனவில்கூட நினைத்ததில்லை. சீதாதேவியை வனவாசத்திற்கு அனுப்பிய பிறகு, வேள்வி செய்ய மனைவி அருகில் இருக்க வேண்டும் என்ற தேவை ஏற்பட்டபோதுகூட, சீதாதேவியைப் போல் பொன்னாலான ஓர் உருவை அமைக்கச் செய்து வேள்வியைச் செய்து முடித்தார். அவர் விரும்பியிருந்தால் அந்தச் சமயத்திலாவது வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டிருக்கலாம். அப்படி செய்திருந்தாலும் உலகத்தில் அவருக்கு இழிசொல் எதுவும் ஏற்பட்டிருக்காது. ஆனால், பகவான் ஸ்ரீராமன் சிறந்த நடத்தைக்கு இலக்கணமாகவும் மாமனிதராகவும் திகழ்ந்தார். 'பதிவிரதா தருமம்' [கற்புநெறி] பெண்களுக்கு விதிக்கப்பட்டிருப்பது போல், ஆண்களுக்கும் 'ஒரு மனைவிக் கொள்கை' மிகவும் அவசியம் என்பதைத் தாமே கடைப்பிடித்து, உலகிற்குக் காட்ட வேண்டியிருந்தது. ஆண்–பெண் உறவு வெறும் இன்பம் துய்ப்பதற்காக அமைந்ததன்று; அறவழிப்படி இருவரும் நடப்பதற்காக ஏற்பட்டது.

அரக்கன், பிராட்டியைக் கவர்ந்து சென்றபின் விவரிக்கும் நிகழ்ச்சிகளிலிருந்து சீதாதேவியின் மீது பகவான் ஸ்ரீராமனுக்கு எவ்வளவு அன்பு இருந்திருக்கிறது! என்பதைப் பற்றிய நிகழ்ச்சி ஸ்ரீமத் ராமாயணத்தில் கிடைக்கிறது. ஸ்ரீராமன் மாபெரும் வீரர், தைரியமானவர், பொறுமை உள்ளவர். அப்படியிருந்தும் அச்சமயத்தில் அவர் பிரிவாற்றாமையால் பித்துப்பிடித்த ஒரு சாதாரண மனிதனைப் போல, விலங்குகள், பறவைகள், மரம்–செடி–கொடிகள், மலைகள் ஆகியவற்றிடம் சீதையைப் பற்றிக் கேட்டுக் கொண்டும், பலவிதமாக அழுது புலம்பிக் கொண்டும் காடுகளில் அலைந்தார். சில இடங்களில் துயரம் தாளாமல் நிலைகுலைந்து மயக்கமடைந்து கீழே விழுந்தார். 'ஏ சீதே! ஏ சீதே!' என்று கூவினார். அந்தக் கட்டங்களின் வர்ணனை மிகவும் உருக்கம் நிறைந்தது; இதயத்தைப் பிளக்கவல்லதாக இருக்கிறது.

## சகோதர பாசம்

ஸ்ரீராமன், தம்முடைய தம்பிகளிடம் வைத்திருந்த அன்பு ஒப்பற்றதாகும். இளமையிலிருந்தே இராமபிரான், தம்முடைய சகோதரர்களிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தார். அவர்களை எப்போதும் கவனித்துக் கொண்டு, மகிழ்ச்சியோடு இருக்குமாறு பார்த்துக் கொண்டார். நான்கு சகோதரர்களும் சேர்ந்தே குதிரைகளின் மேல் ஏறிச் சுற்றி வந்தனர். இராமபிரான், சிறந்த உணவு மற்றும் வேறு பொருள் கிடைத்தால், அதை முதலில் தம் தம்பிகளுக்குக் கொடுத்த பிறகே, தாம் அதைப் பயன்படுத்தினார்.

இராமபிரானுக்கு உடன்பிறந்தோர் எல்லோரிடமுமே சமமான அன்பு இருந்தது; ஒரு பேதமும் இல்லை என்றாலும் லட்சுமணனுக்கு இராமபிரானிடம் மிகுந்த அன்பு இருந்தது. அவர், ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்து சிறிது நேரம்கூட இருக்க விரும்பியதில்லை. அவருக்கு ஸ்ரீராமனின் பிரிவு தாள முடியாததாக இருந்தது. அதனால்தான் விசுவாமித்திரரின்

வேள்வியைக் காக்க, அவரும் இராமபிரானுடன் சென்றார். அரக்கர்களை அங்கே அழித்துவிட்டு, இரு சகோதரர்களும் மிதிலைக்குச் சென்றனர். 'சிவதனுஷ்' என்ற வில் முறிந்து விழ, அதற்குப் பிறகு திருமண ஏற்பாடுகள் நடந்தன. நான்கு சகோதரர்களுக்கும் ஒரே சமயத்தில் திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்குப் பிறகு, நான்கு சகோதரர்களும் அயோத்தி வந்து அன்புடன் வாழ்ந்து வந்தனர்.

சில நாட்கள் சென்றதும் பரதனும் சத்ருக்னனும் தங்கள் அம்மானுடன் [தாய்மாமானுடன்] பாட்டனார் வீட்டுக்குச் சென்றுவிட்டனர். ஸ்ரீராமனும் லட்சுமணனும் தந்தையின் கட்டளைப்படி, குடிமக்களின் நன்மைக்கான செயல்களைச் செய்து கொண்டிருந்தனர். இராமபிரானுடைய நேயம் நிறைந்த செயல்கள், நற்குணங்கள், சுபாவம் – இவற்றால் நகரத்தில் உள்ள எல்லா மாந்தர்களும் மற்றும் வெளியே வசித்த அந்தணர் முதலிய எல்லா வருணத்தவர்களும் மிக்க மகிழ்ச்சியடைந்தனர்.

பிறகு தசரத மன்னர், வசிஷ்ட முனிவரின் கட்டளையையும் குடிமக்களின் ஒப்புதலையும் ஏற்று, இராமபிரானுக்குத் திருமுடி சூட்ட முடிவு செய்தார். மன்னரின் வாய்வழியே தமது பட்டாபிஷேகம் பற்றிக் கேட்ட இராமபிரரான், அன்னை கௌசல்யையின் அரண்மனைக்குச் சென்றார். அன்னை சுமித்திரையும் தம்பி லட்சுமணனும் அங்கிருந்தனர். அப்போது, தம்பி லட்சுமணனிடம் ஸ்ரீராமன் சொல்வதைக் கேளுங்கள்— "லட்சுமணா! என்னுடன் சேர்ந்து நீயும் இந்த உலகைப் பரிபாலனம் செய். என்னுடைய இரண்டாவது அந்தராத்மாவான உன்பொருட்டே இந்த ராஜ்யலக்ஷ்மி கிடைத்திருக்கிறாள். சுமித்திரையின் அன்பு மைந்தனே! உன் விருப்பப்படி எல்லா போகங்களையும், அரசின் பயன் மற்றும் உரிமைகளையும் அனுபவிப்பாயாக! இந்த வாழ்க்கையையும் அரசாட்சியையும் உனக்காகவே நான் விரும்புகிறேன்" [அயோத்தியா காண்டம் 4/43,44].

இதற்குப் பிறகு லீலையாகிய இந்த நாடகத்தின் காட்சி மாறுகிறது. அன்னை கைகேயியின் விருப்பப்படி பட்டாபிஷேகம், வனவாசம் செல்வதாக மாறிவிடுகிறது. சுமந்திரர் வந்து அழைக்க, ஸ்ரீராமன் அரண்மனைக்குச் சென்றார். அன்னை கைகேயியிடம் பேசியபோது, அரசர் 'வரம்' கொடுத்த விஷயம் தெரிய வந்தது. அதைக் கேட்ட இராமபிரான் மகிழ்ச்சி தெரிவித்தார்.

அடுத்ததாக, அன்னை கோசலையிடம் விடைபெறச் சென்றார். அங்கேயும் எவ்வளவோ உரையாடல்கள் நிகழ்ந்தன. ஆனால் கைகேயிக்கோ, பரதனுக்கோ எதிராக ஒரு வார்த்தைகூட ஸ்ரீராமன் கூறவில்லை. மாறாக, பரதனைப் புகழ்ந்து கூறி, அன்னைக்குத் தைரியமூட்டினார். ''பரதன் என்னைப் போலவே உங்களுக்குச் சேவை செய்வான்'' என்றார்.

அதே நேரத்தில் சீதையிடம் அரண்மனையிலேயே இருந்துவிடும்படி அறிவுறுத்துகிறார்— ''சீதே! பரத—சத்ருக்னர்கள் என் உயிரினும் மேம்பட்டவர்கள். அவ்விருவரும் சகோதரர் போலவும், புதல்வர் போலவும் பார்க்கத்தக்கவர்கள். அதனால், அதைவிடவும் அதிக பாசத்துடன் அவர்கள் மீது நீ அன்பு செலுத்த வேண்டும்'' [அயோத்தியா காண்டம் 26/33].

வனம் செல்லும் செய்தியைக் கேட்ட லட்சுமணனின் மனத்தில் பெரும் துயரமும் கோபமும் உண்டாயின. நீதியும் தருமமும் பொதிந்த இனிய சொற்களால் அவரையும் இராமபிரான் அமைதிப்படுத்தினார். பிறகு லட்சுமணன், தாமும் உடன் வரப்போவதாக வேண்டுகோள் விடுக்கவே, அவரை அங்கேயே இருக்குமாறு அறிவுறுத்துகிறார், ஸ்ரீராமன்.

''லட்சுமணா! நீ, என்னிடம் மிகவும் ஒட்டுதலுடைய அன்பன்; அறவழியில் நடப்பவன்; வீர—தீரன்; எப்போதும் நல்வழியில் செல்பவன்; அன்பிற்குரியவன்; உயிருக்கு

நிகரானவன்; கட்டுப்பட்டு நடப்பவன்; ஆணைகளை நிறைவேற்றுபவன்; என்னுடைய நண்பனும்கூட" [அயோத்தியா காண்டம் 31/10] என்றெல்லாம் கூறுகிறார்.

எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், லட்சுமணன் அன்போடு கூடிய தமது பிடிவாதத்தை விடவில்லை. அப்போது ஸ்ரீராமன் அவரைத் திருப்திப்படுத்தத் தீர்மானித்து, தம்முடன் அழைத்துச் செல்ல ஒப்புக் கொண்டார். காட்டில் வசிக்கும்போது இராமபிரான் லட்சுமணனுக்கும் சீதைக்கும் எல்லாவிதங்களிலும் சுகம் அளித்து, அவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்கும்வண்ணம் செயல்பட்டார்.

'படையுடன் பரதன் சித்திரகூடம் வருகிறார்' என்ற தகவல் அறிந்து, இராமபிரானிடம் வைத்திருந்த அன்பின் காரணமாக லட்சுமணன் மிகவும் துயரமடைந்தார். அந்த உணர்ச்சி வேகத்தில் அவர், பரதனைப் பற்றித் தகாத வார்த்தைகளைக் கூறினார். அப்போது ஸ்ரீராமன், பரதனைப் புகழ்ந்து பேசுகிறார்.

"லட்சுமணா! தருமம், அர்த்தம், காமம், பூமி ஆகிய எல்லாவற்றையும் உங்களின் [தம்பிகளின்] பொருட்டாகவே நான் விரும்பி ஏற்கிறேன். இதை உனக்குச் சத்தியமாகக் கூறுகிறேன். நான் ராஜ்யத்தை விரும்புவதுகூட, சகோதரர்களின் ஒற்றுமைக்காகவும் சௌக்கியத்திற்காகவும்தான். என் ஆயுதங்களின் மீது ஆணையிட்டு இதைக் கூறுகிறேன்.

நற்பண்பினாய்! பரதனும் நீயும் சத்ருக்னனும் இல்லாமல் [உங்களுக்கெல்லாம் கிடைக்காமல்] எனக்கு [மட்டும்] எள்ளளவு சுகம் கிடைப்பதாக இருந்தால்கூட, அதனை அக்னிதேவன் சுட்டு எரிக்கட்டும். நான் சடைமுடி—மரவுரி தரித்துக் கொண்டு காட்டிற்கு அனுப்பப்பட்டதைக் கேள்விப்பட்டு, [மூத்தகுமாரனே இளவரசுப் பட்டம் ஏற்க வேண்டும் என்ற] பரம்பரை வழக்கத்தை நினைவுகூர்ந்து, துயரத்தால் புலன்கள் கலங்க, அன்பு மேலீட்டினால் நெஞ்சம் நிரம்பி வழிய, நம்மைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறான்

என்று கருதுகிறேன். மாவீரனே! வேறு எந்தக் காரணத்தை முன்னிட்டும் அவன் வந்திருக்க மாட்டான் [என்பது நிச்சயம்].

இதுமட்டுமின்றி பரதன் மனத்தாலும்கூட எனக்கு எதிராக நடக்க மாட்டான். உனக்கு அரசில் விருப்பம் இருக்குமானால் நான் பரதனிடம் சொல்லி, உனக்கு அரசைக் கொடுக்கச் செய்கிறேன்'' [அயோத்தியா காண்டம் 97/5,6,8,11] என்று சொன்னார். இச்சொற்களால் லட்சுமணனின் மனத்தில் பரதனைப் பற்றி எழுந்த ஐயம் நீங்கியது.

அதற்குப் பிறகு, பரதன் ஆசிரமத்திற்கு வந்து இராமபிரானின் பாதங்களில் விழுந்து புரண்டார். அப்போது ஸ்ரீராமன் அவரைப் பார்த்தார். தமது கைகளால் அவரைத் தூக்கி எடுத்து மார்புற அணைத்துக் கொண்டார். அவரை மடியில் அமர்த்திக் கொண்டு உச்சிமுகர்ந்து ஆதரவுடன் செய்திகளைக் கேட்டுவிட்டு, ''தம்பி! நீ, இவ்விதம் மரவுரி அணிந்து, சடைகள் தாங்கி இங்கு ஏன் வந்தாய்?'' என வினவினார். ஸ்ரீராமனைத் திரும்ப அயோத்திக்கு அழைத்துச் செல்ல பரதன் முயன்றார். அவர்களிடையே நிலவிய அன்பையும், அவர்கள் நடந்துகொண்ட விதத்தையும் பார்த்து சுற்றியிருந்தோர் அனைவரும் வியப்பில் ஆழ்ந்தனர்.

இறுதியில் இராமபிரானின் மனஉறுதி பரதனுக்குத் தெரிந்துவிட்டது. அப்போது பரதன் ஸ்ரீராமனுடைய பாதுகைகளைக் கொடுக்குமாறு வேண்டினார். பரதனது வேண்டுகோளை ஏற்ற ஸ்ரீராமன், பரதனுக்குத் தம் பாதுகைகளை அளித்துவிட்டு, அவருக்கு அயோத்தி திரும்ப விடையுமளித்தார். பரதன், அவற்றை மிக்க மரியாதையுடன் தம் தலையில் தாங்கியவாறு அயோத்தி சென்றார். பாதுகைகளை அரச மரியாதைக்குரிய முறையில் நீராட்டி, அவற்றின் கட்டளைப்படி அரசு நடத்தினார். அவரும் ஸ்ரீராமனைப் போலவே தவவேடம் தாங்கி, நந்திக்கிராமத்தில் வசிக்கத் தொடங்கினார்.

பின்னர் சீதை, இராவணனால் கவர்ந்து செல்லப்பட்டு, இலங்கை மீது போர் ஏற்பட்டது. இராவணனுடன் அச்சமூட்டும் போர் துவங்கியது. போரின்போது இராவணனின் 'சக்தி ஆயுத'த்தால் இலக்குவன் நினைவிழந்தார். அவ்வமயம் இராமபிரானது புலம்பலைக் காணுங்கால், சகோதரன் இலக்குவன் மீது அவர் கொண்ட அன்பு வெளிப்படுகிறது— ''அன்று நான் வனமேகுங்கால் பொலிவுமிக்க இந்த இலக்குவன் என்னைப் பின்தொடர்ந்தது போலவே, நானும் இன்று அவனைப் பின்பற்றி யமலோகம் புகுவேன். கபடப் போர் புரியும் அரக்கன், இன்று அவனை இந்நிலைக்கு ஆளாக்கிவிட்டான்'' [யுத்த காண்டம் 101/13,14] என்று அவர் புலம்பியது கேட்போர் மனத்தை உருக்குவதாக உள்ளது.

எந்தத் தம்பி, தம்முடைய அண்ணனுக்காக எல்லாச் சுகங்களையும் துறந்துவிட்டு, எல்லாவிதமான கஷ்டங்களையும் தாங்கிக் கொள்ளவும், ஏன் இறக்கவும்கூடத் தயாராக இருந்தாரோ, அப்படிப்பட்ட தம்பிக்காக வருந்துவதும் புலம்புவதும் பொருத்தமானதுதான். ஆனால் ஸ்ரீராமனோ, இங்கே துயரத்தின் எல்லைக்கே சென்று 'சகோதர பாசம்' எப்படி இருக்க வேண்டும்? என்பதை அழகுற அறிவுறுத்தியிருக்கிறார்.

'சுஷேணன்' என்ற வைத்தியன், அனுமானை அனுப்பி 'சஞ்ஜீவனி மூலிகை'யை வரவழைத்து, லட்சுமணனைப் பிழைக்கச் செய்துவிட்டான். போரில் இராவணன் கொல்லப் பட்டான். பகவான் ஸ்ரீராமன் அயோத்திக்குத் திரும்பும்போது விபீஷணன் மிகுந்த பணிவுடன் அவரிடம் சில நாட்கள் தங்க வேண்டிக் கொண்டார். அப்போது இராமபிரான் தந்த மறுமொழி—

''விபீஷணா! உன்னுடைய இந்த வேண்டுகோளை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்பது ஒருக்காலும் இல்லை. என் தம்பி பரதன், என்னைத் திருப்பி அழைத்துச் செல்வதற்காகச் சித்திரகூடம் வந்து, தலைதாழ்த்தி வணங்கிக் கேட்டுக் கொண்டான். நான் அப்படியும் அவன்

கோரிக்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இப்போது, அந்த பரதனைப் பார்க்க என் உள்ளம் துடிக்கிறது. அவனைப் பார்ப்பதில் நான் எப்படிக் காலதாமதம் செய்யமுடியும்?'' [யுத்த காண்டம் 124/18,19] என்று சொன்னார்.

அதற்குப் பிறகு விமானத்தில் அமர்ந்து, சீதாதேவி, லட்சுமணன், மேலும் நண்பர்கள் எல்லோருடனும் இராமபிரான் அயோத்தி வந்தடைந்தார். அங்கேயும் அவர் பரதனைக் காணும்போது மிகவும் அற்புதமான சகோதர பாசத்தைக் காட்டினார்.

அரசாட்சியின் ஒவ்வொரு செயலிலும் ஸ்ரீராமன் தம்முடைய சகோதரர்களின் கருத்தைக் கேட்டார். ஒவ்வொரு விதத்திலும் அவர் தம் தம்பியருக்கு இன்பமூட்டவும், அவர்களை மகிழ்ச்சியுடன் வைத்திருக்கவும் செயல்பட்டு வந்தார்.

ஒரு முறை 'லவணாசுர'னின் கொடிய செயல்களால் தொல்லைப்பட்டு அஞ்சிய ரிஷிகள், அவனைக் கொல்லுமாறு ஸ்ரீராமனிடம் வேண்டினர். ஸ்ரீராமன் அவையினரிடம், ''யார் லவணாசுரனைக் கொல்வீர்கள்? யாரிடம் இந்தப் பொறுப்பை ஒப்படைக்கலாம்?'' என்று கேட்டார். அப்போது பரதன் உடனே எழுந்து, அவனைக் கொல்வதற்குத் தாம் விரும்புவதாகத் தெரிவித்தார். இதைப் பார்த்த சத்ருக்னன் உற்சாகத்துடன் ''அண்ணா! பரதன் எத்தனையோ பல அரிய செயல்கள் புரிந்திருக்கிறார். உங்களுக்காக எவ்வளவோ பெருந்தொல்லைகளை ஏற்றுக்கொண்டு பொறுமையாக இருந்து வந்துள்ளார். தவிர அவர் மூத்தவரும்கூட. சேவகனாக நான் இருக்கும்போது, இந்தக் காரியத்தை அவருக்குக் கொடுக்கக் கூடாது. இதைச் செய்ய எனக்கு உத்தரவு தர வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

இராமபிரான், சத்ருக்னனது வேண்டுகோளுக்கு இணங்கி, ''லவணாசுர வதத்திற்குப்பின் அவனது ராஜ்யத்தை நீயேதான் ஆளவேண்டும். என் பேச்சுக்கு மறுப்பு சொல்லாதே!'' என்று உத்தரவிட்டார். அரசு ஆள்வதைப் பற்றிய பேச்சு,

சத்ருக்னனுக்குத் தவறு என்று பட்டது. அதனால் மிகவும் வருந்தினார். ஆனால், ஸ்ரீராமனுடைய ஆணை என்பதால் ஏற்றுக்கொள்ளும்படி ஆயிற்று. இவ்விதம் தம் வார்த்தைக்குக் கட்டுப்படுத்தி, சத்ருக்னன் விரும்பாவிட்டாலும் அரசை ஆளும் மகிழ்ச்சியைத் தம்பிக்குக் கொடுக்க, ஸ்ரீராமன் போன்ற தமையன்களால்தான் இயலும்!

பின்பொரு சமயம், தாமளித்த உறுதிமொழிக்குக் கட்டுப்படுவதற்காக, தம்பி லட்சுமணனைத் துறக்க நேரிட்டபோது, இராமனுக்குத் தம்பியின் பிரிவினால் ஏற்பட்ட துயரம் தாங்கவொண்ணாததாயிற்று.

இலக்குவனைக் கைவிட்டுவிட்ட பின்னர், இராமன் மிக்க துயரமும் கவலையும் அடைந்து குருமார்கள், அமைச்சர்கள், மக்கட்தலைவர்கள் ஆகியவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்— ''இப்போது, தருமத்தில் பிடிப்புள்ள வீரன் பரதனை அயோத்தியின் மன்னனாகப் பட்டம் சூட்டப் போகிறேன். பிறகு, நான் காட்டுக்குச் செல்வேன். பட்டாபிஷேகத்திற்குத் தேவையான பொருள்களை உடனே கொண்டு வாருங்கள். காலதாமதம் வேண்டாம். இலக்குவன் சென்ற வழியைப் பின்பற்றி, நானும் இப்போதே செல்ல விரும்புகிறேன்.'' [உத்தர காண்டம் 107/1–3]

அதைக் கேட்ட பரதன் ராஜ்யத்தை நிந்தித்து, ''நீங்கள் இல்லாமல் ராஜ்யம் என்ன, எதையுமே நான் விரும்ப மாட்டேன். எனவே, உங்களுடன் வரும்படி எனக்கும் ஆணையிடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார். அதற்குப் பிறகு பரதனின் சொற்படி சத்ருக்னனும் மதுராவிலிருந்து அழைத்து வரப்பட்டார். மனிதனாக ஏற்ற நாடகப் பாத்திரத்தை நடித்து முடித்து, இராமபிரான் தம்முடைய தம்பியருடன் பரமபதத்திற்கு எழுந்தருளிவிட்டார்.

ஸ்ரீராமனுடைய சகோதர பாசத்திற்கு இது ஓர் உதாரணம் மட்டுமே. தம்பிகளுக்காகவே அரசாட்சியை ஏற்றுக் கொள்ளுதல்; தம்பி பரதனுக்குத்தான் அரசு

என்றவுடன் பேரானந்தம் கொண்டு தமது உரிமையை விட்டுக் கொடுத்தல்; எந்த பரதன் காரணமாகத் தமது பட்டாபிஷேகம் தடைப்பட்டதோ, அந்தத் தம்பியின் தாயிடமும், தாம் முன்பு எப்போதும் கொண்டிருந்தது போலவே பக்தி செய்தல்; வஞ்சனையற்ற உள்ளன்போடு பரதனைப் புகழ்தல்; பரதனைச் சந்தேகித்து லட்சுமணன் கோபம் கொண்டபோதுகூட, அவரைச் சமாதானம் செய்தல்; லட்சுமணன் 'சக்தி ஆயுதம்' தாக்கி மயங்கியபோது தாமும் உயிரை விடத் துணிதல்; அவ்வப்போது தம்பியருக்கு அறிவுரைகளை வழங்குதல்; சுயநலம் இல்லாமல் எல்லோரிடமும் சமமாக அன்பு காட்டுதல்; சத்ருக்னனைப் பிடிவாதமாக அரசனாக்குதல்; லட்சுமணனின் பிரிவாற்றாமையால் பரமபதத்திற்கு ஏகுதல் போன்ற உயர்ந்த செயல்களிலிருந்து சகோதர பாசத்திற்கு ஸ்ரீராமபிரான் ஓர் ஆதர்ச பாத்திரம் என்பதை நம்மால் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது!

## நண்பர்களிடம் அன்பு

ஸ்ரீராமன், தம்முடைய நண்பர்களிடம் கொண்டிருந்த அன்பும் ஒப்பற்றதாகும். தம்முடைய நண்பர்களுக்குத் தாம் எவ்வளவு பெரிய உதவி செய்தாலும், அவர் அதைப் பெரிதாகக் கருதியதில்லை. ஆனால், நண்பர்கள் செய்த எந்த ஒரு மிகச்சிறிய உதவியையும்கூட வெகுவாகப் புகழ்ந்து பேசுவார். அதற்கு ஒரு சிறிய எடுத்துக்காட்டு— அயோத்தியில் இராமபிரானது முடிசூட்டு விழா நடந்தேறிய பிறகு, வானரர்களுக்கு விடைகொடுக்கும் நேரம். அப்போது இராமபிரான் முக்கியமான வானரர்களை அழைத்து, அன்பு மலர்ந்த முகத்தோடு மிகவும் அழகிய, இனிய குரலில் பேசுகின்றார்—

''கானகவாசிகளான வானரர்களே! நீங்கள் எனக்கு நண்பர்கள், என்னுடைய உடல், என்னுடைய சகோதரர்கள். நீங்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு சங்கடமான நிலையிலிருந்து

என்னைத் தூக்கி விட்டிருக்கிறீர்கள். ஆழ்ந்த நட்பு கொண்ட உங்களையெல்லாம் படைத்தலைவர்களாகப் பெற்ற சுக்ரீவன் பெறும்பேறு பெற்றவன்.'' [உத்தர காண்டம் 39/23,24]

இப்படியெல்லாம் பல இடங்களில் ஸ்ரீராமன் தம் நண்பர்களிடம் அன்பு உணர்வை வெளியிட்டிருக்கிறார். சுக்ரீவன் போன்ற நண்பர்களும்கூட, தங்கள்மீது ஸ்ரீராமபிரான் கொண்டிருந்த அன்பைப் பற்றிப் பலமுறை புகழ்ந்திருக்கிறார்கள். இராமபிரான் காட்டிய அன்பினாலும், அவ்வன்பு மிளிரும் செய்கைகளாலும் தங்கள் சொத்து, சுகம், மக்கள், போகம் எதையுமே நினைவுகொள்ளாத அளவிற்கு அவர்கள் மனநிறைவு பெற்றிருந்தனர். அவர்கள், ஸ்ரீராமச்சந்திரப் பிரபுவிற்காகத் தம் உயிரையே அர்ப்பணிக்கவும் எப்போதும் முனைப்பாக இருந்தனர். இராமபிரான் மற்றும் அவரது நண்பர்கள் எல்லோருமே பெரும்பேறு பெற்றவர்கள். நட்பு என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்!

## தஞ்சமடைந்தவரை அரவணைக்கும் பண்பு

தம்மைச் சரணடைந்தவர்களிடம் இராமபிரான் காட்டிய அன்பின் வர்ணனைகளை வால்மீகி ராமாயணத்தில் பல இடங்களில் பார்க்க முடியும். ஆனால், இராவணனால் அவமானப்படுத்தப்பட்ட விபீஷணன், இராமபிரானை அடைக்கலம் அடைந்த அந்த நிகழ்ச்சி, பக்தர்களின் உள்ளத்தில் அலாதியான உற்சாகத்தையும் ஆனந்த அலைகளையும் உண்டாக்குவதோடு, நெஞ்சை நெகிழவும் வைக்கிறது.

தருமத்திற்கும் நியாயத்திற்கும் உகந்த கருத்துக்களையே விபீஷணன் சொன்னார். இராவணன், அதை ஏற்க மறுத்தது மட்டுமின்றி, அவரை நிறைந்த அவையில் அவமானப் படுத்தினான். அப்போது விபீஷணன் நம்பிக்கையிழந்து, துயருற்று வெளியேறி, இராமபிரானிடம் அடைக்கலம் தேடி, வான்வழியில் வந்து கொண்டிருக்கும்போது, அவரைப்

பார்த்த சுக்ரீவன், எல்லா வானரர்களையும் எச்சரிக்கையாக இருக்கும்படி உத்தரவிட்டான். அப்போது விபீஷணன், சுக்ரீவனின் அருகே வந்து, ஆகாயவெளியிலேயே நின்று கூவியழைத்தார்— ''நான், பாவியாகிய இராவணனுடைய தம்பி. என் பெயர் விபீஷணன். என்னை இராவணன் அவமானப்படுத்தி விரட்டி விட்டான். நான், இராமபிரானின் பாதங்களில் சரணடைய வந்திருக்கிறேன். அனைத்து உயிர்களுக்கும் அடைக்கலமாக விளங்கும் இராமபிரானிடம் என் வரவைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்று வேண்டினார்.

அதைக் கேட்ட சுக்ரீவன், உடனே இராமபிரானிடம் சென்று, அரக்கர்களின் தீய குணங்களை எடுத்துக் கூறி இராமபிரானை எச்சரித்துவிட்டும், கூடவே இராவணனின் தம்பி விபீஷணன் வந்திருப்பதைத் தெரிவித்தும், ''நீங்கள் நன்கு சோதித்து, முன்பின் யோசித்து, சரி என்று தோன்றுவதைச் செய்யுங்கள்'' என்றும் கேட்டுக் கொண்டான். அவ்விதமே அங்கிருந்த வானரர்களும் தத்தம் கருத்துக்களை வெளியிட்டனர். எல்லோருமே விபீஷணனிடம் ஐயம் கொண்டிருந்தனர். ஆனால், அனுமான் மட்டும் மிகவும் பணிவாக, பலவிதமான வாதங்களை எடுத்துக் கூறி, அவர் உண்மையாகவே அடைக்கலம் தேடி வந்தவர் என்று அறிந்துகொள்ளுமாறு யோசனை கூறினார். 'அடைக்கலம் தருவது சிறந்தது' என்ற தம் கருத்தை அவருக்குத் தெரிவித்தார்.

அவ்விதம் எல்லோருடைய கருத்துக்களையும் கேட்டு விட்டு பகவான் ஸ்ரீராமன்— ''நட்புணர்வுடன் வந்திருக்கும் விபீஷணனை நான் ஒருபோதும் கைவிட மாட்டேன். அவனிடம் எந்தக் குற்றங்குறை இருந்தாலும், அவனுக்கு ஆதரவு தருவது நல்லோர்களால் இகழத்தக்கதன்று'' [யுத்த காண்டம் 18/3] எனக் கூறினார்.

அதைக் கேட்ட சுக்ரீவன் மன அமைதி பெறவில்லை. அதனால் அவன், ஐயத்தையும் அச்சத்தையும் தோற்றுவிக்கும்

பல கருத்துக்களைக் கூறினான். அப்போது ஸ்ரீராமன் சுக்ரீவனுக்கு அறிவுரைகளைக் கூறுகிறார்— ''வானர இனத்தின் அதிபதியே! நான் [அழிப்பது என்று] விருப்பம் கொண்டால், மண்ணுலகிலுள்ள எல்லாப் பைசாசங்களையும், அசுர—யட்ச—அரக்கர்களையும் என் விரல் நுனியால் அழிக்க முடியும். எதிரிகளை மாய்ப்பவனே! கைகளைக் கூப்பிக் கொண்டு, நொந்து துவண்டு அடைக்கலம் கோரிப் பிரார்த்திப்பவனிடம், அவன் எதிரியாகவே இருந்தாலும் சரி, அறநெறிகளின் அடித்தளமாக விளங்கும் கருணையைக் காட்ட வேண்டுமே தவிர, அவனைக் கைவிடலாகாது. ஒருவன், ஒரே ஒரு தடவை என்னைச் சரணடைந்து, 'நான், உன்னுடையவன்' என்று சொல்லி, தன்னைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டானாயின், நான் அவனுக்கு எல்லாப் பிராணிகளிடமிருந்தும் அபயம் கொடுக்கிறேன். இது, என் சங்கல்பம்!

ஆகவே, வானரோத்தமனே! சுக்ரீவா! [மேற்சொன்ன நியாயப்படி] நான், [அவன் பிரார்த்தித்த விநாடியிலேயே] அவனுக்கு அபயம் கொடுத்துவிட்டேன். சுக்ரீவனே! வந்திருப்பவன் விபீஷணனாக இருந்தாலும் சரி, அல்லது அந்த இராவணனாகவே இருந்தாலும் சரி, அவனை [அடைக்கலம் கேட்டு வந்து காத்துக் கொண்டிருப்பவனை] நீயே சென்று அழைத்து வருவாயாக'' [யுத்த காண்டம் 18/22,26,32,33] என்று ஸ்ரீராமன் சுக்ரீவனுக்கு அறிவுரைகளைக் கூறிப் பிறகு உத்தரவிடுகிறார்.

ஸ்ரீராமனே உத்தரவிட்டபின் வேறு என்ன? இராமபிரான் கூறியதைக் கேட்ட எல்லோரும் மெய்மறந்து பரவசமானார்கள். அவரது ஆணைப்படி விபீஷணனை அழைத்து வந்தனர். விபீஷணன், தனது அமைச்சர்களுடன் வந்து ஸ்ரீராமனுடைய பாதங்களில் விழுந்து வணங்கி, ''பகவானே! நான் அனைத்தையும் விட்டுவிட்டுத் தங்களைச் சரணடைந்து விட்டேன். இனி, என் அரசு, சுகம், வாழ்வு ஆகிய எல்லாமே தங்களைச் சார்ந்தவை'' என்று கூறினார். அதைக் கேட்ட

ஸ்ரீராமன், அன்பு நிறைந்த பார்வையாலும், இனிய சொற்களாலும் அவருக்குத் தைரியமூட்டினார். மேலும் லட்சுமணனை அனுப்பி, கடல்நீரைக் கொண்டு வரச்செய்து, அங்கேயே இலங்கையின் அரசனாக அவருக்கு முடிசூட்டினார்.

## செய்ந்நன்றியறிதல்

உண்மையைச் சொல்வதானால், பகவான் ஸ்ரீராமச்சந்திரன் சாட்சாத் பரப்பிரம்ம பரமேசுவரனே. அவருக்கு இருந்த ஆற்றல் அபாரமானது. அவர் எதையும் தாமே செய்ய வல்லவர்; செய்தும் காட்டினார். அப்படிப்பட்டவருக்கு யார் என்ன உதவி செய்ய முடியும்? அப்படியிருந்தும் தம்மை அண்டியிருந்தவர்களின் அன்பைப் பெருக்க, அவர்கள் செய்த மிகச் சிறிய சேவையைக்கூட மிகப்பெரிய அளவில் மதித்து, அவர்களுக்குத் தம் நன்றியைத் தெரிவித்துக் கொள்வார்.

சீதாதேவியைத் தேடிக் கொண்டு ஸ்ரீராமன் வரும் வேளை, வழியில் இராவணனால் அடித்து வீழ்த்தப்பட்ட ஜடாயுவின் நிலையைக் காண்கிறார். அந்தக் கட்டத்தின் விவரம் இதோ— ''இறக்கைகள் அறுக்கப்பட்டு, ரத்தம் தோய்ந்து கிடக்கும் அந்தக் கழுகரசன் ஜடாயுவை மார்போடு அணைத்துக் கொண்ட இராமபிரான், 'என் உயிருக்கு உயிரான மைதிலி எங்கே போனாள்?' என்று சொல்லியவாறே கண்ணீர் பெருக்கித் தரையில் விழுந்தார்'' [ஆரண்ய காண்டம் 67/28].

அதன் பிறகு இராவணனைப் பற்றியும், அவன் சீதையைக் கவர்ந்து சென்றதையும் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ஜடாயுவின் உயிர் பிரிந்துவிட்டது. பிறகு ஸ்ரீராமன், தமது கைகளாலேயே அவருடைய உடலுக்கு எரியூட்டி, மற்ற கிரியைகளையும் செய்தார். எவ்வளவு அற்புதமான நன்றிக்கடன்! இவ்விதம் பல கட்டங்கள் உள்ளன. வானரர்கள், அரசர்கள், ரிஷிகள், தேவதைகள் ஆகியோருடன் பேசும்போதும், அவர் ஆங்காங்கே ''உங்கள்

உதவியாலும் ஆசியாலுமே நான் இராவணனை வெற்றிக் கொள்ள முடிந்தது'' என்று கூறுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

அனுமான், சீதையின் இருப்பிடம் அறிந்து வந்து இராமபிரானைச் சந்தித்து அடிபணிகிறார். அவர் செய்த உதவிக்காக ஸ்ரீராமன் மீண்டும் மீண்டும் அனுமானைப் புகழ்ந்தார்— ''அனுமானே! ஜானகியைப் பற்றி அறிந்து வந்த நீ என்னையும், ரகுவம்சம் முழுவதையும், லட்சுமணனையும் காப்பாற்றிவிட்டாய்! ஆனந்தம் தரும் இச்செயலுக்குக் கைம்மாறாக, நான் உனக்குக் கொடுக்கக்கூடிய பொருள் ஒன்றுமே எனக்குத் தென்படவில்லையே! எனவே, என்னுடைய எல்லாமான இந்த ஆலிங்கனத்தை உனக்குத் தருகிறேன்'' என்றுரைத்து, மகிழ்ச்சியால் உடல் பூரித்த இராமபிரான், அனுமானை மார்புறத் தழுவிக் கொண்டார்.

பட்டாபிஷேகம் முடிந்த பிறகு அனுமானுக்கு விடைகொடுக்கும்போது அவர்தம் பணிகளையும் உதவிகளையும் இராமபிரான் நினைவுகூர்ந்து பேசுகிறார்— ''அனுமானே! நீ செய்த உதவிகளில் ஒரே ஒன்றுக்காகவேகூட நான், என் உயிரைத் தியாகம் செய்வேன். அப்படிச் செய்தாலும் மற்ற உபகாரங்களுக்காக, நான் உன்னிடம் கடன்பட்டவனாகவே இருப்பேன். வானரத் திலகமே! நீ எனக்குச் செய்த உதவிகள் எல்லாம் என்னுள்ளேயே ஜீரணமாகிப் போகட்டும். உன் உதவிகளுக்கு நன்றி செலுத்தும் வகையில் நான் உனக்கு உதவி செய்யும் நிலை ஏற்பட வேண்டாம். [நான், கடன்பட்டவனாகவே இருந்துவிடுகிறேன்.] ஏனென்றால், ஒருவன் செய்த உதவிக்குப் பதில் உதவி செய்யும் வாய்ப்பு, அவனுக்குக் கஷ்டம் வந்தால்தான் ஏற்படும். [உனக்குக் கஷ்டமும் வரவேண்டாம்; கஷ்டம் வந்து, அதைப் போக்குவதற்காக நான் உதவி செய்யவும் வேண்டாம்]'' [உத்தர காண்டம் 40/22,23]. இராமபிரானுடைய நன்றியுணர்வு எவ்வளவு

உயர்ந்த நிலையின் எடுத்துக்காட்டாக விளங்குகிறது என்பது இதிலிருந்து விளங்குகிறது.

## குடிமக்களின் மனத்தைக் கவர்தல்

எல்லாவிதத்திலும் குடிமக்களை மகிழ்ச்சியோடு வைத்திருக்க, இராமபிரானின் குணமும் முன்மாதிரியாக இருந்தது. அவர், குடிமக்களைத் தம் புதல்வர்களைவிட அதிகமான பாசத்துடன் காத்து வந்தார். எப்போதும் அவர்களது நன்மைகளையே குறித்து எண்ணினார். அதனால்தான் அயோத்தி மாநகரில் வாழ்ந்த மக்கள் அவரிடம் அளவுகடந்த அன்பு கொண்டிருந்தனர்.

ஸ்ரீராமன் வனமேகியபோதும், சித்திரகூடத்தில் பரதனுடன் வந்த குடிமக்களைச் சந்தித்தபோதும், மேலும் பரமபதம் செல்லும்போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் வர்ணனைகளைப் படிக்கும்போதும், தொடக்கத்திலிருந்து இறுதிவரை, சிறியவர் முதல் பெரியவர் வரை உள்ள ஆண்கள் மற்றும் பெண்கள் ஆகிய அனைவருக்குமே இராமபிரானிடம் வியத்தகு அன்பு இருந்தது என்று தெரிய வரும். எந்த நிலையிலும் இராமபிரானுக்காக உயிரையும் தியாகம் செய்வதற்கு அவர்கள் முனைப்பாக இருந்தனர். பகவான் ஸ்ரீராமனைப் பிரிதல் என்பது அவர்களுக்குத் தாளவொண்ணாததாக இருந்தது.

ஸ்ரீராமன் வனம் செல்லக் கிளம்பியபோது குடிமக்களில் பெரும்பாலோர் அன்புப்பித்துப் பிடித்து, அவருடன் செல்லத் தொடங்கிவிட்டனர். ஸ்ரீராமன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார், வேண்டிக் கொண்டார். எவ்வளவோ முயன்றும் அவர்களைத் திருப்பி அனுப்ப அவரால் முடியவில்லை. இறுதியில் அவர்கள் உறங்கும் நேரத்தில் பிரிந்து செல்ல நேர்ந்தது. அந்தக் கட்டத்தின் வர்ணனையில் விலங்குகளும் பறவைகளும்கூட அவரிடம் அன்பில் திளைத்தன! என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளுக்கும் ஸ்ரீராமனைப் பிரிந்து

இருக்கும் துயரம் பொறுக்க முடியாததாக இருந்தது. ஸ்ரீராமன், பரமபதம் சென்ற சமயத்தின் வர்ணனை அற்புதமாகச் சொல்லப்பட்டுள்ளது. இதைத் தவிர, எந்த சீதையை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்து, அந்தப் பிரிவாற்றாமையினால் சாதாரண காமுகனைப் போல் பைத்தியமாகி, வருந்திப் புலம்பினாரோ, அதே சீதாதேவி கற்புநெறி தவறாதவர் என்றும், குற்றமற்றவர் என்றும் அறிந்திருந்தும்கூட, குடிமக்கள் மனத்தை மகிழ்விப்பதற்காக அந்தத் தேவியையே துறந்தார். குடிமக்கள் மனதை மகிழ்விக்கும் அவரது உயர்ந்த குணம் இதிலிருந்து தெளிவாகிறது.

## ஸ்ரீராமனின் பெருமை

ஸ்ரீராமச்சந்திரன், சாட்சாத் பூர்ண பிரம்மமான பரமாத்மா பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் அவதாரமே. இந்தக் கருத்து, ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. உலகில் இராவணனின் அட்டூழியங்களும் தொல்லைகளும் மிக அதிகமாகி, தேவர்களும் ரிஷிகளும் பெரும் துயருக்குள்ளானபோது, அவர்கள் பிரம்மாவிடம் சென்று முறையிட்டனர். பிதாமகரான பிரம்மா, தேவர்களுக்குத் தைரியம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பகவான் ஸ்ரீவிஷ்ணு அங்கே தோன்றுகிறார்.

அவருடைய தோற்றத்தை வால்மீகி— ''இவ்வளவு மகத்தான ஒளி பொருந்தியவரும், தேவர்களால் தொழத்தக்கவரும், அகில உலகுக்கும் தலைவருமான பகவான் ஸ்ரீவிஷ்ணு, முகில் மேல் ஏறிய பகலவன் போல் கருடன் மீதமர்ந்து அங்கே வந்தார். அவர் திருமேனியில் பீதாம்பரமும், கைகளில் சங்கு, சக்கரம், கதை முதலிய ஆயுதங்களும், பிரகாசிக்கின்ற தங்கத்தாலான தோள்வளைகள் முதலிய அணிகலன்களும் ஒளியும் அழகும் பெற்றுத் திகழ்ந்தன'' [பால காண்டம் 15/16,17] என்று வர்ணிக்கிறார்.

பிறகு, தேவர்களின் வேண்டுகோளைக் கேட்ட பகவான் ஸ்ரீவிஷ்ணு, தசரத மகாராஜாவிற்குக் குழந்தையாக அவதாரம் செய்ய இசைந்தார். பிறகு, அவர் மறைந்துவிட்டார்.

திருமணம் நடந்தேறியபின் இராமபிரான் மிதிலையிலிருந்து அயோத்திக்குத் திரும்பி வந்துகொண்டிருந்த பொழுது, வழியில் பரசுராமர் எதிரே வந்தார். ஸ்ரீராமன், விஷ்ணுவின் அவதாரம்தானா, இல்லையா? என்று சோதிக்க விரும்பி, தம்மிடமிருந்த பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் வில்லைத் தந்து நாணேற்றும்படி ஸ்ரீராமனிடம் சொன்னார். இராமபிரானும் உடனே தெய்வத்தன்மை பொருந்திய அந்த வில்லை வாங்கி, அதில் அம்பைத் தொடுத்தார். ''இது ஸ்ரீவிஷ்ணுவின் திவ்யமான அம்பு. இதை எதன்மேல் விடட்டும்?'' என்று கேட்டார். அதைக் கண்ட பரசுராமர் துணுக்குற்றார். அவருடைய தேஜஸ் ஸ்ரீராமனிடம் சென்று அவருள் அடங்கிற்று.

''இந்த வில்லில் பாணத்தைப் பூட்டியதிலிருந்தே தாங்கள் தேவோத்தமரும், குறைவில்லாதவரும், மது என்ற அரக்கனை அழித்தவருமான சாட்சாத் ஸ்ரீமகாவிஷ்ணு என்பதைப் புரிந்து கொண்டேன். எதிரிகளை மாய்ப்பவரே! உமக்கு மங்களம் உண்டாகட்டும்'' [பால காண்டம் 76/17] என்று ஸ்ரீராமனைப் புகழ்ந்து கூறி, அவரை வலம் வந்துவிட்டு, பரசுராமர் அங்கிருந்து அகன்றார்.

இராவண வதம் முடிந்தபிறகு, பிரம்மாவுடன் கூட எல்லா தேவர்களும் ஸ்ரீராமச்சந்திரனிடம் வந்தனர். அவர்களுடன் உரையாடும் போது ஸ்ரீராமன், ''என்னை, தசரதனின் மகனான இராமன் என்ற பெயருடைய மனிதன் என்றே நான் நினைத்திருக்கிறேன். நான் யார், எங்கிருந்து வந்தேன்? நீங்களே சொல்லுங்கள்'' என்றார். அதைக் கேட்ட பிரம்மா, ஸ்ரீராமனுடைய பெருமைகள் பற்றிய ரகசியங்கள் அனைத்தையும் தேவர்கள் எல்லோரும் அறியும்படியாகக் கூறினார்.

இதையே வால்மீகி சொல்கிறார் பாருங்கள். எப்படிப்பட்ட கீர்த்தியுடைய ஸ்ரீராமனுக்குத் தன்னலமற்ற சேவைகளைச் செய்து கீர்த்தி பெற்றாய்! என்று லட்சுமணனைப் புகழ்ந்து பேசும் போது, அங்கேயும் ஸ்ரீராமனுடைய பெருமைகளை தசரதர் விவரிக்கிறார்— ''தாங்கள், மகாலட்சுமியை விட்டு என்றும் பிரியாதவரும், சக்கராயுதம் ஏந்தியவரும், எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பவருமான சாட்சாத் நாராயணன். [கடலுக்கு அடியிலிருந்து மேலே பூமியைக் கொண்டு வருவதற்காக] ஒற்றைக் கொம்புடன் தோன்றிய வராகமூர்த்தி, தாங்கள். சென்ற காலங்களிலும் தேவர்களின் பகைவர்களை அழித்தீர்கள், எதிர்காலத்திலும் அழிப்பீர்கள்.

இராகவா! தாங்கள், என்றைக்கும் அழிவில்லாத பரப்பிரும்மம்; சத்தியத்தின் திருவடிவம்; உலகத் தோற்றத்தின் துவக்கத்திலும் மத்தியிலும் இறுதியிலும் இருப்பவர். தாங்கள்தான் எல்லா உலகங்களுக்கும் அறநெறியைக் காட்டுபவர்; நான்குவிதமான புருஷார்த்தங்களையும் ஒரே சமயத்தில் அளிக்கும் நான்கு திருக்கரங்களை உடையவர்.

தாங்கள் 'சார்ங்கம்' என்ற வில்லைக் கையில் தாங்கி இருப்பவர்; புலன்களை அடக்கி ஆள்பவராதலால் ஹ்ருஷீகேசர்; எல்லா உயிர்களுக்குள்ளும் விளங்கும் அந்தர்யாமி; புருஷோத்தமர்; எவராலும் வெல்ல முடியாதவர் [தங்களைச் சரணடைந்தவர்களை அப்போதே காப்பாற்றுகிறவர்]; 'நந்தகம்' என்ற வாளை ஏந்தி உலகத்தைப் பாதுகாக்கும் ஸ்ரீவிஷ்ணு; [அடுத்த யுகத்தில் அவதரிக்கப் போகும்] மகாபலம் பொருந்திய கிருஷ்ணன்.'' [யுத்த காண்டம் 120/13–15]

ஸ்ரீராமனது பெருமைகள் மேலும் மேலும் சொல்லப் படுகிறது. அவ்விடத்தில் தசரத மன்னரும் லட்சுமணனுடன் உரையாடும் போது, இராமபிரானுக்கு அவர் செய்த சேவையின் மகிமையை விவரித்துக் கூறுகிறார்—

''குழந்தாய்! புலன்களால் உணர முடியாததும், அழிவற்றதும், வேதங்களின் மறைபொருளாக விளங்குவதும்,

'தத்' என்னும் மகாவாக்கிய சொல்லால் குறிக்கப்படுவதுமான பரப்பிரும்மம், எதிரிகளை வாட்டும் இராமனாக வந்திருக்கிறது. [நிர்குணப்பிரும்மம், ஸகுணத்துடன் தோன்றியிருக்கிறது.] இந்தத் தத்துவம் தேவர்களால் உபதேசிக்கப்பட்டது.

நீ, விதேக மன்னர் புதல்வியான சீதைக்கும் இராமனுக்கும் பக்தியுடன் சேவை செய்ததால், அறநெறியை முற்றிலும் பின்பற்றியவனாகிவிட்டாய். பார் [உலகம்] முழுவதும் பரவிய புகழையும் அடைந்துவிட்டாய்'' [யுத்த காண்டம் 119/31,32] என்று இராமபிரானுடைய பெருமைகளைக் கூறி, லட்சுமணனைப் புகழ்ந்து பாராட்டுகிறார்.

அதுமட்டுமன்று, பல இடங்களில் பிரம்மா, தேவர்கள், மகரிஷிகள் ஆகிய அனைவருமே ஸ்ரீராமனுடைய அளவற்ற மகிமையைப் பிரபாவத்தை இயன்றளவு திரும்பத் திரும்ப வர்ணித்திருக்கிறார்கள். மனித லீலையை முடித்துக் கொண்டு பரமபதத்திற்கு எழுந்தருளும் கட்டத்திலும்கூட இராமபிரான், 'பூர்ண பிரம்மமான பரமேசுவரனே' என்று தெளிவாக்கப் பட்டுள்ளது. எனவே, வால்மீகி ராமாயணத்தைப் பிரமாண நூலாக மதிக்கும் எவரும், இராமபிரான் 'ஈசுவரனே' என்ற உண்மையை நன்கு அறிவார்கள். இக்கருத்தில் சற்றேனும் ஐயம் கொள்ள வாய்ப்பே இல்லை.

## தோள் வலிமை

பகவான் ஸ்ரீராமனுடைய பராக்கிரமம், பலம், வீரம், சாஸ்திர நிபுணத்துவம் ஆகிய எல்லாவற்றையும் பற்றி முழுமையாகச் சொல்வதென்பது இயலாத ஒன்று. இராமாயணம் முழுவதிலுமே இதன் வர்ணனைதான் நிறைந்துள்ளது. எங்கு வேண்டுமானாலும், போர் பற்றிய பேச்சு வரும் எந்த இடத்தை வேண்டுமானாலும் எடுத்துப் பாருங்கள் தெரியும். விசுவாமித்திரரின் வேள்வி காக்கும் கட்டத்தில் இராமபிரான் உரையாடியவாறே தாடகையையும்

சுபாகுவையும் கொன்றுவிட்டு, மாரீசனை மானவ அஸ்திரத்தைச் செலுத்தி, நூறு யோஜனை தொலைவில் நடுக்கடலில் வீழ்த்திவிட்டார்.

மிதிலையில் மாவீரர்களும் மிகுந்த பலசாலிகளுமான அரசர்களும் பெரிதும் முயன்றுகூட, எந்த வில்லை அசைக்க முடியவில்லையோ, அதை இராமபிரான் எளிதாக முறித்துவிட்டார். ஸ்ரீவிஷ்ணுவின் வில்லில் அம்பைத் தொடுத்து, பரசுராமரின் தேஜஸைக் கவர்ந்தார். பஞ்சவடியில் பதினான்காயிரம் அரக்கர்களை மிகவும் குறுகிய காலத்தில், வேறு எவருடைய உதவியுமின்றிக் கொன்று குவித்தார். மாபெரும் போர்வீரனான வாலியை ஒரே பாணத்தால் கொன்று தீர்த்தார். கடலில் அணை அமைக்கும் முன் வில்லில் அம்பைப் பூட்டியவுடனேயே கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டது. கடலரசன் அஞ்சி ஓடிவந்து சரணடைந்தான். இலங்கைக்குள் சென்று பேரச்சம் விளைவிக்கும் பெரும்போர் செய்து, அரக்கக் கூட்டத்தோடு கும்பகர்ணன், இராவணன் ஆகியோரையும் கொன்று, உலகம் எங்கணும் வெற்றிப் பறை முழங்கச் செய்தார்.

## மன்னிக்கும் குணம்

ரகுநாதன், இவ்வளவு பெரிய பராக்கிரமசாலியாய் இருந்தபோதும், மிகவும் பொறைக்குணம் உடையவராக இருந்தார். தனக்கு யாரேனும் குற்றமிழைத்தாலும், அவர் அதைக் குற்றமாகவே கருதியதில்லை. எங்கேனும் அவர் கோபம் காட்டி போர் புரிந்தார் என்றால், அது தம்மை அண்டியிருந்த நல்லோர்களுக்குச் செய்யப்பட்ட குற்றங்களுக்காகத் தண்டனை அளிக்கவும், தண்டனை பெறும் அக்கொடியோரைக் குற்றமற்றவர்களாக ஆக்கவுமேதான், அவர் அவ்வாறு போர் புரிந்தார். மந்தரை [கூனி] போன்ற ஒரு வேலைக்காரப் பெண் இழைத்த தீங்கைப் பற்றிக்கூட, அவர் எங்கும் வாய் திறந்து பேசியதில்லை.

## முடிவுரை

இராமபிரானுடைய எண்ணற்ற ஆதர்சமான குணங்களை எழுதுகோல் கொண்டு எழுதி வர்ணனை செய்வது என்பது முடியாத ஒரு செயல். ஆதிகவியான வால்மீகியிலிருந்து தொடங்கி, இன்றுவரை புகழ் வாய்ந்த கவிகள் இராமபிரானது சரித்திரத்தை எழுதி, தங்கள் சொல்லாற்றலைப் பயன் உள்ளதாக ஆக்கிக் கொள்ள முயன்றிருக்கிறார்கள். ஆனால், ஸ்ரீராமனுடைய முடிவற்ற நற்குணங்களை வர்ணித்துக் கரைகண்டவர் எவருமே இல்லை. நான் இங்கே எழுதியிருக்கும் சில கருத்துக்கள், வால்மீகி ராமாயணத்தின் அடியொற்றி மிகவும் சுருக்கமாக எழுதப்பட்டவைதாம். இதையும் என் அசட்டுத் துணிச்சல் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால், எனக்கு சம்ஸ்கிருதத்தில் சிறப்பான அறிவு கிடையாது; ஹிந்தி விஷயத்திலும் அப்படியே. எனவே, அறிவாளிகளான வாசகர்கள், என் குறைகளை மன்னிக்குமாறு வேண்டுகிறேன்.

இதைப் படித்தோ, கேட்டோ ஸ்ரீராமனிடம் பக்தி கொண்ட சகோதரர் எவரேனும், ஒரு சிறிய அளவிலாவது பயன் அடைந்தார்களேயானால், அதுவே எனக்குக் கிடைக்கக்கூடிய மிகப்பெரிய பேறு ஆகும். நான், அவர்களுக்கு என்றும் நன்றியுடையவனாக இருப்பேன்.



நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே;
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே;
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே—
இம்மையே இ'ராம' என்று இரண்டு எழுத்தினால்.

— கவிச்சக்கரவர்த்தி கம்பன்

# 2. சீதாதேவியின் ஆதர்ச வாழ்க்கை

## முன்னுரை

உலகத்தில் கற்புநெறியில் சிறந்து விளங்கிய மாதர்களிடையே சீதாதேவியின் நிலை மிக உயர்ந்து விளங்குகிறது. இராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள எல்லாப் பெண்பாத்திரங்களிலும் சீதாதேவியின் ஆதர்ச [உன்னத] வாழ்க்கை மிகச் சிறந்ததாகவும், எல்லாவிதங்களிலும் பிறருக்கு எடுத்துக்காட்டாகவும், எல்லோராலும் பின்பற்றத் தக்கதாகவும் விளங்குகிறது. இதில் சொல்வதற்கு வார்த்தை ஏது? இந்து சமுதாயத்திலுள்ள எல்லா மாதர்களுக்கும் சீதாதேவியின் வாழ்க்கை ஒவ்வொரு சூழ்நிலையிலும் வழிகாட்டியாக விளங்குகிறது. உலகத்தில் அபூர்வமாக ஏதோ ஒரு பெண்ணிடத்தில்தான், சீதாதேவியிடம் இருந்ததைப் போன்ற ஒப்புயர்வற்ற கற்புநெறி, தியாகம், நன்னடத்தை, அச்சமின்மை, அமைதி, பொறுமை, நட்பு, சகிப்புத்தன்மை, அறவழியில் நிற்பது, பணிவு, அடக்கம், சேவை, செயல் திறமை, வீரம் ஆகிய எல்லாக் குணங்களும் ஒருங்கே காண முடியும். உலக சரித்திரத்தில் சீதாதேவியின் புனிதமான வாழ்க்கைக்கும், இணையற்ற அவருடைய பதிபக்திக்கும் மற்றொரு எடுத்துக்காட்டு கிடைப்பது கடினமே. தொடக்கத்திலிருந்து இறுதிவரை சீதையைப் பற்றிய செய்திகள் புனிதமானவையாகவும் ஆதர்சமாகவும் [எடுத்துக்காட்டாகவும்] இருக்கின்றன. நம்முடைய தாய்மார்களுக்கும் மருமகள்களுக்கும் சகோதரிகளுக்கும் புதல்விகளுக்கும் சிறந்த படிப்பினையைத் தராத சம்பவம் எதுவும் அவருடைய வாழ்க்கையில் இல்லை. உலகத்தில் இன்று வரை எவ்வளவு பெண்மணிகள் தோன்றியுள்ளனரோ, அவர்களில் சீதையே மிகச்சிறந்த 'கற்புக்கரசி' என்று கூறுவது மிகையாகாது.

மாயமானைப் பிடிப்பதற்காக ஸ்ரீராமன் சென்றபின், அவரது குரலைப் போன்று தன் குரலை மாற்றிக் கொண்டு,

'ஹா, சீதே! ஹா, லட்சுமணா!' என்ற மாரீசனின் சோகம் கலந்த சொற்களைக் கேட்டு சீதாதேவி பயந்து போனார். அச்சமயம் அவர், லட்சுமணனைக் குறித்துக் கடுமையான சொற்களை உதிர்த்தார். இதில்கூட சீதையின் ஆதர்சமான பதிபக்திதான் நிறைந்து விளங்குகிறது. லட்சுமணனுக்கு சீதாதேவியின் மீது தாயன்புக்கு நிகரான புனிதமான பக்தி இருந்ததைக் காணும்போது, சீதையின் இச்செயல் தகாததாகத் தெரிகிறது. அதற்குப் பின்னர் சீதையே இது குறித்து மிகவும் வருந்தினார். தன்னுடைய கணவன் மிகப்பெரிய சங்கடத்தில் இருப்பதாகச் சந்தேகம் ஏற்பட்டாலும், அவருக்கு உதவி செய்வதற்காகக் கடைசி மூச்சு வரை செயல்படுவது பெண்களின் கடமையாகும். ஆனால், அதற்காகத் தங்களுடைய புனிதமான தொண்டர்களையோ, குடும்பத்தினரையோ, பழித்துப் பேசுவதும், அவர்களிடம் கடுஞ்சொற்களைக் கூறுவதும் தகாத செயல்களாகும். இப்படிப்பினை மாதருக்கு மிகவும் தேவையான ஒன்று.

சீதை, தமது பிறந்த வீட்டில்கூட எல்லோருடனும் மிகுந்த அன்புடன் பழகி வந்தார் என்பதையும், சிறியவர்களும் பெரியவர்களுமான எல்லா ஆண்களும் பெண்களும் அவரை உளமாற நேசித்தனர் என்பதையும், பின்னால் கூறப்படுகிற வர்ணனைகளிலிருந்து யூகித்துத் தெரிந்து கொள்ளலாம். ஆனால், வால்மீகி ராமாயணத்தில் சீதையின் இளமைக்கால வர்ணனை இல்லை. பிறந்த வீட்டில் தாய்-தந்தையரிடமிருந்து அவருக்கு மிகுந்த பயனுள்ள படிப்பினை கிடைத்துவிட்டது. அங்கேயே நன்னடத்தை, அடக்கம் ஆகிய இவற்றில் பயிற்சி பெற்றிருந்தார். அவ்வாறே இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதி, ஒவ்வொரு சூழ்நிலையிலும் மகிழ்ச்சியுடன் இருக்கும் வலிமையைப் பெற்றிருந்தார். வனம் ஏகும்போது சீதை கூறிய சொற்களாலேயே இவ்விஷயங்கள் தெரிய வருகின்றன. இவ்விஷயம் பகவதியினுடைய லீலை என்ற நோக்கில் சொல்லப்படுகிறது. சீதாதேவி சாட்சாத் ஜகதீசுவரிதானே!

## சேவை செய்வதற்கான அன்புப் பிடிவாதம்

ஸ்ரீராமன், தான் காட்டிற்குப் புறப்படும்போது, சீதையைச் சந்திப்பதற்காக அரண்மனைக்குள் நுழைந்தார். அப்போது திடீரென்று வனத்திற்குப் போக வேண்டிய நிலைமையைப் பற்றிக் கூறினார். அதுசமயம் தன் கடமை எதுவென்று சீதை விரைவிலேயே தீர்மானித்துவிட்டார். அவர் சொல்கிறார்—

''இராகவா! தாங்கள் இப்போதே காட்டிற்குப் புறப்பட்டு விட்டீர்கள் என்றால், நான் தங்களுக்கு முன்பாக [பாதையிலுள்ள] புற்களையும் முட்களையும் [மிதித்து அகற்றி] மென்மைப்படுத்திக் கொண்டு போவேன்.

மாபெரும் மாளிகையின் உப்பரிகையில் [காற்று வாங்கிக் கொண்டு] இருப்பது, விமானங்களில் சஞ்சரிப்பது அல்லது அணிமா முதலிய சித்திகளைப் பெற்று ஆகாயவெளியில் பறந்து செல்வது போன்ற அரிய—பெரிய வாழ்க்கையைக் காட்டிலும், எவ்விதமான சூழ்நிலையிலும் ஒரு பெண்ணுக்குத் தனது கணவருடைய திருவடி நிழலில் இருப்பதே மிகப் பெருமை தருவதாகும்.

என்னுடைய தந்தையின் அரண்மனையில் சுகமாக இருந்ததைப் போலவே, காட்டிலிருக்கும் போதும் மூன்றுலக போகங்களைப் பற்றிச் சிந்திக்காமல், பதிவிரதா தருமத்தை நினைத்துக் கொண்டு, தங்களுக்குப் பணிவிடை செய்வதிலேயே ஈடுபட்டிருப்பேன்.

மாவீரரே! நியமங்களைக் கைக்கொண்டு புலன்களை வசத்தில் வைத்து, ஒழிவில்லாமல் தங்களுக்குச் சேவை செய்து கொண்டு, [பல்வகை மலர்கள் மற்றும் கனிகளின்] மனங்கவரும் மணத்தைப் பரப்பும் காட்டுப் பிரதேசங்களில் தங்களுடன் ஆனந்தமாக உலவி வருவேன்.

தங்களைத் தவிர வேறு எதையும் மனத்தால் நினைக்காதவளும், தங்களுக்கு அனுகூலமாகவே எப்போதும் சிந்திப்பவளும், தங்களிடமிருந்து பிரிவு ஏற்பட்டால் 'உடனே உயிரை விடுவது' என்று நிச்சயித்திருப்பவளுமான என்னை,

என் பிரார்த்தனையை உள்ளமுவந்து அங்கீகரித்து, தங்களுடனே அழைத்துச் செல்லுங்கள். நான் தங்களுடன் இருப்பதனால் தங்களுக்கு எந்தச் சுமையும் ஏற்படாது.'' [அயோத்தியா காண்டம் 27/5,6,8,11,12,22]

அச்சமயத்தில் அன்பும் தருமமும் நிறைந்த இன்னும் பல சொற்களை, இவ்விதமாகவே சீதை சொல்கிறார். சீதை, காட்டில் ஏற்படக்கூடிய பலவிதமான துன்பங்களைப் பற்றி இராமபிரானுடைய வாய்மொழியாகக் கேட்டும்கூட, தம் தீர்மானத்தில் உறுதியாக அசைந்து கொடுக்காமல் நின்றார்; கணவனுக்குச் சேவை செய்யும் பொருட்டு, உலக சுகங்களையும் வைபவங்களையும் எவ்வளவு துச்சமாக மதித்தார்; கணவனுடைய பாதங்களில் அவருக்கு எவ்வளவு ஆழ்ந்த அன்பு இருந்தது; அவர் எவ்விதமாக உடலாலும் மனத்தாலும் கணவனுக்குச் சேவை செய்ய விரும்பினார்; இவ்விஷயங்கள் எல்லாம், அந்தச் சந்தர்ப்பத்தைப் படிப்பதன் மூலம் புரிந்து கொள்ளலாம். ஸ்ரீராமனுடன் காட்டிற்குச் செல்வதற்கான ஆணையைப் பெறுவதற்காக, பிடிவாதம் செய்து, தன்னால் இயன்ற முயற்சிகளையெல்லாம் செய்தார். ஸாமம், தானம், நீதி முதலிய எல்லா உபாயங்களையும் கையாண்டார்.

இறுதியில் சீதாதேவியின் அன்பு வென்றது. சீதையைத் தம்முடன் காட்டிற்கு அழைத்துச் செல்ல, ஸ்ரீராமன் மனமுவந்து இசைந்தார். தமது சுகத்திற்காக அல்லாமல், தம்முடைய கணவனுக்குச் சேவை செய்யும் பொருட்டு, பிடிவாதம் செய்து, கணவனது உறுதியைக் குலைக்கும் உரிமை பெண்ணுக்கு உண்டு என்பது இதன் மூலம் நிரூபணமாகிறது. கணவனது சுகத்தின் பொருட்டு இத்தகைய பிடிவாதத்தை அன்போடு மேற்கொள்வது தவறாகாது. அன்போடு கூடிய சீதையின் இப்பிடிவாதத்தை அனைவரும் பாராட்டுகிறார்கள்; ஒருவரும் இதைப் பழித்துக் கூறவில்லை. சீதாப்பிராட்டி, தன் கணவனிடம் கொண்ட

அன்பு காரணமாகவும், கணவனுக்குச் சேவை செய்யும் நோக்கத்துடனும், எல்லாச் சுகங்களையும் முழுவதுமாகத் துறந்து காட்டிற்குச் சென்றாரேயொழிய, ஏதோ 'புலனின்பம் துய்த்தல்' என்ற தன்னலம் காரணமாகச் செல்லவில்லை.

ஆகையால், பதிவிரதா தருமம் என்ற நோக்கின்படி சீதை நடந்துகொண்டவிதம் பிறருக்கு வழிகாட்டுவதாக அமைகிறது. சகதர்மிணியான மனைவியின் இஷ்டமில்லாமல், அவளை விடுத்து கணவன் வேறு இடத்திற்குச் செல்வது முறையாகாது. கணவன், தன் மனைவியின் நலனை உத்தேசித்து, அவள் தன்னுடன் இருப்பதை விரும்பா விட்டாலும், துன்பம் நேரும்போதும் ஆபத்துகள் நேரும்போதும் கணவனுக்குச் சேவை செய்வதற்காகவும், அவனுக்கு ஆறுதல் அளிப்பதற்காகவும், மனைவி தன் கணவனுடன் இருக்க வேண்டும். இந்த விஷயத்தை அவசியமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். எப்போதும், எல்லோருக்கும் ஒரே விதமான ஏற்பாடு பொருந்தாது. சமயத்தையும் சூழ்நிலையையும் பார்த்துச் செயல்புரிவது அவசியம்.

## சகிப்புத் தன்மை

காட்டில் வாழ்ந்தபோது சீதை மிகப்பெரிய துன்பங்களையும் மகிழ்ச்சியுடன் பொறுத்துக் கொள்ளவே செய்தார். இதைத் தவிர, அவருடைய சகிப்புத்தன்மைக்கு வேறோர் உதாரணமும் உண்டு. காட்டிற்குச் செல்லும்போது, சீதை வனவாசம் செய்வதற்கேற்ற ஆடைகளைக் கைகேயி தந்தார். அச்சமயம், அந்தப்புரத்தில் இருந்த மற்ற மாதர்களுக்கும், ராஜா தசரதருக்கும் ஏற்பட்ட வேதனையை எவ்வாறு சொல்வது? வசிஷ்டர் போன்ற தபோநிஷ்டர்களான முனிவர்களுக்கும்கூட மனத்தில் கலக்கம் ஏற்பட்டது. அவர், கைகேயியை அதட்டினார்; மரவுரியை அணிய வேண்டாமென்று சீதையைத் தடுத்தார்.

இத்தகைய சூழ்நிலையிலும் சீதாதேவியின் மனத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. கைகேயியைக் குறித்து, வசிஷ்டர்

கூறிய விமரிசனத்தைப் பேசாமல் கேட்டுக் கொண்டு இருந்தாள். அதுமட்டுமின்றி, மாமியாரின் கட்டளைப்படி சீதை, அவ்வாடைகளை அணிந்து கொள்ளவும் செய்தார். 'வசிஷ்டருடைய கட்டளை இருப்பினும்கூட, தனது தீர்மானத்தை மாற்றிக் கொள்ளவில்லை.'

''ஒப்புயர்வில்லா தவ வலிமை உடையவரும், அரசவை குலகுருவும், ரிஷிகளில் சிறந்தவருமான வசிஷ்டர் இவ்வாறு கூறியதைக் கேட்ட பின்னரும்கூட, தன் அன்புக்குரிய கணவரை அடியொற்றியே நடக்க விரும்பிய சீதாதேவி, 'மரவுரியைக் கட்டிக் கொள்ள வேண்டும்' என்ற தம் எண்ணத்தை மாற்றிக் கொள்ளவில்லை'' [அயோத்தியா காண்டம் 37/37] என்று இந்தச் சந்தர்ப்பத்தில் மகரிஷி வால்மீகி கூறுகிறார்.

மாமியாரோ அல்லது அவருக்குச் சமமான அந்தஸ்தில் உள்ள வயதான மாதர்களோ கடுமையான சொற்களைக் கூறினாலும், மருமகளின் நன்மைக்கு எதிராக நடந்து கொண்டாலும், அவற்றை மகிழ்ச்சியுடன் பொறுத்துக் கொள்ள வேண்டும். ஆபத்து நேரும் சமயம், கணவனுடன் எங்கேனும் செல்ல நேரிட்டால், அவரைப் போலவே எளிமையாக வாழவேண்டும். ஆடை–அலங்காரங்களில் உள்ள மோகத்தில் சிக்கிக் கொள்ளக்கூடாது என்ற படிப்பினை மாதருக்குக் கிடைக்கிறது.

## காட்டில் சீதை, கணவனுக்குச் செய்த பணிவிடை

கணவனுக்குப் பணிவிடை செய்வதில் எப்பொழுதுமே மகிழ்ச்சி கொள்ளும் இயல்புள்ள சீதை காட்டிற்குச் சென்று, உலகியல் இன்பங்களையெல்லாம் மறந்துவிடுகிறார். அரியணை, மாளிகை, தோட்டம், செல்வம், பணியாளர்கள், பணிப்பெண்கள் – இவற்றைப் பற்றிய நினைவே ஏற்படவில்லை. பகவான் ஸ்ரீராமனுக்குப் பணிவிடை

செய்வதிலேயே எப்பொழுதும் ஈடுபட்டிருந்தார். அவரது கட்டளைக்கிணங்க, காட்டில் வசித்த முனிவர்களைத் தகுந்தவிதத்தில் அர்க்யம், பாத்யம் முதலியவற்றால் உபசரித்து வந்தார். ஜனசஞ்சாரமற்ற காட்டில், வீட்டில் இருந்ததைப் போலவே அச்சமின்றி வசித்து வந்தார். அவரது மனம் எப்போதுமே இராமபிரானிடத்தில் ஈடுபட்டிருந்தது. காட்டிலும் ஸ்ரீராமனுடன் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தார்.

சித்திரகூடத்திலிருந்து பஞ்சவடிக்குச் செல்லும்போது அத்ரி முனிவருடைய ஆசிரமத்தில் தங்கினார். அப்போது அனுசூயாதேவி, சீதைக்குக் கற்பு நெறி பற்றிய அழகான ஓர் உபதேசத்தைச் செய்தார். அதைக் கேட்ட சீதை— "தாயே! எனது கணவரான இவர், நடத்தை தவறியவராக இருப்பாரேயானாலும்கூட, மனத்தில் எவ்விதச் சஞ்சலமுமின்றி, நான் அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருப்பேன். ஆனால் இவரோ, எல்லோராலும் புகழத்தக்க குணங்கள் உடையவர்; கருணைமிக்கவர்; புலன்களை வென்றவர்; நிலையான அன்பு வைத்திருப்பவர்; தருமாத்மா; ஒரு தாயைப் போலும், தந்தையைப் போலும் மனப்பூர்வமான நேசமுள்ளவர். இப்படிப்பட்ட உத்தமபுருஷருக்கு நான் பணிவிடை செய்வதிலும், அவரை அனுசரித்துப் போவதிலும் ஆச்சரியம் என்ன?" [அயோத்தியா காண்டம் 118/3,4] என்று பணிவுடன் மொழிகிறார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் இதைத் தவிர, ஸ்ரீராமனுடைய வலிமையையும் குணங்களையும் பற்றி விவரித்துவிட்டு, மேலும், "கணவனுடன் கூட நான் ஜனநடமாட்டமற்ற காட்டிற்குப் புறப்பட்டபோது, அன்னை கௌசல்யாதேவி, எனக்குச் செய்த உபதேசம் என் இதயத்தில், அப்படியே பதிந்துள்ளது. அதற்கு முன்னர் எனது திருமணம் நிகழ்ந்தபோது, அக்னிக்கு அருகில் என் அன்னையார் எனக்குப் புகட்டிய பாடமும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. 'கணவனே பெண்ணுக்கு ஆசான்' என்றும், 'அவரே அனைத்தும்' என்றும் நான் நன்றாகவே

அறிந்துள்ளேன். ஒரு பெண்ணுக்கு, கணவனுக்குப் பணிவிடை செய்வதைக் காட்டிலும் சிறந்த தவம் வேறு இல்லை'' என்றார். இன்னும் பலப்பல.

கணவனுக்குப் பணிவிடை செய்வதை சீதை எவ்வளவு உயர்வாகக் கருதினார் என்பது இந்தச் சந்தர்ப்பத்திலிருந்து நன்கு புலனாகிறது. தாய்—தந்தையரது அறிவுரைக்கும், மாமியாரது அறிவுரைக்கும் சீதை எவ்வளவு மதிப்பு அளிக்கிறார் என்பதும் புலனாகின்றன.

## அச்சமின்மை

சீதாதேவியின் ஆற்றலுக்கும் அச்சமின்மைக்கும் உள்ள உதாரணங்களைக் கவனியுங்கள். ஒப்பற்ற வலிமை கொண்ட எந்த இராவணனின் பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே தேவர்களும் அஞ்சினரோ, அந்த இராவணனிடம் சிறிதும் அச்சமின்றி சீதை எவ்வாறு பதில் கூறுகிறார், பாருங்கள்!

இராவணனால் சிறை வைக்கப்பட்டிருந்த போதிலும், மிகுந்த சினங்கொண்டு அவனை அவமதித்துக் கூறுகிறார்— ''பெண் சிங்கம் போன்றவளும், அடையவே முடியாதவளுமான என்னை, குள்ளநரியாகிய நீ அடைய விரும்புகிறாய்! சூரியனுடைய கதிர்களை [பிரபையை] எவ்வாறு எவராலும் தொட முடியாதோ, அவ்வாறே நானும் உன்னால் தொடக்கூட முடியாதவள்.

சூரிய—சந்திரர்களாகிய இருவரையும் இருகைகளாலும் பெயர்த்தெடுக்க விரும்புகிறாய்! இராமனுக்குப் பிரியமான மனைவியைப் பலாத்காரமாக எடுத்துச் செல்ல விரும்புகிறாய்! கொழுந்துவிட்டெரியும் நெருப்பைத் துணியில் வைத்து எடுத்துக் கொண்டு வர விரும்புகிறாய்! மகாபதிவிரதையான இராமபத்தினியைத் தூக்கிச் செல்ல விரும்புகிறாய்! உனக்கு இவ்வளவு துணிச்சலா? இராமனுக்கு மட்டுமே ஏற்றவளான அவருடைய பத்தினியை நீ அடைய விரும்புவது, கூரான முனையுள்ள சூலங்களின்

மேல் நடக்க விரும்புவதைப் போல் இருக்கிறது.'' [ஆரண்ய காண்டம் 47/35,40–42]

இதைத் தவிர அவர், 'சிங்கத்திற்கும் நரிக்குமிடையேயுள்ள வேறுபாடு போன்றும், கடலுக்கும் குட்டைக்கும் உள்ள வேறுபாடு போன்றும், அமுதத்திற்கும் நஞ்சிற்கும் உள்ள வேறுபாடு போன்றும், தங்கத்திற்கும் இரும்பிற்கும் உள்ள வேறுபாடு போன்றும், சந்தனத்திற்கும் சகதிக்கும் உள்ள வேறுபாடு போன்றும், யானைக்கும் பூனைக்கும் உள்ள வேறுபாடு போன்றும், கருடனுக்கும் காகத்திற்கும் உள்ள வேறுபாடு போன்றுமாகும் ஸ்ரீராமனுக்கும் உனக்கும் உள்ள வேறுபாடு' என்று மேலும் பலபடியாக இராவணனுக்கு அச்சமின்றி அறிவுரை கூறுகிறார்.

தன்னுடைய கற்புநெறியின் பலத்திலும், பரமாத்மாவின் பலத்திலும் ஊன்றி நின்றுகொண்டு, எந்தச் சந்தர்ப்பத்திலும் பெண்ணானவள் பயப்படக்கூடாது. அநியாயத்தை அச்சமின்றி எதிர்க்க வேண்டும். பரமாத்மா மீது பரிபூரண நம்பிக்கை வைத்தால், அவர் நிச்சயமாக நமக்கு உதவி செய்வார் என்ற இப் படிப்பினையைப் பெண்டிர் பெறவேண்டும்.

## தருமத்தைக் கடைப்பிடிப்பதில் உறுதி

மனத்தைத் தூண்டும் எந்த ஆசையோ, பயமோ அல்லது மிகப்பெரிய ஆபத்தோ நேரிட்டாலும், தருமத்தைத் துறக்கக் கூடாது. சீதையின் வாழ்க்கையிலிருந்து இப் படிப்பினையும் நமக்குக் கிடைக்கிறது. இலங்கையில் அசோகவனத்தில் இருந்த சீதாதேவியின் தருமத்தைக் குலைப்பதற்காகக் கொடியவனான இராவணன் செய்த முயற்சிகள் கொஞ்ச நஞ்சமல்ல. தன்னுடைய மனைவிகளுடன்கூடத் தானே அசோகவனத்திற்குச் சென்று, தனது உயர்ந்த செல்வச் சிறப்பை அவரிடம் காட்டினான். அவருடைய மன உறுதியிலிருந்து பிறழச் செய்ய பலவிதமான ஆசைகளைக் காட்டினான். அடிக்கடி கெஞ்சியும் கேட்டுக் கொண்டான். சீதை, அப்போதும் கூடத் தம்முடைய தருமத்தில் உறுதியாக

ஊன்றி நின்றுகொண்டு, நீதியோடு கூடிய சொற்களால், கொடிய இராவணனை அவமதித்தவண்ணமே இருந்தார்.

இராவணன் கடும்சொற்களால் இராமனை நிந்தித்தான். பலவிதங்களில் சீதையை அச்சுறுத்தினான். மாயையால் உருவாக்கப்பட்ட இராமனுடைய தலையை, சீதையின் முன்பு வைத்தான். அப்போதுகூட மிகுந்த துயரமடைந்து உயிர்விடத் துணிந்தார். ஆனால், தருமத்திலிருந்து நழுவும் எண்ணம், அவரது மனத்தில் ஒருபோதும் கனவிலும்கூட உதிக்கவில்லை. அவரது மனம் இரவும் பகலும் இராமபிரானுடைய சரணங்களிலேயே ஈடுபாடு கொண்டிருந்தது. அரக்கிகளும் சீதையை அச்சுறுத்தியும், அவருக்கு ஆசை காட்டியும், மிகவும் தொல்லை கொடுத்தார்கள். ஆனால் சீதை, சீதையாகவே நிலையாக நின்றார். தருமத்தைத் துறக்கும் விஷயம் இருக்கட்டும், ஆபத்திலிருந்து தப்புவதற்காகக்கூட, வஞ்சனையிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக்கூட, தம் மீது மாசு ஏற்படுவதற்கு இடம் கொடுக்கவில்லை. தருமம் பரிபூர்ணமாக நிறைந்து, மாசு ஏதுமற்ற அவரது மனத்தில் ஒருபோதும் தீய எண்ண அலைகள் எழுந்ததில்லை.

சுந்தர காண்டத்தில் இந்தக் கட்டம் கவனத்துடன் படிக்கத்தக்கது. அங்கே அசோகவனத்தில் வசித்தபோது சீதை எவ்விதம் வாழ்ந்து வந்தார்? என்பதை விளக்கும் வர்ணனை இதயத்தைத் தொடும்படி உள்ளது. புலம்பிக் கொண்டு சீதை சொல்கிறார்—

''மகாரதரான ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்து, இந்த அரக்கிகளின் மத்தியில் வாழ்ந்து வரும் எனக்கு உயிரை வைத்துக் கொள்வதனாலோ, பணத்தினாலோ, அணிகலன்களினாலோ எவ்விதப் பயனும் இல்லை. நான் நன்னடத்தையற்றவள், கற்புடையவளில்லை. ஐயோ, அவரை விட்டுப் பிரிந்து, இந்தப் பாவமயமான வாழ்வை வாழ்ந்து கொண்டிருக்கிறேனே, நான் அழிந்திருக்க வேண்டாமா? இந்த அரக்கன் இராவணனை, என் இடது காலால்கூடத்

தொட மாட்டேன்; பின்னர், அவனை விரும்புவது என்பது எங்ஙனம்? [சுந்தர காண்டம் 26/5,7,10]'' இன்னும் பலப்பல.

கணவனை விட்டுப் பிரிந்த காலத்தில், எத்துணை கொடிய ஆபத்து ஏற்பட்டாலும், கணவனுடைய பாதங்களையே தியானிக்க வேண்டும். பகவானுடைய பலத்திலும், தருமத்தினுடைய பலத்திலும் நம்பிக்கை கொண்டு, வீரத்தோடும் தீரத்தோடும் துணிவோடும் நிற்க வேண்டும். தன்னுடைய தருமத்தைக் காப்பாற்றும் பொருட்டு, உயிர் விடவும் தயாராக இருக்க வேண்டும் என்ற படிப்பினையை, இதன்வழி பெண்கள் பெற வேண்டும்.

## சீதையின் விழிப்புணர்வு

சீதையிடமிருந்த விழிப்புணர்வும் பின்பற்றத்தக்கது. அனுமான் அசோகவனத்திற்கு வந்தபோது, சீதை, தம் அறிவுக் கூர்மையால் பலவிதங்களிலும் அவரைப் பரீட்சை செய்கிறார். 'அனுமான், ஸ்ரீராமனுடைய தூதர்; தம்மைத் தேடியே அங்கு வந்துள்ளார்' என்பதில் தமக்கு நன்கு நம்பிக்கை ஏற்படும்வரை, சீதை மனம் திறந்து எதையும் பேசவில்லை. அனுமான், சீதாதேவியிடம் பல விஷயங்களைப் பேசிய பின்னர், அதாவது, ''நம்பிக்கையூட்டும் பல காரணங்களைக் கூறியும், ஸ்ரீராமன், லட்சுமணன் – இவர்களுடைய அங்க அடையாளங்களை வர்ணித்துக் கூறியும், அனுமான் சோகத்தினால் வலுவிழந்த சீதைக்கு நம்பிக்கை ஏற்படச் செய்தார். சீதை, அப்போதுதான் அனுமானை ஸ்ரீராமனுடைய தூதன் என்று புரிந்துகொண்டார்'' [சுந்தர காண்டம் 35/84] என்பதாக மகரிஷி வால்மீகி கூறுகிறார்.

இதற்குப் பிறகு, ஸ்ரீராமனது பெயர் பொறித்த கணையாழியைக் கொடுத்து, அவருக்கு மேலும் நம்பிக்கை ஊட்டினார். அப்போதுதான் சீதை தம்முடன் பேசும்படி அனுமானுக்கு உத்தரவிட்டார்— ''வானரோத்தமனே! ஆத்மஞானியான ஸ்ரீராமனால் அனுப்பப்பட்டவனாய்

இருந்தால், நீ என்னுடன் பேசத்தக்கவன். [நீ, என்னுடன் பேசத் தகுதி உள்ளவனே.] [சுந்தர காண்டம் 36/10]"

## அன்பு

இராமபிரானிடத்தில் சீதைக்கு அசாதாரணமான அன்பு இருந்தது. அனுமான் மூலமாக ஸ்ரீராமச்சந்திரனது தூதுச் செய்தி கிடைத்தவுடன், அவர் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. பேசத் தொடங்கிய உடனேயே சீதை, தம்முடைய பதியின் க்ஷேமத்தையும், கொழுந்தனுடைய நலத்தையும் விசாரிக்கிறார். தாமே அவருடைய குணநலன்களைத் திரும்பத் திரும்ப வர்ணிக்கிறார். பேசும்பொழுதே உணர்ச்சி வசப்பட்டு அழத் தொடங்குகிறார்.

சீதையின் கண்ணெதிரே இன்னும் அனுமான் தோன்றவில்லை; ஆனால், அவர்தம் வாய்மொழியாகவே ஸ்ரீராமனது வாழ்க்கை வரலாறு வர்ணிக்கப்பட்டபோது, பலவிதமான கற்பனைகளைச் செய்து கொண்டு சீதை, தமது நிலைமையைத் தாமே இவ்வாறு கூறுகிறார்— "இராமா! இராமா! என்று மனத்திற்குள் எப்போதும் ஸ்ரீராமனையே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்; சொற்களால் அவரையே வர்ணித்துக் கொண்டிருக்கிறேன். அதற்கேற்றாற்போலவே அவர் சம்பந்தமான செய்திகளே என் காதில் விழுகின்றன. அத்தகைய சம்பவத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய எல்லா எண்ணங்களும் அவரிடத்திலேயே ஒன்றிவிட்டன. 'அவரை அடைந்துவிடுவோம்' என்ற நினைப்பினால் வாடி, வருந்தி எப்போதும் அவரையே நினைந்துகொண்டு இருக்கிறேன். [சுந்தர காண்டம் 32/11,12]"

இராவணன், சீதையைக் கவர்ந்து சென்றதிலிருந்து, ஸ்ரீராமன் இலங்கையை வெற்றிகொண்ட சமயம் வரையிலும், சீதாதேவியின் சொற்களிலிருந்து, அவருக்கு ஸ்ரீராமனிடம் எத்தனை அன்பு நிறைந்திருந்தது என்பதும், தனக்கு மிகவும் பிரியமான ஸ்ரீராமனிடம் சென்றடைய, அவரது

இதயத்தில் எவ்வளவு ஆர்வம் இருந்தது என்பதும் தெரிய வருகின்றன. அந்தக் கட்டத்தைப் படிக்கப் படிக்க, கடின சித்தம் கொண்ட மனிதனுக்கும்கூட அழுகை வந்துவிடும்; அவ்வாறெனில், இளகிய உள்ளம் கொண்டவர்களைப் பற்றிக் கேட்பானேன்! ஸ்ரீராமன், சீதாதேவியின் அன்பைப் பற்றி அடிக்கடி புகழ்ந்து பேசினார். போகத்தில் ஈடுபாடுள்ள சாதாரண மனிதர்களைப் போலவே, ஸ்ரீராமனும் புலம்பிப் புலம்பி, சீதையிடம் தமக்கிருந்த மிகுந்த அன்பை வெளிப்படுத்தியிருக்கிறார். சீதையைப் பிரிந்தபோது புலம்பிக் கொண்டே, முனிகுமாரர்கள், சூரியன், காற்று, விலங்குகள், பறவைகள், கொடிகள், மரங்கள் முதலியவற்றிடம் கூட சீதையிருக்கும் இடத்தைக் கேட்டுக் கொண்டே அலைகிறார்.

இதிலிருந்து ஸ்ரீராமன் காமம் மிகுந்தவர் என்று அனுமானம் செய்யக்கூடாது. காரணம் இதுதான். சீதாதேவிக்கு ஸ்ரீராமனிடத்தில் ஆழ்ந்த அன்பு இருந்ததால், அவர் ஸ்ரீராமனைப் பிரிந்து மிகுந்த துயரமடைந்தார். அதனால், ஆசைகளுக்கப்பாற்பட்ட ஸ்ரீராமனும்கூட, அவ்வாறே நடந்து கொள்ள நேர்ந்தது. பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் இந்த விரதத்தை மேற்கொண்டிருக்கிறார்—

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே
தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ॥
(ஸ்ரீமத் பகவத்கீதை 4/11)

''எந்த பக்தர்கள் என்னை எவ்விதம் வழிபடுகிறார்களோ, நானும் அவர்களை அதற்கேற்பவே அணுகுகிறேன் [அருள்புரிகிறேன்].''

ஆகையால், தான் பிரிவாற்றாமையினால் வருந்தும் சாதாரண காமுகன் போன்று லீலை புரிந்து, மேலே சொல்லப்பட்ட சித்தாந்தத்தைத் தம் நடத்தை மூலம் காட்டியிருக்கிறார். இதிலிருந்து நாம் பெறவேண்டிய படிப்பினை— பகவானை அடைவதற்காக நாம் எவ்வளவு ஆவல் கொண்டிருக்கிறோமோ, அதேபோன்று அவரும்

நம்மை அடையத் துடிக்கிறார். ஆகையால்தான் அவரிடம் அன்பை வளர்த்துக் கொள்ள முயல வேண்டும்.

## பிற ஆடவர்களிடமிருந்து விலகியிருத்தல்

அனுமானிடம் பேசும் சமயத்தில் ஸ்ரீராமனுடைய குணங்களையும் பெருமையையும் வீரத்தையும் நினைத்துக் கொண்டு, சீதாதேவி பிரிவுத்துயரால் மனம் கலங்கினார். அவரது முகத்தில் கண்ணீர் பெருகி வழிந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட அனுமான், ''என்னிடமிருந்து செய்தியைக் கேட்டதுமே, வானரர்–கரடிகள் நிறைந்த மாபெரும் படையைத் திரட்டிக் கொண்டு, ஸ்ரீரகுநந்தர் மிக விரைவிலேயே இங்கு வரப் போகிறார். அல்லது [அவர் வந்து விடுவிக்கும் வரை காத்துக் கொண்டிருப்பானேன்?] அம்மையே! நான், இந்தத் துன்பங்களிலிருந்து இப்போதே தங்களை விடுவிக்கிறேன். குற்றமற்றவரே! என் முதுகின் மீது ஏறிக் கொள்ளுங்கள். மகாவிஷ்ணு, அசுரர்களை அழித்துக்கட்டுவதில் தீவிர முயற்சியுடன் இருப்பதைப் போல, இலக்குவனும் இராமபிரானும் [இராவணனை அழிப்பதில்] ஊக்கமுள்ளவர்களாக இருப்பதை, இப்போதே காணப் போகிறீர்கள்.'' [சுந்தர காண்டம் 37/18,19,22]

அனுமான் மேலும், ''இராவணனுடன் சேர்த்து இலங்கை முழுவதையும் தூக்கி எடுத்துச் செல்லக் கூடிய வலிமை எனக்குண்டு. உங்களை எடுத்துக் கொண்டு இங்கிருந்து போனால், இலங்கையில் உள்ளவர் அனைவரும் ஒன்றுசேர்ந்து, என்னைத் துரத்திப் பிடிக்க முயன்றாலும் முடியாது. விரைவிலேயே நான் உங்களை ஸ்ரீரகுநாதரிடம் கொண்டு போய்ச் சேர்ப்பேன்'' என்று அவருக்கு ஆறுதல் கூறினார்.

அனுமானுடைய இச்சொற்களைக் கேட்ட சீதை மனத்திற்குள் மகிழ்ச்சி கொண்டார். பிறகு அவர், ''வானரர்களில் சிறந்தவனே! பதிபக்தியினால் கூறுகிறேன். இராமபிரானைத் தவிர, வேறோர் ஆண்மகனின் உடலை, என் சொந்த விருப்பத்தினால் தீண்ட விரும்பவில்லை.

இராவணனுடைய சரீரத்தோடு ஸ்பரிசம் அவனுடைய பலாத்காரத்தின் காரணமாக ஏற்பட்டது. அச்சமயத்தில் திறமையற்றவளாகவும் துணையின்றியும் இருந்தேன். என்னால் அப்போது என்ன செய்ய முடியும்?

இராமபிரான் இங்கே வந்து, பத்துத்தலை இராவணனை அவனது உறவினர்களுடன் கொன்று, என்னை இங்கிருந்து அழைத்துச் சென்றால், அச்செயல் அவருடைய வீரத்திற்கு ஏற்றதாகும். அதுதான் அவருக்கு அழகு'' [சுந்தர காண்டம் 37/60–62] என்று அனுமானுக்கு விடையிறுத்தார்.

நல்லது, சிந்தித்துப் பாருங்கள்! சீதையிடம் உண்மையான உள்ளன்புடன், அவரைத் தம்முடைய தாயாகவே எண்ணுகிறார், அனுமான். ஸ்ரீராமனுக்கும் சீதாதேவிக்கும் சேவை செய்வதையே தம் வாழ்க்கையின் சிறந்த லட்சியமாகக் கொண்டவர். பதிவிரதா நியமப்படி அவரை ஸ்பரிசிப்பதையும் சீதை விரும்பவில்லை. அவர் பயங்கர ஆபத்தில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கிறார். தம்முடைய கணவனை அடைய வேண்டும் என்ற தீவிரமான ஆவல், அவரிடத்தில் இருக்கிறது. அக்கணவரிடம் விரைவில் போய்ச்சேர ஒரு பொன்னான வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் அவருக்கு தருமத்தின் மீது எவ்வளவு உறுதியான பிடிப்பு இருக்கிறது! இதிலிருந்து பெறக்கூடிய படிப்பினை இதுதான். பெரிய பெரிய ஆபத்துக் காலத்திலும்கூட, வேறு ஆடவர்களுடைய ஸ்பரிசம் ஏற்படாதவாறு, முடிந்த வரையில் பெண்கள் தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும்.

## பொறுத்தருளுதல்

இராவணன் வதம் செய்யப்பட்டு ஸ்ரீராமனுக்கு வெற்றி ஏற்பட்ட பிறகு, சீதையிடம் வெற்றிச் செய்தியைத் தெரிவிக்க, அனுமான் சென்றார். ஸ்ரீராமன் சொன்ன செய்தியைத் தெரிவித்துவிட்டு அனுமான், ''எந்தக் கொடிய அரக்கிகள் தங்களை முன்னர் அதட்டினார்களோ, அச்சுறுத்தினார்களோ,

யார் யார் தங்களுக்குத் துன்பம் கொடுத்தார்களோ, அவர்கள் அனைவரையும் கொன்றுவிட விரும்புகிறேன். எனக்கு ஆணையிடுங்கள்'' என்றார்.

அச்சமயத்தில் சீதை விரும்பியிருந்தால், அனுமானுக்குச் சைகை காட்டுவதன் மூலமே, அவர்கள் எல்லோரையும் பழிக்குப் பழி வாங்கியிருக்கலாம். ஆனால், தாம் அருளாளரான பகவான் ஸ்ரீராமனுடைய 'அர்த்தாங்கினீ' [இராமனுடைய பாதி உடல் கொண்ட மனைவி] என்று, தன் நடத்தை மூலம் செய்து காட்டினார். அவர் ஏன் இப்படிச் செய்தார்?

எளியோர்களிடம் அன்பு கொண்டுள்ள சீதை சொன்னார்— ''வானரர்களில் சிறந்த அனுமானே! பிறரது ஆணையின்படி நடக்கும் வேலைக்காரர்களிடம் யாராவது கோபம் கொள்வார்களா? ஏனெனில், தான் செய்த செயல்களின் பயனைத்தான் மனிதன் அனுபவிக்கிறான். விதியின் கொடுமையினாலும், முன்செய்த பாவங்களின் காரணமாகவும்தான் எனக்கு இந்த எல்லாத் துன்பங்களும் ஏற்பட்டன. இவையெல்லாம் விதியின் விளையாட்டு. இதில் பிறர் எந்தக் குற்றமும் செய்யவில்லை. ஆகையால், 'அரக்கிகளைக் கொல்வேன்' என்ற சொல்லைச் சொல்லாதே. பாவியாகட்டும், தருமாத்மாவாகட்டும் அல்லது கொலைத் தண்டனைக்குத் தகுந்த குற்றத்தைச் செய்தவனாகத்தான் இருக்கட்டுமே, எல்லோர் மீதும் சாதுக்கள் இரக்கம் காட்டவேண்டும். ஏனெனில், யார்தான் இவ்வுலகில் குற்றம் செய்யவில்லை?'' [யுத்த காண்டம் 116/37–39,43] என்று பரிவுடன் பகரும் பாங்கு மனத்தை நெகிழ்விக்கிறது.

## அக்னி பரீட்சை

அசோக வனத்திலிருந்து திரும்பி வந்த அனுமான் ஸ்ரீராமனிடம், ''சீதாப்பிராட்டியார், தங்களைக் காண்பதற்காகத் துடித்துக் கொண்டிருக்கிறார்'' என்றார். உடனே விபீஷணன், ஸ்ரீராமனின் ஆணைப்படியே சீதைக்கு நன்னீராட்டி, ஆடை–

அணிகளால் நன்கு அலங்கரிக்கச் செய்து, ஸ்ரீராமனருகே அழைத்து வந்தார்.

வெகுநாட்களுக்குப் பின்னர் முழுமதியை ஒத்த ஸ்ரீராமனின் திருமுகத்தைக் கண்ட சீதையின் துயரமெல்லாம் விலகிவிட்டன. அப்போது அவரது முகத்தில் நிர்மலமான சந்திரனைப் போன்ற ஒளி வீசியது. ஆனால், அதே சமயத்தில் பல்வேறு விஷயங்களைக் கூறிய பின்னர், ஸ்ரீராமச்சந்திரன் கூறினார்—

''சீதே! தனக்கு ஏற்பட்ட அவமானத்தைப் பொறுத்துக் கொள்ளாத ஒருவனுக்கு, பகைவனால் ஏற்பட்ட அவமானத்தைப் போக்கிக் கொள்ள எவையெவை செய்யத்தக்கனவோ, [மூலத்திலுள்ள 'யத்' என்ற ஒருமை, பன்மைப் பொருள் உடையது.] அவையெல்லாம் என்னால் செய்யப்பட்டுவிட்டன. நற்குலத்தில் பிறந்த எந்த ஒரு வீரபுருஷன்தான், அயலார் வீட்டில் தங்கியிருந்த தன் மனைவியை மறுபடியும் உளமார ஏற்றுக்கொள்வான்? எனக்கு ஏற்பட்ட இகழ்ச்சியைக் களைந்து, இழந்த கீர்த்தியை மீண்டும் பெறவேண்டும் என்பதற்காகவே, நான் போராடி உன்னை மீட்டேன். எனக்கு உன்னிடம் பற்றுதல் இல்லை. அதனால், உன் இஷ்டப்படி இங்கிருந்து எங்கு வேண்டுமானாலும் போகலாம்'' [யுத்த காண்டம் 118/13,19,21] என்று உதாசீனம் கொண்டவரைப் போல் பேசினார்.

ஸ்ரீராமனுடைய கடுமையான இச்சுடுசொற்களைக் கேட்டவுடன் கற்புக்கரசியான சீதைக்கு ஏற்பட்ட நிலையை வர்ணிக்க இயலாது. தன் பதியின் சொல்லம்பால் சீதையின் மனத்தில் மிகுந்த வேதனை ஏற்பட்டது. அவர் விம்மி விம்மி அழத் தொடங்கினார். பின்னர் தழுதழுத்த குரலில் இதயத்தைத் தொடும் இச்சொற்களைக் கூறினார்— ''சுவாமி! சாதாரண மனிதர்களைப் போன்று, என்னிடம் ஏன் இக்கொடிய சுடுசொற்களைக் கூறுகிறீர்கள்? என்னுடைய ஒழுக்கத்தின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். பிராணநாதா! என்னை நம்புங்கள். என்னை இராவணன் கவர்ந்தபோது,

என் உடல் மீது அவனுடைய ஸ்பரிசம் ஏற்படவே செய்தது. ஆனால், அச்சமயத்தில் பிறனுடைய வசத்திலிருந்தேன். இக்காரணத்தால் நான் 'குற்றம் செய்தவள்' என்று தீர்மானிக்க முடியாது. எனது மனம் என்னுடைய கட்டுப்பாட்டிலேயே இருந்து வந்துள்ளது. கனவிலும்கூட அந்த மனம் வேறு யாருக்கும் உரிமையாகவில்லை. ஆனாலும், நீங்கள் [என்னை ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்ற] இதைத்தான் செய்ய வேண்டியது என்றால், அனுமானை என்னிடம் அனுப்பியபோதே என்னைத் துறந்திருந்தால், இதற்குள் நான் உயிர் துறந்திருப்பேனே!''

சீதை இன்னும் பலவாறாகக் கூறினார். ஆனால், ஸ்ரீராமன் அவருடைய வார்த்தைகளுக்கு எந்தப் பதிலையும் அளிக்கவில்லை. அப்போது துயரத்துடன் சிந்தனையில் ஆழ்ந்திருந்த லட்சுமணனை அழைத்து, வருத்தம் தோய்ந்த உள்ளத்துடன் அழுது கொண்டே கூறினார்— ''லட்சுமணா! பொய்யான இந்த அபவாதத்தினால் களங்கமடைந்த நான் உயிர் வாழ விரும்பவில்லை. எனது துன்பம் விலகும் பொருட்டு, நீ இங்கேயே சிதையைத் தயார் செய். என்னுடைய கணவர், என்னுடைய குணங்களில் திருப்தியடையாமல் என்னைச் சமுதாயத்திலிருந்தே விலக்கி வைத்துவிட்டார். இல்வாழ்க்கையை முடித்துக் கொள்ள நான் அக்னியில் பிரவேசிப்பேன்'' என மொழிந்தார்.

விதேகச் செல்வியான சீதையின் சொற்களைக் கேட்டு, லட்சுமணன் முதலில் மனமுடைந்து போனார். ஆனால், குறிப்பினால் ஸ்ரீராமனது உறுதியைப் புரிந்துகொண்டு, விரைவிலேயே தீமூட்டிச் சிதையைத் தயார் செய்தார். முதலில் சீதாதேவி, ஸ்ரீராமனை வலம் வந்தார். பிறகு தேவதைகளையும் அந்தணர்களையும் வணங்கிவிட்டு, நன்கு எரிந்து கொண்டிருக்கும் அக்னியின் அருகே சென்று, தன் கைகளைக் கூப்பிக் கொண்டு, ''உலகிற்குச் சாட்சியாய் விளங்கும் அக்னிதேவரே! என் மனம் ஒருபோதும் ஸ்ரீரகுநாதரிடமிருந்து விலகவில்லையென்றால், எல்லா

விதங்களிலும் என்னைக் காப்பாற்றுவீராக! உண்மையில், நான் நன்னடத்தை உள்ளவளாக இருந்தால், மதிமயக்கத்தினால் ஸ்ரீரகுநாதர் என்னை மாசுற்றவள் என்று கருதினாலும், நீங்கள் என்னை எல்லாவிதங்களிலும் காப்பாற்றுவீராக!'' [யுத்த காண்டம் 119/24,25] என வேண்டினார்.

இவ்வளவும் சொல்லிவிட்டு, அக்னியை வலம் வந்து, எவ்வித அச்சமுமின்றி, சீதை கொழுந்துவிட்டெரியும் பயங்கரமான நெருப்பில் பிரவேசம் செய்தார். 'ஹா', 'ஹா' என்ற ஒலி எங்கும் ஒலித்தது. பிரம்மா, சிவபெருமான், குபேரன், இந்திரன், யமதருமராஜன், வருணன் முதலிய தேவதைகள் அங்கே வந்து சேர்ந்தனர். அப்போது பிரம்மதேவன், ஸ்ரீராமன்—சீதாதேவி பற்றிய பலவித ரகசியச் செய்திகளை எடுத்தியம்பினார்.

இதற்குள்ளேயே பகவானான அக்னிதேவர் சீதாதேவியை அழைத்துக் கொண்டு, தமது தெய்விக ரூபத்திலேயே வெளிப்பட்டு, ஜனகரின் புதல்வியான சீதையை ஸ்ரீராமனிடம் அர்ப்பணித்துவிட்டு, ''இராமனே! இவள், தங்களுடைய வைதேகிதான்! [அவள் போன்ற தோற்றமுடைய வேறொருத்தி அல்லள். விதேக மன்னரின் புத்திரியாகிய எவளைக் கைப்பிடித்தீர்களோ, அதே நங்கைதான் இவள்!] இவளிடம் குறை ஏதும் இல்லை.

நன்னெறி நாயகரே! சீலம் மிகுந்த இவள், தங்களை மீறி [தங்கள் பெருமையைக் குலைப்பதான] எதையும் செய்தவளில்லை. வாக்கு—மனம் [மேம்போக்கான எண்ணம்], சங்கல்பம் [செய்தே தீருவது என்ற உறுதியான எண்ணம்], பார்வை ஆகிய எதனாலும் பிழை செய்யவில்லை. மாவீரன் என்ற திமிரினால் இராக்கதனான இராவணன், மக்கள் நடமாட்டமே இல்லாத காட்டிலிருந்து, மனம் நொந்து ஆதரவில்லாது தனித்து விடப்பட்ட இவளைத் தங்களிடமிருந்து பிரித்துக் கவர்ந்து சென்றான். இவள், இராவணனுடைய அந்தப்புரத்தில் [அசோக வனத்தில்] சிறை வைக்கப்பட்டாள்; கடுமையான காவல் போடப்பட்டு,

எவராலும் கண்டுபிடிக்க முடியாதபடி மறைக்கப்பட்டிருந்தாள். பயங்கரமான தோற்றமுடைய அரக்கிகள், இவளைக் காவல் காத்தார்கள். அந்த நிலையிலும் இவள், தங்களையே நம்பியிருந்தாள்; தங்களிடமே மனத்தைச் செலுத்தியிருந்தாள்;

பலவிதமாக ஆசை காட்டப்பட்டாள்; மிரட்டப்பட்டாள். ஆனால், தங்களிடமே மனத்தைப் பறிகொடுத்திருந்த மைதிலி, அந்த அரக்கனைப் பொருட்படுத்தவேயில்லை. இராமச்சந்திரனே! மாசில்லாத உள்ளமுள்ளவளும் பாவக்கறை படியாதவளுமான இவளை ஏற்றுக் கொள்ளுங்கள். இனி, இது பற்றிய பேச்சுக்கு இடமில்லை. நான், உங்களுக்கு ஆணையிடுகிறேன்'' [யுத்த காண்டம் 121/5–10] என ஆணையிட்டார்.

அக்னிதேவருடைய வார்த்தையைக் கேட்டதும், சிறந்த நடத்தைக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய புருஷோத்தமரான ஸ்ரீராமன் மிகவும் மகிழ்ச்சி கொண்டார். அவருடைய கண்கள் மகிழ்ச்சியால் நிரம்பின. அவர் சொன்னார்— ''சீதை மாசற்றவள் என்று எனக்குத் தெரியும். ஆனால், இராவணனுடைய அந்தப்புரத்தில் நெடுநாட்கள் தங்கியிருந்தவளின் தூய்மையைப் பலரும் அறிய பரிசோதித்துப் பார்க்காமல் நான் ஏற்றுக் கொண்டால், 'தசரதன் மைந்தனான இராமன், காம மிகுதியால் அறிவிழந்து அவளை ஏற்றுக் கொண்டான்' என்று மேன்மக்கள் பேசுவார்கள். மூன்றுலக மக்களும் இகழ்ந்துரைப்பார்கள்.

ஜனககுமாரி சீதை, என்னைத் தவிர வேறிடம் செல்லாத மனத்தை உடையவள்; ஆழமான அன்பு கொண்டவள்; என் விருப்பத்திற்கேற்றபடி நடப்பவள் என்பதை நானும் மனதார அறிவேன். பெருங்கடல், கரையை மீறிச் செல்லாததைப் போல, [தன் கற்புத்திறத்தால் தன்னைக் காத்துக் கொள்ளக்கூடிய] தடங்கண்ணாளான இவளை, இராவணன் மீறிச் சென்றுவிட முடியாது.

மைதிலி, கொழுந்துவிட்டெரியும் அக்னியைப் போன்றவள்; யாராலும் நெருங்க முடியாதவள்; எவராலும் அடைய

முடியாதவள். கெடுமதி கொண்ட இராவணனால், மனத்தால்கூட இவள் மீது ஆதிக்கம் செலுத்த முடியாது. கற்புக்கரசியான இவள், இராவணனுடைய அந்தப்புரத்தில் இருந்துகொண்டு செழிப்பான வாழ்க்கை வாழ்வதை விரும்ப மாட்டாள். ஏனென்றால், சூரியனிடமிருந்து பிரிக்க முடியாத ஒளியைப் போல, இவள் என்னிடமிருந்து பிரிக்க முடியாதவள்.

ஜனககுமாரியான சீதை, மூன்று உலகங்களிலுமுள்ள தூய்மையான பொருள்களைக் காட்டிலும் தூயவள்! கௌரவமான ஒரு மனிதர் இயல்பாகக் கிடைக்கும் புகழைத் துறக்க முடியாததைப் போல, என்னால் இவளை விலக்க முடியாது. திக்பாலகர்களான நீங்கள் எல்லோரும் என்னிடம் அன்பு கொண்டவர்கள்; நலந்தரும் சொல்லைக் கூறுபவர்கள்; எல்லா உலகங்களும் உங்களைப் பணிந்து வழிபடுகின்றன. எனவே, எனக்கு மேன்மை ஏற்படும் வகையில், நீங்கள் கூறியபடி செய்ய நான் கடமைப்பட்டுள்ளேன்.'' [யுத்த காண்டம் 121/13–15,17–21]

இவ்வளவும் சொல்லிவிட்டு, அவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் கற்பின் செல்வியான சீதையை ஏற்றுக் கொண்டார். இந்தச் சந்தர்ப்பத்திலிருந்து நாம் கற்றுக் கொள்ளவேண்டிய பாடம் இதுதான். எந்நிலையிலும் பெண்ணானவள் தன்னுடைய கணவனிடம் கோபம் கொள்ளலாகாது. ஆயினும், கணவனின் மகிழ்ச்சியின் பொருட்டு, நியாயத்தோடு கூடிய செயல்களைக் கட்டாயம் செய்யவேண்டும்.

## இல்லற தருமம்

இலங்கையிலிருந்து அயோத்திக்குத் திரும்பி வந்தவுடனேயே, வயதில் பெரியவர்களான மாதர்களின் கால்களிலும், தம்முடைய மாமியார்களுடைய கால்களிலும் சீதை விழுந்து வணங்குகிறார். வீட்டில் வாழ்ந்து கொண்டு தேவதைகளுக்கும் பூஜை செய்கிறார். எல்லா மாமியார்களுக்கும் ஒரேவிதமான முறையில் சேவை செய்கிறார். இவ்விதம்

வீட்டு வேலைகளைச் செவ்வனே செய்து, எல்லோரும் வியக்கும்வண்ணம் நடந்து கொள்கிறார். சீதை, தம்முடைய கொழுந்தனார்களான பரதன், லட்சுமணன், சத்ருக்னன் — இவர்களைத் தம் புதல்வர்களாகக் கருதினார். உணவு படைக்கும் விஷயத்தில் எந்தவிதமான பேதபாவனையும் காட்டவில்லை. இதிலிருந்து நாம் பெறும் படிப்பனை இதுதான்.

வேறு ஊரிலிருந்து திரும்பி வந்ததும் பெண்ணானவள் வீட்டிலுள்ள பெரியவர்களையும், முதிய மாதர்களையும் வணங்கவேண்டும்; எல்லோருக்கும் சமபாவனையுடன் சேவை செய்ய வேண்டும்; வீட்டு வேலைகளைச் சிறந்த முறையில் செய்ய வேண்டும்; கொழுந்தனார்கள் முதலியோருக்குச் சமபாவனையுடன் தகுந்த விதத்தில் பணிவிடை செய்ய வேண்டும்.

## சீதையைத் துறத்தல்

இராமன் சீதையை 'பரித்தியாகம்' செய்யும் கட்டம் [முற்றும் விடுதல்] மெய்ச்சிலிர்க்கச் செய்வது. உத்தர காண்டத்தில் உள்ள இந்தக் கட்டத்தைக் கவனமாகப் படிக்கவேண்டும். சீதை எல்லாவிதங்களிலும் புனிதமானவர் என்று பகவான் ஸ்ரீராமன் நன்றாகவே அறிந்திருந்தார். இலங்கையில் அக்னி பரீட்சை மூலம், எல்லோர் முன்னிலையிலும் சீதை கற்புடையவர் என்பதை நிரூபித்துவிட்டார். இவையெல்லாம் நடந்த பின்னர் கூட, மக்களிடையே இருந்த அபவாதத்தின் மீது கவனம் செலுத்தி, குடிமக்களை மகிழ்வுறச் செய்வதற்காகப் பிராட்டியைத் துறந்துவிட்டார். பரதன், லட்சுமணன், சத்ருக்னன் முதலிய எந்தச் சகோதரனுக்கும் அச்செயல் உகந்ததாக இல்லை. ஆனால், அவர்களால் இச்செயலைத் தவிர்க்க முடியவில்லை.

லட்சுமணனுக்கு விருப்பம் இல்லாவிட்டாலும்கூட, இராமபிரானது ஆணையை ஏற்று, சீதையைக் காட்டில் விட்டுவிட்டு வருவதற்காகச் செல்ல வேண்டி இருந்தது.

காட்டிற்குச் சென்ற பிறகு, சீதையிடம் லட்சுமணன் எல்லா விஷயங்களையும் சொன்னார். தாம் குற்றமற்றவராக இருந்தும், இராமனால் துறக்கப்பட்டு விட்டதை அறிந்ததும், அவரது துயரம் எல்லை மீறிப் போய்விட்டது. சீதை, இந்தச் சங்கடமான நிலையிலும் தம்முடைய கணவன் மீது எந்தக் குற்றத்தையும் சுமத்தவில்லை. ஆனால், லட்சுமணன் மூலமாக, ''என்னுடைய மாமியார்கள் அனைவரின் முன்னிலையிலும் கைகுவித்து, திருவடிகளைப் பற்றி, என் சார்பில் வணக்கம் கூறுங்கள். மன்னருடைய திருவடிகளில் தலைவைத்து வணங்கி, நான் அவரை நலன் விசாரித்ததாகச் சொல்லுங்கள்.

அந்தப்புரத்திலுள்ள வந்தனைக்குரிய எல்லா மாதர்களுக்கும் தலைவணங்கி, நான் அவர்கள் நலன் பற்றி விசாரித்ததாகக் கூறுங்கள். மிக்க கவனத்துடன் அறத்தைப் பேணுபவரான மன்னரிடம் பின்வருமாறு தெரிவியுங்கள்— ரகு நாயகரே! சீதை தூய்மையானவள், பிரேமபக்தியுடன் கூடியவள், எப்போதும் தங்கள் க்ஷேமத்தையே கோருபவள் என்பதைத் தாங்கள் நிச்சயமாக அறிவீர்கள்.

வீரரே! மக்களிடம் தங்களைப் பற்றி எந்த பழிச்சொல் பரவி வருகிறதோ, அதனால், அபகீர்த்தி ஏற்பட்டுவிடும் என்ற அச்சத்தினால் என்னைத் துறந்தீர்கள். அப்படி ஓர் இகழ்ச்சி தங்களுக்கு ஏற்பட்டால், அதைப் போக்குவது எனது கடமை. ஏனென்றால், தாங்கள்தான் எனக்குப் புகலிடம். அறநெறியில் நின்றொழுகும் மன்னரிடம், தாங்கள் எவ்வாறு தங்கள் சகோதரர்களிடம் பழகுகிறீர்களோ, அவ்வாறே குடிமக்களிடமும் நடக்க வேண்டும். மிக உயர்ந்த இந்த நெறியைப் பின்பற்றினால் நிகரற்ற புகழ் தங்களுக்குக் கிடைக்கும்.

நகர மக்களைத் தருமமுறைப்படி பரிபாலித்தால் புண்ணியம் கிடைக்கும். ஆண்மைமிக்கவரே! நான், என் சரீரத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. [இனி, நான் எவ்வாறு வாழ்க்கையைக் கழிப்பேன்? என்று சோர்ந்து போய்விடவில்லை.]

ரகுநந்தனரே! மக்களின் பழிச்சொல்லிலிருந்து எவ்வாறு தப்பிப் பிழைக்க முடியுமோ, அவ்வாறே செய்யுங்கள். பெண்களுக்குக் கணவரே தெய்வம்; கணவரே உறவு; கணவரே ஆசார்யன்; கணவரே உயிரைக் காட்டிலும் மேலானவர்'' [உத்தர காண்டம் 48/10–16] என்று இராமபிரானிடம் தெரிவிக்குமாறு கூறினார்.

எவ்வளவு ஆழ்ந்த கருத்துடைய சொற்கள்! கற்பின் கனல் சீதை வாழ்க! அவளுடைய பதிபக்தியும் வாழ்க! பாரத நாட்டின் கற்புநெறி வாழ்க! பாரத மாதர்களின் தியாகம் வாழ்க!

சீதை இவ்வாறு கூறிய பிறகு, லட்சுமணன் அவரை வணங்கிவிட்டு, அழுதுகொண்டே திரும்பிச் சென்றார். இங்கே, துக்கத்தின் சுமையால் வருந்திக் கொண்டிருந்த பதிவிரதையான சீதை அழத் தொடங்கினார். அவரது புலம்பலைக் கேட்ட வால்மீகி முனிவர் அவரை ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்றார். அவருடைய ஆசிரமத்தில் முனிவர்களுடைய மனைவிமார்களுடன் சீதையும் வசித்தார்.

இந்தச் சந்தர்ப்பத்திலிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல உள்ளன. சீதையின் மேற்கூறிய வசனங்கள் பாராயணம் செய்யத் தகுந்தவை. அவற்றின் கருத்தைப் புரிந்து கொண்டு, அதற்கேற்ப கற்புடைய பெண்கள் தமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

## பாதாள பிரவேசம்

தமது உயிரைப் பணயம் வைத்து, ஒரு பெண் தருமத்தைக் காப்பாற்றினால், இறுதியில் அத்தருமத்தின் விளைவு நன்றாகவே அமையும். இராமன் அசுவமேதயாகம் செய்தபோது, லவகுசர்கள் இராமாயணத்தை கானம் செய்தார்கள். அதைக் கேட்ட இராமபிரானுக்கு, அதில்

வர்ணிக்கப்பட்ட நிகழ்ச்சிகளிலிருந்து, கானம் செய்தவர்கள் சீதையின் புதல்வர்கள் என்பது விளங்கியது. அப்போது அவருடைய கட்டளையின்படி சீதை அழைத்து வரப்பட்டார். கற்புக்கரசியான சீதை, ஸ்ரீராமனை மனத்தில் நினைத்துக் கொண்டு, தலைகுனிந்தவண்ணம் கைகூப்பிக் கொண்டு, வால்மீகி முனிவருக்குப் பின்னால் கண்ணீர் சிந்திக் கொண்டே வந்தார். அச்சமயத்தில், வால்மீகி முனிவர் சபைக்கு வந்து நடந்தவற்றை விளக்கிக் கூறினார். அதனால் ஸ்ரீராமனுக்கு ஏற்பட்ட அபவாதம் முழுவதும் நீங்கிவிட்டது. சபை முழுவதும் 'சீதா–ராமர்களுக்கு ஜயம்!' என்று ஜயகோஷம் செய்தனர்.

சீதை பாவமற்றவர் என்று கூறும்போது வால்மீகி முனிவர், ''நான் அநேக ஆயிரமாண்டுகள் தவம் செய்திருக்கிறேன். மைதிலி மாசுபடிந்தவள் என்பது உண்மையானால், என் நீண்ட தவத்தின் பலன், எனக்குக் கிடைக்காமல் போகட்டும். இவள் தூய நடவடிக்கை உடையவள்; பாவம் செய்யாதவள்; கணவனையே தெய்வமாகக் கொண்டவள். மக்களின் பழிச்சொல்லைக் கேட்டு அச்சமடைந்த தங்களுக்குத் தன் தூய்மையை நிரூபிக்கப் போகிறாள்'' [உத்தர காண்டம் 96/20,23] என இவ்வளவு தூரம் எல்லை மீறிச் சொல்கிறார்.

இவ்விதம் மகரிஷி வால்மீகி சபதமிட்டுக் கூறிய சொற்களைக் கேட்டபிறகு, சபைக்கு வந்த சீதையைப் பார்த்த இராமபிரான் தழுதழுத்த குரலில் சொன்னார்— ''பெரியோய்! தங்களது தூய மொழிகளைக் கேட்ட எனக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. முதலில் இலங்கையில் எல்லா தேவதைகளுக்கும் முன்பு, அக்னி பரீட்சையின் மூலம் இவள் எனக்கு நம்பிக்கையூட்டினாள். ஜானகி எல்லா விதங்களிலும் தூய்மையானவள் என்பதை நானும் அறிவேன். குசலவர்கள் என்னுடைய குமாரர்கள் என்பதையும் அறிவேன்; அப்படியிருந்தும் மக்களிடையே பழிச்சொல் ஏற்பட்டதால், குடிமக்களை மகிழ்ச்சி கொள்ளச் செய்ய, வேறு வழியின்றிப்

பிரியமான சீதையைத் துறக்க நேர்ந்தது. ஆகையால், நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்.''

அச்சமயத்தில், பிரம்மா முதலிய தேவர்களும் வந்து சேர்ந்தனர். அப்பொழுது ஸ்ரீராமன், ''ஜானகி தூய்மையானவள் என்று எனக்கு முழுநம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. ஆனால், எல்லா உலகங்களுக்கும் முன்னிலையில் சீதை தூய்மையானவள் என்பது நிரூபணமாகிவிட்டால், எனக்கு மகிழ்ச்சி ஏற்படும்'' என்றார்.

இதே சமயத்தில், காவி உடை அணிந்த கற்பின் செல்வியான சீதாதேவி தலைகுனிந்தவண்ணம் பூமியை நோக்கிக் கைகளைக் கூப்பிக் கொண்டு, ''நான், பிரபு இராமனைத் தவிர வேறு எந்த ஆடவனையும் மனத்தால் சிந்தித்துக்கூடப் பார்த்ததில்லை என்பது சத்தியமானால், பூமாதேவி எனக்கு அடைக்கலம் தருவாளாக. நான் மனம்–மொழி–செயல்களால் இராமனையே போற்றி வந்தேன் என்பது உண்மையானால், பூமாதேவி எனக்கு அடைக்கலம் தருவாளாக. பகவான் ஸ்ரீராமனைக் காட்டிலும் சிறந்ததாக எதையும் நான் எண்ணவில்லை என்பது சத்தியமானால், பூமாதேவி எனக்கு அடைக்கலம் தருவாளாக'' [உத்தர காண்டம் 97/15–17] என வேண்டினார்.

சீதை இவ்வாறு சபதம் செய்தவுடனேயே, திடீரென்று பூமி பிளந்தது. அதிலிருந்து ஒரு சிறந்த திவ்யமான சிம்மாசனம் வெளிப்பட்டது. திவ்யமான ஆடைகள் அணிந்து, திவ்யமான உடல் பூண்டு சிறந்து விளங்கிய நாகர்கள், அதைச் சுமந்து வந்து கீழே வைத்தனர். அதில் பூமிதேவி அமர்ந்திருந்தார். பூமிதேவி சீதையை வரவேற்று, இரு கைகளாலும் அணைத்துத் தன் மடியிலமர்த்திக் கொண்டாள். இதற்குள் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, சிம்மாசனம் பாதாளத்தில் பிரவேசித்தது. ஆகாயத்திலிருந்து மலர்மாரி பொழியத் தொடங்கியது. கற்புக்கரசியான சீதையைப் போற்றி ஜயகோஷம் வானில் எதிரொலித்தது.

## முடிவுரை

மிகக் கடினமான சோதனைகளுக்குட்பட்டு, சீதை தம் வாழ்க்கையின் மூலம், இந்தத் தத்துவத்தை நிரூபித்துக் காட்டியிருக்கிறார். பேராபத்து நேருங்காலத்திலும், தருமத்தைக் காப்பாற்றி வரும் பெண் எப்போதும் நிரந்தரமாக பரமானந்தத்தில் மூழ்கி இருப்பாள். அவளது புகழ் உலகில் என்றும் அழியாமல் விளங்கும். பதிபக்தி, மாமியார்களிடம் கொண்டிருந்த சேவை மனப்பான்மை, எல்லோருக்கும் மரியாதை காட்டும் பண்பு, எல்லோரிடத்திலும் அவரவர்களுக்குத் தகுந்தவாறு அன்புடன் கூடிய நடத்தை, முனிவர்களுக்குச் சேவை செய்வது, குச—லவர்களைப் போன்ற வீரம் செறிந்த புதல்வர்களைப் பெற்றெடுத்தது, அவர்களுக்குக் கல்வி புகட்டுவதில் திறமை, துணிச்சல், தைரியம், தவம், வீரம், தருமத்தில் ஈடுபாடு, அச்சமின்மை, பொறுமை ஆகிய எல்லா குணநலன்களும் சீதையிடம் முழுமை பெற்று விளங்கின. அவை பின்பற்றத்தக்கவை. இவ்வுலகில் சோம்பல், மோகம், பற்று – இவைகளை விடுத்து, சீதையின் வாழ்க்கையைப் பின்பற்றி ஒரு பெண் நடந்தால், அவளுக்கு ஏற்படக்கூடிய நன்மையைப் பற்றிச் சொல்வானேன்! அவள் தன்னுடைய கணவன், புதல்வன் மற்றும் குடும்பத்திலுள்ள அனைவரையுமே கரையேற்றி விடுவாள். இத்தகைய சிறந்த கற்புக்கரசியை மூவுலகும் கைதொழும். அவள், தனது நடத்தையின் மூலம் இவ்வுலகையும் புனிதமாக்குவாள்.

சீதாதேவி சாட்சாத் பகவதிதேவியேயானாலும், தமது மனித வாழ்க்கையில், அவர் எப்படி வாழ்ந்து காட்டினாரோ, அவ்வாழ்க்கை முழுவதையும் மனது வைத்தால் ஒவ்வொரு பெண்ணும் பின்பற்ற முடியும். அவருடைய நடத்தை, உலகியலுக்கு அப்பாற்பட்டதாக இல்லாமல், பின்பற்றி நடக்கக் கூடியதாக இருப்பதால், எல்லாப் பெண்மணிகளும் அவ்வாழ்க்கையைப் பின்பற்றிப் பயன் பெறலாமே.



# 3. இராமபிரானின் தொண்டரான லட்சுமணன்

லட்சுமணப் பெருமானின் பெருமை எல்லையற்றது. வால்மீகி ராமாயணத்தில் லட்சுமணனும் பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் அம்சாவதாரமெனக் கூறப்படுகிறார். ஆனால், மற்ற நூல்களில் அவர் பகவான் அனந்தனுடைய [ஆதிசேஷனுடைய] ஆதாரமாகக் சொல்லப்பட்டிருக்கிறார். அவரது சரித்திரத்தைப் பார்க்கும்போது, அவரது அவதாரம், இராமபிரானுடைய திருவடிகளின் நிழலில் இருந்து கொண்டு, அவருக்குச் சேவை செய்யவே ஏற்பட்டது என்பது தெளிவாகிறது. இந்தக் காரணத்தால்தான் இராமபிரானிடம் மற்ற சகோதரர்கள் அன்பு கொண்டிருந்த போதிலும், ஆலயங்களில் லட்சுமணனது விக்கிரகம் மட்டுமே பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

தவிர, இராமபிரான் பெயருடன் லட்சுமணன் பெயர் மட்டுமே சேர்த்துச் சொல்லப்படுகிறது. பரதனும் சத்ருக்னனும் தங்கள் சொந்த விருப்பத்தின்பேரில் ஸ்ரீராமனைப் பிரிந்து, பாட்டனார் வீட்டில் தங்கினார்கள். ஆனால், லட்சுமணனோ வாழ்நாளில் ஒருபொழுதும், எந்த நிலையிலும் ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்திருந்ததில்லை. இராமபிரானும் அவரைத் துறந்தவுடன் பரமபதத்திற்குச் சென்றுவிட்டார்.

லட்சுமணன் பிரம்மசரிய விரதம் காத்தவர், தீரர், வீரர், ஒளி பொருந்தியவர், பராக்கிரமசாலி. மேலும், புலன்களை வென்றவர்.

அழகிய மிடுக்கான திருமேனியுடையவராகவும், எளிமையாகப் பழகுபவராகவும், பொறுத்துக் கொள்ளும் குணம் நிரம்பியவராகவும், அச்சமற்றவராகவும், வஞ்சகம் அற்றவராகவும், தியாகியாகவும், முயற்சி உடையவராகவும், தபஸ்வியாகவும், தொண்டராகவும், உண்மையைக் கடைப்பிடிப்பவராகவும், அறிவிற்சிறந்தவராகவும், மேலும்

நீதியில் வல்லவராகவும் விளங்கினார். அவர் இராமபிரானிடம் கொண்டிருந்த அன்பு வேறு எங்குமே காணப்படாதது. இராமபிரானின் திருவடி நிழலில் இருந்து கொண்டு, அவருக்குத் தொண்டு செய்வதையே லட்சுமணன் தம்முடைய முக்கிய தருமமாகவும் கடமையாகவும் எண்ணினார். அந்தத் தொண்டில் அவர் தம்மையே மறந்திருந்தார்.

இனிமையும் ஆழமும் நிறைந்த பரதனது அன்பு ஒப்புவமையற்றதாக இருந்தது போலவே, வீரத்தோடு கூடியதும், சேவையை அடிப்படையாகக் கொண்டதுமான லட்சுமணன், இராமபிரான் மீது கொண்ட அன்பும் உயரிய ஆதர்சமாக விளங்குகிறது. லட்சுமணன் சிறுவனாக இருந்த பொழுதே எப்பொழுதும் இராமபிரானுடனேயே இருந்தார். வால்மீகி ராமாயணத்தில், ''மக்களால் பெரிதும் விரும்பப்படுபவரும், மூத்த சகோதரரும், உலகத்தோருக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவருமான இராமனுடன் சிறுவயது முதற்கொண்டே எழிலுக்கு எழில்கூட்டும் லட்சுமணன், மிகவும் ஒட்டுதலுடன் பழகி வந்தார். அவருக்குத் தன் உடம்பைக் காட்டிலும் இராமனிடம் அதிகப் பிரீதி இருந்தது. அனைத்துச் செழுமைகளும் நிறைந்த லட்சுமணன், இராமனுக்குச் சரீரத்திற்கு வெளியே உள்ள [இரண்டாவது] உயிர் போல் விளங்கினார். அவர் இல்லாமல் புருஷோத்தமரான இராமனுக்குத் தூக்கம்கூட வருவதில்லை'' [பால காண்டம் 18/28–30] என்று சொல்லப்படுகிறது.

மிகச்சிறிய வயதிலேயே விசுவாமித்திரரது வேள்வியைக் காக்க லட்சுமணன், இராமபிரானுடன் சென்றார். அங்கும் அவர் இராமபிரானுக்குச் சேவை செய்வதில் எப்போதும் ஈடுபட்டிருந்தார். இலைகளை விரித்து, அந்த விரிப்பின் மேல் உறங்கினார். இராமபிரானுடன் கூடவே இருந்து அவர்தம் ஆணைப்படி அரக்கர்களைக் கொன்று, முனிவரின் வேள்வியைக் காத்தார்.

விசுவாமித்திரரது வேள்வியைக் காத்த பிறகு இரு சகோதரர்களும் மிதிலாபுரி சென்றனர். அங்கே இராமபிரான் 'சிவதனுஷ்' என்ற வில்லை முறித்த பிறகு, சகோதரர்கள் நால்வருக்கும் திருமணம் நிறைவேறியது. அனைவரும் அயோத்தி வந்து மகிழ்ச்சியோடு இருந்தனர். சிலகாலம் கழித்து பரதனும் சத்ருக்னனும், தங்கள் அன்னை கைகேயியின் பிறந்த வீட்டிற்குச் சென்றுவிட்டனர்.

அதற்குப் பிறகு மகாராஜா தசரதரின் விருப்பம், அமைச்சர்களது ஒப்புதல், குடிமக்களின் சம்மதம், ஆகியவற்றிற்கேற்ப இராமபிரானுக்கு முடிசூட்ட ஏற்பாடானது. இதைக் கண்டு லட்சுமணன் எல்லையற்ற ஆனந்தம் கொண்டார். இராமபிரான் சிங்காதனத்தில் அமர்ந்திருப்பதைப் பார்க்க, லட்சுமணன் எவ்வளவு துடித்துக் கொண்டிருந்தார் என்பது, 'முடிசூடல் இல்லை, வனவாசம்தான்' என்று ஏற்பட்ட பிறகு, பொங்கி எழுந்த அவரது கோபத்திலிருந்து தெரிய வரும். நம் எண்ணத்திற்கு எவ்வளவுக்கெவ்வளவு எதிராக ஒரு செயல் நடக்கிறதோ, அந்தச் செயலில் நமக்கு அவ்வளவுக்கவ்வளவு கோபம் வரும்.

மந்தரை, கைகேயியைத் தூண்டிவிடுவதற்காக, லட்சுமணன் இராமபிரானிடம் கொண்டிருந்த அன்பை, ''சுமித்திரையின் புதல்வன் இராமனைப் பாதுகாக்கிறான்; இராமன், லட்சுமணனைப் பாதுகாக்கிறான். அசுவிநீ குமாரர்களைப் போல அவ்விருவரிடையே நிலவும் சகோதரபாசம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம்'' [அயோத்தியா காண்டம் 8/31] என்று புகழ்கிறார்.

இதற்குப் பிறகு, ஸ்ரீராமன் காட்டுக்குப் போகச் சம்மதித்து, அன்னை கோசலையிடம் அனுமதி பெறச் சென்றபோது, லட்சுமணனும் உடன் இருந்தார். அவர்தான் ஒவ்வொரு நிலைமையிலும் ஸ்ரீராமன் பின்னால் நிற்பவராயிற்றே! இராமபிரான், கோசலையிடம் நடந்ததை எல்லாம் விரிவாகச் சொன்னார். தாய்க்கு ஏற்பட்ட துயரம் எல்லையற்றது. தாயும்

இராமபிரானைத் தடுத்து நிறுத்த முயன்றார். ஆனால், ஸ்ரீராமன் உடன்படவில்லை. ஸ்ரீராமனது இந்தச் செயல் லட்சுமணனுக்குப் பிடிக்கவில்லை. அவர் இராமபிரானை முழுமையாகப் பின்பற்றி நடப்பவர்தான். ஆனால், ஸ்ரீராமன் தம் உரிமையைத் துறப்பதைக் கண்டு, அவரால் அமைதியாக இருக்க முடியவில்லை. அன்னை கோசலை அழுது புலம்புவதைக் கண்டு தாளமுடியாமல் சொல்கிறார்—

*''அன்னையே! என் கையிலுள்ள இந்த வில், நான் செய்த தானங்கள், நான் செய்த அக்னி காரியங்கள், எனது வாய்மை ஆகியவற்றின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன், உண்மையாக, மனப்பூர்வமாக சகோதரர் இராமனையே பின்பற்றி நான் நடப்பேன்! இது சத்தியம். கொழுந்து விட்டெரியும் நெருப்பில் அல்லது கோரமான காட்டிற்குள் இராமன் புகப் போகிறார் என்றால், அன்னையே! நான், அவருக்கு முன்பாகவே அங்கே புகுந்திருப்பேன்; நிச்சயமாக நம்புங்கள்.*

*அம்மா! ஆதவன் உதயமானவுடன் இருள் முற்றிலுமாக ஒழிந்துவிடுவதைப் போல, என்னுடைய பராக்கிரமத்தினால் [எதிரிகளை எல்லாம் ஒழித்து] தங்கள் துயரத்தைத் துடைப்பேன். தாங்கள் அப்போது என் மாவீரத்தைக் காண்பீர்கள்; இராமபிரானும் காண்பார்.'' [அயோத்தியா காண்டம் 21/16–18]*

லட்சுமணன் வீரம் கொண்ட ஆவேச நிலையில், ஸ்ரீராமனிடம் உள்ள அன்பினால் தமது வசமிழந்து மேலும் துணிச்சல் நிறைந்த பல சொற்களைக் கூறினார். இராமபிரான், தன் தாயான கோசலைக்குத் தம் நிலையை எடுத்துக் கூறி அறிவுறுத்திய பிறகு, லட்சுமணனைச் சமாதானப்படுத்தும் வாயிலாக, *''லட்சுமணா! உனக்கு என்னிடமுள்ள எல்லையில்லாத பாசத்தை நான் அறிவேன். உன்னுடைய பராக்கிரமம், தைரியம், எவராலும் எதிர்கொள்ள முடியாத ஆன்மபலம் – இவற்றையும் அறிவேன். நல்ல லட்சணங்கள் உடையவனே! சத்தியம், பொறுமை ஆகியவை*

பற்றி, என் எண்ணங்களைப் புரிந்து கொள்ளாத நம் அன்னை ஈடு–இணையில்லாத பெருந்துயரத்தில் உழல்கிறார். தருமம்தான் உலகில் எல்லாவற்றைக் காட்டிலும் மிக உயர்வானது. தருமத்தில் சத்தியம் [வாக்குத் தவறாமை] நிலைபெற்றிருக்கிறது.

அவ்விதம் தருமத்தையே நம்பிக் கொண்டிருக்கும் நான், தந்தையின் ஆணையைப் புறக்கணிக்க மாட்டேன். தந்தையின் கட்டளையைத்தான் கைகேயிதேவி என்னிடம் கூறியிருக்கிறார். ஆகவே, [போர், எதிர்ப்பு, தன்னலம், மதிமயக்கம் என்றெல்லாம் கூறிப்] போரைத் தூண்டிவிடும் க்ஷத்திரியர்களுடைய தருமத்தில் மனத்தைச் செலுத்தாதே; தருமத்தையே பின்பற்று; கொடுமையான எண்ணம் வேண்டாம்; என் கருத்தை ஏற்றுக் கொள்'' [அயோத்தியா காண்டம் 21/39–41,43,44] என மொழிந்தார்.

லட்சுமணனது இயல்பில் ஒரு தனித்தன்மை. அவர் மனத்திற்கு சரி என்று தோன்றுவதை மறைக்காமல், இராமபிரானிடத்தில் கடுமையான சொற்கள் மூலம் சொல்லிவிடுவார். தம் கருத்துக்கு விரோதமாயிருந்தாலும் கூட, ஸ்ரீராமன் ஒன்று சொல்லிவிட்டால் அதை மீறமாட்டார்; அதன்படியே நடப்பார். அவரது சுபாவத்தில் துணிவான முயற்சியும் வீரமும் நிரம்பி வழிந்தன. அதனால்தான் ஸ்ரீராமன், 'பிராரப்தத்தை [முன்வினையை] வலியது' என்று சொல்லி, லட்சுமணனைச் சமாதானப்படுத்த முயன்றபோது, ''கோழை மற்றும் ஆற்றலில்லாதவன் எவனோ, அவன்தான் தலைவிதிக்கு அடிமையாகிறான். உலகத்தோரால் போற்றப்படும் உடல் வலிமை, மன வலிமை, அறநெறி வழுவாமை உடைய தீரர்கள் தெய்வத்தை வேண்டி நிற்பதில்லை. [விதியின் செயல்பாட்டிற்கு அடங்கிப் போவதில்லை.]

எவன் விதியை [தெய்வச் செயலை] வெல்லும் ஆற்றல் கொண்டிருக்கிறானோ, அவன் தன்னுடைய காரியத்தில் விதி குறுக்கிட்டு இடையூறு செய்தால், அவன் மனம் உடைந்து

போவதில்லை. தங்களுடைய பட்டாபிஷேகம் விதிவசத்தால் நின்று போனதைக் கண்ட மக்கள், இப்போது என் வீரத்தினால் விதியின் வலிமை அழிக்கப்படுவதையும் காணப் போகிறார்கள். [எதிர்க்கக் கூடிய] சிற்றரசர்களை எதிர்கொண்டு புறமுதுகிட்டு ஓடச் செய்வதற்கு என் ஒருவனுடைய பலமே போதும்.

என்னுடைய இரண்டு கைகளும் வெறும் உடலழகுக்காக இல்லை; கையிலுள்ள வில் வெறும் அலங்காரப் பொருளன்று; நீண்ட கத்தி ஒப்பனையாய் இடுப்பில் செருகிக் கொள்வதற்காக இல்லை; அம்புறாத்தூணியிலுள்ள பாணங்கள் வெறும் கம்புகள் அல்ல'' [அயோத்தியா காண்டம் 23/15,16,18,28,29] என்று லட்சுமணன் விடை கூற நேர்கிறது.

இதற்குப் பிறகு கோசலை, சீதாதேவி இருவருடனும் உரையாடல் நிகழ்கிறது. அங்கு லட்சுமணனுக்கு ஸ்ரீராமன் கொண்ட இறுதியான தீர்மானம் தெரிய வருகிறது. அப்போது அவர், தம் எண்ணங்களை அறவே ஒதுக்கிவிட்டு, ஸ்ரீராமனைப் பின்பற்ற முடிவு செய்கிறார். இராமபிரான் காட்டுக்குப் போக முனைவதைக் கண்டபோது, தாமும் அவருடன் போக வேண்டும் என்று மிகவும் துடிக்கிறார். அண்ணனைப் பிரிந்திருக்கும் துயரம் அவருக்குத் தாங்க முடியாதது. அவர் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகி வழியத் தொடங்கிற்று.

இரண்டு கைகளாலும் அண்ணலின் பாதங்களைப் பிடித்துக் கொண்டு, புகழ்வாய்ந்த சீதாதேவியிடமும், கடினமான நியமங்கள் காக்கும் ஸ்ரீராமனிடமும், ''பிரபுவே! விலங்குகளும் யானைகளும் நிறைந்த காட்டிற்குச் செல்வது என்று உறுதியான முடிவு எடுத்துவிட்டீர்கள் என்றால், நான் தங்களுக்கு முன்பே கையில் வில்லேந்தியவனாக, தங்களைப் பின்தொடர்ந்து காட்டிற்கு வருவேன்.

தாங்கள் உடன் இல்லாதுபோனால், நான் மட்டுமே சுவர்க்கத்தில் வாழ்வதையோ, தேவநிலையை அடைவதையோ,

எல்லா உலகங்களுக்கும் அதிபதியாக இருப்பதையோ விரும்ப மாட்டேன்'' [அயோத்தியா காண்டம் 31/3,5] என லட்சுமணன் முறையிடுகிறார்.

இதைக் கேட்ட ஸ்ரீராமன், லட்சுமணனைச் சமாதானப்படுத்தும் முறையில் பேசி 'வனத்திற்கு வரவேண்டாம்' என்றும், அயோத்தியிலேயே இருக்குமாறும் அறிவுறுத்தினார். அப்போது லட்சுமணன் மீண்டும் சொன்னார்— ''தாங்கள், என்னை [காட்டிற்கு வருவதற்கு] முன்பே அனுமதித்து விட்டீர்கள். பிறகு, இப்போது ஏன் என்னைத் தடுக்கிறீர்கள்?'' [அயோத்தியா காண்டம் 31/7]

இதைக் கேட்டு ஸ்ரீராமன் மறுமொழி பகன்றார்— ''லட்சுமணா! நீ, மிகவும் ஒட்டுதலுடைய அன்பன்; அறவழியில் நடப்பவன்; வீர–தீரன்; எப்போதும் நல்வழியிலேயே செல்பவன்; அன்பிற்குரியவன்; உயிருக்கு நிகரானவன்; எனக்குக் கட்டுப்பட்டு என் கட்டளைகளை நிறைவேற்றுபவன்; என்னுடைய தோழனும்கூட.

நீ, இப்போது என்னுடன் காட்டிற்கு வந்துவிட்டால், [இங்கே இருக்கும்] போற்றத்தக்க அன்னையரான கௌசல்யா தேவியையும் சுமித்திரையையும் யார் பொறுப்புடன் கவனித்துக் கொள்வார்கள்?'' [அயோத்தியா காண்டம் 31/10,11]

இதற்கு லட்சுமணன் சொல்கிறார்— ''நன்மனம் படைத்த கோசலை அன்னை, தன்னையும் என் தாயாரையும் மற்றும் என்னைப் போன்ற பல பேர்களையும் போஷித்துப் பரிபாலிக்கும் சக்தி கொண்டவர்.

ஆகவே நான், தங்களுடன் வருவதற்கு அனுமதியுங்கள். இதனால், தருமம் எதுவும் கெட்டுப் போய்விடாது. நானும் பிறவிப் பயனைப் பெற்றவனாவேன். தங்களுக்கும் நான் உதவி செய்பவனாக இருப்பேன்.

தினந்தோறும் கிழங்குகள், பழங்கள் மற்றும் காட்டில் தவசிகள் புசிக்கக்கூடிய ஏனைய பண்டங்கள் எவையெவை

உள்ளனவோ அவைகளையும், காட்டில் கிடைக்கும் மற்ற வஸ்துக்களையும், நித்யாக்னிஹோத்திரத்திற்குத் தேவையான மற்ற பொருட்களையும் [அதாவது சமித்து, குசம் முதலானவைகளையும்] தங்களுக்குக் கொண்டு வந்து தருவேன். [துஷ்ட பிராணிகள் உள்ள இடத்தில் பசு வளர்க்க முடியாது. பால், நெய் கிடைக்காது. காட்டுப் பசும்பால் வேள்விக்கு உதவாது.]

நான், தாங்கள் விழித்துக் கொண்டிருக்கும்போதும், உறங்கும்போதும் மற்ற எல்லாக் காரியங்களையும் செய்து முடிப்பேன். தாங்கள் [கொஞ்சம்கூடக் கவலைப்படாமல்] பிராட்டியாருடன் மலைச்சிகரங்களில் சுற்றி மகிழுங்கள்.'' [அயோத்தியா காண்டம் 31/23,24,26,27]

எவ்வளவு அழகிய தொண்டுணர்வு! அவர் தமது சுகத்தைப் பற்றிச் சிறிதும் எண்ணவில்லையே!

இதன் பிறகு என்ன நடந்தது? அவரது உறுதியான இந்த அன்புப் பிடிவாதத்தைக் கண்டு வேறு வழியின்றி ஸ்ரீராமனுக்கு அவரது வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளும்படி ஆகிவிட்டது. ஸ்ரீராமன், ''அன்னை சுமித்திரையிடம் சென்று விடைபெற்று வா!'' என்று சொன்னவுடனேயே, அவர்தம் தாயாரிடம் சென்று விடைபெற்றுத் திரும்பி வந்தார்.

அதற்குப் பின் காட்டுக்குப் போகும்போது இராமபிரான், லட்சுமணன், சீதாதேவி மூவரும் அன்னை சுமித்திரையின் திருவடிகளில் வணங்கினார்கள். அப்போது அவர் மகனின் உச்சியை முகர்ந்து, ''செல்வமே! நீ வனவாசத்திற்கென்றே படைக்கப்பட்டிருக்கிறாய். நண்பர்களிடத்தில் பேரன்பு கொண்ட நீ, காட்டில் இராமன் இங்குமங்கும் சுற்றி அலையும்போது கவனக்குறைவாக இருந்துவிடாதே. [அவனைப் பாதுகாப்பதில் நீ எப்போதும் விழிப்புடன் இருக்கவேண்டும்.]

மாசற்றவனே! துன்பத்தின் வசப்பட்டிருந்தாலும், செல்வச் செழிப்புடன் வளமாக இருந்தாலும், இராமன்தான் உனக்குக்

கதி. 'மூத்த சகோதரனுக்கு அடங்கி நடப்பது' என்பதுதான் இந்த உலகில் சான்றோர்களின் அனுஷ்டானம்.

குழந்தாய்! இராமனையே தந்தை தசரதராக எண்ணிக் கொள்; சீதையை நானாக [தாயாராக] எண்ணிக் கொள்; அரண்யத்தை அயோத்தியாக எண்ணிக் கொள். [இப்போது நான் உனக்கு அனுமதி வழங்குகிறேன்.] சரி, சௌக்கியமாகச் சென்று வா'' [அயோத்தியா காண்டம் 40/5,6,9] என ஆசி கூறி வழி அனுப்புகிறார். எவ்வளவு அழகிய உபதேசம்! தாயார் என்றால் இப்படியல்லவா இருக்கவேண்டும்! லட்சுமணனும் தமது உயிரைப் பணயம் வைத்து தாயின் கட்டளைப்படி நடந்து வந்தார்.

இதற்குப் பிறகு, சுமந்திரர் தேரைக் கொண்டு வர, ஸ்ரீராமன், சீதாதேவி, லட்சுமணன் மூவரும் தேரில் ஏறி வனத்திற்குச் சென்றுவிட்டனர். அப்போது குடிமக்களும் அன்பில் குழைந்து கூடவே சென்றனர். எவ்வளவோ எடுத்துக் கூறியும், அவர்கள் அயோத்திக்குத் திரும்பவில்லை. எனவே, அவர்கள் தூங்கும்போதே 'தமஸா' நதிக்கரையில் அவர்களைப் பிரிந்து இராமபிரான், லட்சுமணனுடனும் சீதாதேவியுடனும் சிருங்கிபேரபுரத்தை நோக்கிச் சென்று விட்டார். அங்கே அவர்கள் வேடுவ அரசன் குகனைச் சந்தித்தனர். அவனுக்கு நடந்தவற்றை எடுத்துக் கூறினர்.

சந்த்யோபாஸனை முடிந்த பின்னர் லட்சுமணன் கங்கை நீர் கொண்டு வந்தார். அதையே பருகிவிட்டு ஸ்ரீராமனும் சீதையும், லட்சுமணன் அமைத்த புற்களாலும் இலைகளாலுமான படுக்கையில் நித்திரை செய்தனர். அப்போது லட்சுமணன் அவர்கள் கால்களைக் கழுவிவிட்டு, சிறிது விலகிச் சென்று ஒரு மரத்தின் கீழே நின்றார். இவ்விதம் அண்ணனிடம் கொண்ட பக்தியின் காரணமாக லட்சுமணன் விழித்திருப்பதைக் கண்ட குகன், ''லட்சுமணரே! உங்களுக்கும் படுக்கை தயாராயிருக்கிறது. நீங்கள் சுகமாய்த் தூங்குங்கள். என் உறவினர்கள் மற்றும்

பரிவாரங்களுடன் கையில் வில்லை ஏந்திக் கொண்டு நான் காவல் காக்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்ட லட்சுமணன் அவனைப் புகழ்ந்துவிட்டு, ''வேடர்க்கரசரே! தசரதரின் மூத்த குமாரர், தன் மனைவி சீதாதேவியுடன் கட்டாந்தரையில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கும்போது, எனக்கு தூக்கம் வருமா? உயிர் வாழவோ, சுகங்களை அனுபவிக்கவோ இயலுமா?

தேவாசுரர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து வந்தாலும் யுத்தத்தில் எவரை எதிர்த்து வெற்றி பெற முடியாதோ, அப்படிப்பட்ட அவர் சீதாதேவியுடன்கூட புல்படுக்கையில் அமைதியாகத் தூங்குவதைப் பாருங்கள்'' [அயோத்தியா காண்டம் 51/9,10] என்று கூறினார்.

இதற்குப் பிறகு பொழுது புலர்ந்ததுமே கங்கைக் கரையை அடைந்த இராமபிரான், சாரதி சுமந்திரருக்கு விடைகொடுத்து அனுப்பினார். பிறகு மூவரும் படகில் அமர்ந்து கங்கையின் அக்கரை சேர்ந்து, இரவில் 'வரதா' என்ற நதியைக் கடந்து ஒரு மரத்தின் கீழே தங்கினர்.

அங்கே தரையைச் சுத்தம் செய்து, மென்மையான இலைகளைப் பரப்பினார், லட்சுமணன். ஸ்ரீராமனும் சீதாதேவியும் அதன் மேல் அமர்ந்தனர். அங்கே தம் தாய்–தந்தையரை எண்ணி வருந்திய ஸ்ரீராமன் லட்சுமணனிடம், ''தம்பி லட்சுமணா! நீ அயோத்திக்குத் திரும்பிப் போ. அங்கே சென்று தாயாருக்கு உதவியாயிரு. சீதையுடன் கூட நான் தனியே வனம் செல்ல விடு'' என்றார்.

அதைக் கேட்ட லட்சுமணன் உள்ளத்தைத் தொடும் சொற்களைச் சொன்னார்— ''இரகுநந்தனரே! தாங்கள் இல்லாமல் சீதாப்பிராட்டியாரோ, நானோ ஒரு முகூர்த்த காலம்கூட உயிரோடு இருக்க மாட்டோம் – தண்ணீருக்கு வெளியே எடுத்துப் போடப்பட்ட மீனைப் போல சிறிது நேரம் துடித்துவிட்டு மடிந்து போவோம். எதிரிகளை வாட்டுபவரே!

தாங்கள் இல்லாமல் நான் தந்தையாரையோ, தம்பி சத்ருக்னனையோ, பெற்றெடுத்த தாய் சுமித்திரையையோ, ஏன், சுவர்க்கத்தையோகூடப் பார்க்க விரும்பவில்லை.'' [அயோத்தியா காண்டம் 53/31,32]

அதற்குப் பிறகு காலையில் மூவரும் அங்கிருந்து புறப்பட்டு, முனிவர்களில் சிறந்த பரத்வாஜரைச் சந்தித்தனர். அங்கே அவரது ஆசிரமத்தில் ஒருநாள் ஓய்வு எடுத்தனர். மறுநாள் அவர் காட்டிய பாதையின் வழியாகச் சித்திரகூடத்தை நோக்கிச் சென்றனர். யமுனைக்கரையை அடைந்து, அதைக் கடப்பதற்கு லட்சுமணன் ஒரு படகு அமைத்தார். அதில் சீதை அமர்வதற்காகப் பிரம்பினாலான ஓர் அழகிய ஆசனம் படைத்தார். நாணத்துடன் சீதை அதில் உட்கார்ந்தார். லட்சுமணன், ஸ்ரீராமனுடன் தாமே அந்தப் படகைச் செலுத்திக் கரை சேர்ந்தார். அதிலிருந்து இறங்கி மூவரும் சென்றனர். முன்னால் லட்சுமணன், அவருக்குப் பின்னால் சீதை, அவ்விருவருக்கும் பின்னால் இராமபிரான் அவர்களைக் காத்துக் கொண்டு சென்றார். இவ்விதம் நடந்து அவர்கள் சித்திரகூடத்தை அடைந்தனர். அங்கே வால்மீகி முனிவரைப் பார்த்தனர். பிறகு இராமபிரானது அனுமதி பெற்று லட்சுமணப்பெருமான், தாமே அழகிய ஒரு பர்ணசாலையை நிர்மாணித்தார். அதிலேயே மூவரும் இனிதாக வசிக்கத் தொடங்கினர்.

காட்டில் வசிக்கும் போது பழங்களையும், கிழங்குகளையும், ஹோமத்திற்குத் தேவையான பொருட்களையும் சேகரிப்பது; சீதாதேவியின் ஆடைகளையும் நகைகளையும் வைத்திருக்கும் பெட்டி, ஆயுதங்கள் போன்றவற்றை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்வது; அவற்றைப் பாதுகாப்பது; குளிர்காலத்து இரவுகளில் பசும்வயல்களிடையே உள்ள பாதை வழியே சென்று ஆற்றிலிருந்து நீர் கொண்டு வருவது; வழியை அடையாளம் கண்டுகொள்ள வழியில் உள்ள மரங்களிலும் பாறைகளிலும் கந்தல்துணிகளை

அடையாளமாகக் கட்டிவைப்பது; பர்ணசாலையைத் தூய்மை செய்வது; சமையல் இடத்தைச் சுத்தமாக வைத்திருப்பது; அமர்வதற்குத் திண்ணைகள் அமைப்பது; அடுப்பெரிக்கச் சுள்ளி பொறுக்கி வருவது; இரவு முழுவதும் கண்விழித்து காவல் காப்பது போன்ற எல்லா வேலைகளையும் லட்சுமணன் மிகுந்த மகிழ்ச்சியுடன் நல்ல முறையில் செய்துவந்தார்.

நிற்க. இராமபிரானைத் திரும்ப அழைத்துச் செல்வதற்காகப் படையுடன் பரதன் சித்திரகூடம் வந்தபொழுது பரதனிடம் லட்சுமணனுக்குச் சந்தேகம் தோன்றிற்று. இராமபிரானிடம் கொண்டுள்ள ஆழ்ந்த அன்பினால், தன்வசமிழந்து பரதனைக் குறித்துச் சில கடுஞ்சொற்களைக் கூறிவிட்டார். ஆனால், பரதனைப் புகழ்ந்து இராமபிரான் கூறிய சொற்களைக் கேட்டவுடன், அவர் அடங்கி அமைதியாக இருந்துவிட்டார். பரதன் எல்லோருடனும் கலந்து பேசிய பிறகு, ஸ்ரீராமனுடைய பாதுகைகளுடன் அயோத்தி திரும்பிவிட்டார்.

இங்கே, ஸ்ரீராமச்சந்திரன் சீதையுடனும் லட்சுமணனுடனும் சித்திரகூடத்தை விட்டுக் கிளம்பி, அத்ரி முதலிய முனிவர்களுடைய அசிரமங்களில் தங்கிவிட்டு 'பஞ்சவடி' போய்ச் சேர்ந்தார். அங்கு வந்ததும் ஸ்ரீராமன் லட்சுமணனிடம், "நாம் வந்து சேர வேண்டிய இடம் இதுதான். இங்கே நாற்புறமும் பார்த்துத் தேடி ஒரு நல்ல இடம் பார். அங்கே நான், நீ, சீதை ஆகிய மூவரும் வசிக்கத் தகுதியானதும் வசதியானதுமான ஓர் ஆசிரமம் அமைப்பாய். தண்ணீர், பூக்கள், தர்ப்பை முதலியன அருகிலேயே கிடைக்கும்படியான இடமாகத் தேர்ந்தெடு" என்றார்.

அப்போது லட்சுமணன், தமது அறிவுக்கு முதன்மை கொடாது சொல்கிறார்— "காகுத்தனே! இந்த உலகில் தாங்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்தாலும் நான் எப்போதும் தங்களுக்குக் கட்டுப்பட்டவனே. [அதனால், 'உனக்குப் பிடித்தமான இடத்தைத் தேர்ந்தெடு' என்று

தாங்கள் கூறுவது முறையல்ல.] என் சொந்த விருப்பப்படி எதுவும் செய்யமாட்டேன். எனவே, தாங்களே தங்களுடைய விருப்பத்திற்கேற்ற இடத்தைச் சுட்டிக்காட்டி, 'இங்கே பர்ணசாலையைக் கட்டு' என்று எனக்கு ஆணையிடுங்கள்.'' [ஆரண்ய காண்டம் 15/7]

இக் கூற்றால் லட்சுமணன் விவேகமற்றவர் என்று நினைக்கக் கூடாது. அவர் அறிவாளி; எல்லாம் தெரிந்தவர். தேவை ஏற்படும்போது இராமபிரானது தொண்டில் தம் அறிவைப் பயன்படுத்தியிருக்கிறார். ஆனால், இராமபிரானால் ஆணையிடப்பட்ட வேலையைச் செய்வதில், அவருக்கு அதிக மனமகிழ்ச்சி ஏற்பட்டது.

இராமபிரான் அழகிய ஓர் இடத்தைக் காட்டி, அதன் சிறப்புக்களையும் அழகையும் எடுத்துக் கூறினார். லட்சுமணன் அங்கே உடனே, தம் அண்ணனுடைய ஆணைப்படி வசிக்கத் தகுதியான ஓர் ஆசிரமத்தை அமைத்தார். ஆசிரம வளாகத்திற்குள் அழகியதும் விசாலமானதுமான ஒரு பர்ணசாலையையும் கட்டினார். ஆசிரமத்தையும் பர்ணசாலையையும் பார்த்த ஸ்ரீராமனும் சீதாப்பிராட்டியும் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர். அவர்கள் இருவரும் லட்சுமணனின் திறமையைப் பாராட்டினர். ஸ்ரீராமன், லட்சுமணனை ஆரத் தழுவினார். அங்கே அவர்கள் மிகவும் ஆனந்தமாக வசிக்கத் தொடங்கினர்.

இலையுதிர் காலம் கழிந்தது. பனிக்காலம் வந்தது. அப்போது ஒரு நாள் சீதையுடன் நீராடச் சென்று கொண்டிருந்த ஸ்ரீராமனிடம், லட்சுமணன் பணிவோடு பின்வருமாறு சொன்னார்— ''புருஷோத்தமரே! இந்த குளிர்காலத்தில் பராக்கிரமம் மிக்கவரும், தங்கள் பிரிவால் துயரப்பட்டுக் கொண்டிருப்பவரும், தருமாத்மாவுமான பரதன், தங்களிடமுள்ள ஆழ்ந்த பக்தியால், பட்டணத்தில் தவநெறியை மேற்கொண்டு வாழ்கிறார். அரசு அதிகாரத்தையும், கௌரவத்தையும், பலவகையான

எண்ணற்ற சுகபோகங்களையும் துறந்து, உணவுக் கட்டுப்பாட்டுடன் தவம் செய்து கொண்டு, குளிர்ச்சியான மண் தரையில் படுத்துக் கொண்டிருக்கிறார்.

அவரும், இந்த வேளையில் ஆற்றில் நீராடும் பொருட்டு, அமைச்சர்களும் பிற குடிமக்களும் புடைசூழ, நாள்தோறும் சரயூ நதிக்குப் போய்க் கொண்டிருப்பாரல்லவா? மிகவும் சௌக்கியமாக வளர்ந்தவரும் மென்மையான உடல்வாகு உடையவருமான அவர், இரவின் கடைசி யாமத்தின் பனியால் தாக்கப்பட்டவராக, சரயூ நதியில் எவ்வாறு தலைமூழ்கி நீராடுவார்? ஐயோ!'' [ஆரண்ய காண்டம் 16/27–30]

லட்சுமணன், 'இராமபிரானிடம் மட்டுமே அன்பு கொண்டிருந்தார்; பரதனிடம் பகைமை கொண்டிருந்தார்' என்ற சிலரது கருத்தானது கண்டிக்கத்தக்கது என்பது இதன் மூலம் தெளிவாகிறது. லட்சுமணனது பேச்சைக் காணுங்கால், அவர் இராமபிரானுக்குத் துக்கம் தருபவர்களையும், அவரை அவமதிப்பவர்களையும் நிச்சயமாக மன்னிக்க விரும்பவே இல்லை. ஆனால், பரதன் குற்றமற்றவர் என்றும், மேலும் ஸ்ரீராமனுடைய பிரிவுத் துயரினால் தவவாழ்வு வாழ்கிறார் என்றும் அறிந்தவுடன், அவரிடத்தில் முன்னர் இருந்ததைவிட அதிக மதிப்பும் அன்பும் கொண்டார்.

ஒருநாள் நடந்த நிகழ்ச்சி— பஞ்சவடி ஆசிரமத்தில் அமர்ந்து இராமபிரான், லட்சுமணனிடம் பேசிக் கொண்டிருந்தார். அந்நேரம் அங்கே சூர்ப்பணகை வந்தாள். வந்தவள் தன்னை மணந்து கொள்ளும்படி ஸ்ரீராமனைக் கேட்டாள். இராமபிரான், அவளை லட்சுமணனிடம் அனுப்பி விட்டார். சூர்ப்பணகை அவரிடம் வந்து அதையே சொன்னாள்— ''தாமரையொத்த செவ்வண்ணத்தாளே! நான், என்னுடைய தமையனார் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் கட்டுப்பாட்டில் உள்ளவன்; இவர்களுக்குக் குற்றேவல் புரியும் எனக்கு மனைவியாகி, [நீயும்] வேலைக்காரியாக ஆகப் போகிறாயா? [ஸ்ரீராமனிடமே செல்]'' [ஆரண்ய

காண்டம் 18/9] என்று நகைத்தவாறே லட்சுமணன் அவளுக்கு விடையளித்தார். அவளும் ஸ்ரீராமனிடம் சென்றாள். அவர் மறுத்து பேச, அவள் சீதையின் மேல் பாய்ந்தாள். அப்போது ஸ்ரீராமன் உத்தரவிட, லட்சுமணன் அவளுடைய மூக்கையும் காதுகளையும் அரிந்துவிட்டார்.

இதற்குப்பின் கரன், தூஷணன் முதலிய அரக்கர்கள் ஸ்ரீராமன் மீது படையெடுத்து வந்தனர். அவர்கள் வருவதைக் கண்ட இராமபிரான் லட்சுமணனிடம் கூறினார்— "நிச்சயமாக, நீ இவ்வரக்கர்களைக் கொல்ல வல்லவன்தான். ஆனால், நானே இவர்கள் அனைவரையும் கொல்ல விரும்புகிறேன். எனவே சீதையைப் பாதுகாக்க, அவளைக் குகைக்குள் அழைத்துப் போ" என்று சொன்னார். லட்சுமணன் ஸ்ரீராமனது கட்டளையை ஏற்று, அவ்விதமே செய்தார்.

ஸ்ரீராமன், எல்லா அரக்கர்களையும் அழித்துவிட்டார். பிறகு, சூர்ப்பணகையின் தூண்டுதலால் இராவணன் சீதாதேவியைக் கவர்வதற்காக, மாரீசனின் துணையோடு பஞ்சவடிக்கு வந்தான். அங்கே மாரீசன், விநோதமான பொன்மான் வடிவுகொண்டு சீதையின் மனத்தைக் கவர்ந்தான். சீதையின் வேண்டுகோளால் ஸ்ரீராமன் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு, அதனைத் தொடர்ந்து சென்றார். அம்பெய்து அதைக் கொன்றார். இறக்கும்போது அவன், இராமபிரானது குரல் போல் தன் குரலை மாற்றிக் கொண்டு, 'ஹா சீதே! ஹா லட்சுமணா!' என்று உரத்த குரலில் கூவியலறினான். அதைக் கேட்ட சீதாதேவி பயந்தார்.

இராமபிரான் சங்கடத்தில் இருக்கிறார் என்றெண்ணி, ஸ்ரீராமனுக்கு உதவும் பொருட்டு விரைவில் போகும்படி லட்சுமணனிடம் சொன்னார். சீதை எவ்வளவோ சொல்லியும், லட்சுமணன் அண்ணனது கட்டளைக்கு மதிப்பளித்து, சீதாதேவிக்குக் காப்பாக நின்றுவிட்டார். அப்போது சீதாதேவி, அவருடைய அன்பையும் உட்கருத்தையும் குற்றம்சாட்டி

கடுமையான சொற்களால் சாடினார். அப்போதும் லட்சுமணன் அசைந்து கொடுக்கவில்லை. அவர் ஸ்ரீராமனது ஆற்றலைப் பற்றியும், அரக்கர்களது வஞ்சகத்தைப் பற்றியும் எடுத்துக் கூறி, சீதாதேவிக்குப் புரிய வைக்க முயன்றார். ஆனால், சீதாதேவி கோபாவேசத்தில் லட்சுமணனைக் குறித்துச் சொல்லத்தகாத சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டார். அப்போது லட்சுமணன், சீதாதேவியைக் காக்கும் பொறுப்பை வனதேவதையிடம் விட்டுவிட்டு, இராமபிரானைத் தேடிச் சென்றுவிட்டார். லட்சுமணன், ஸ்ரீராமனது ஆணையை மீறிய முதல் சந்தர்ப்பம் இதுதான்.

இங்கு இராவணன், சந்நியாசி வேடத்தில் வந்து சீதாதேவியைக் கவர்ந்து சென்றுவிட்டான். அங்கு லட்சுமணன், ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருக்கும் ஸ்ரீராமனை எதிர்கொண்டார். இராமபிரான் லட்சுமணனிடம், "நீ, சீதையைத் தனியாக விட்டு வந்துவிட்டாயே! இது மிகவும் தீமை விளைவிக்கும் செயலாயிற்றே!" என்றார். அவர் மேலும் பலவாறு பேசிக் குறைப்பட்டுக் கொள்வதைக் கண்ட லட்சுமணன் சொன்னார்— "அண்ணா! நான், என் விருப்பப்படி பிராட்டியாரைத் தனியே விட்டுவிட்டு வந்துவிடவில்லை. பிராட்டியாரின் கடுமையான சொற்களால் துரத்தப்பட்டே நான், தங்களை நோக்கி வர நேர்ந்தது." [ஆரண்ய காண்டம் 59/6]

இவ்வாறு லட்சுமணன் நடந்தவையனைத்தையும் எடுத்து விளக்கியபோதும், ஸ்ரீராமனுக்குச் சமாதானம் ஏற்படவில்லை. வழியில் பலவாறு புலம்பிக் கொண்டே ஆசிரமத்திற்கு வந்தார். அங்கே குடில் சூனியமாக இருந்தது. தேவியின் பிரிவுத் துயர் அவரை மிகவும் வாட்டியது; புலம்பிக் கதறத் தொடங்கினார். அப்போது லட்சுமணன், அவருக்குப் பலவாறு ஆறுதல் சொல்லித் தைரியமூட்ட முயன்றார். இவ்வாறு பிரிவாற்றாமையால் ஸ்ரீராமன் கலங்கும் போதெல்லாம் லட்சுமணன், அவருக்குத் தைரியமூட்ட முயன்றார். அன்பான

வார்த்தைகளைக் கூறி, அவருடைய ஆற்றலையும் மகிமையையும் நினைவுறுத்தி, அவரைத் தேற்றினார்.

இரு சகோதரர்களும் சீதாதேவியைத் தேடிக் கொண்டு இங்குமங்கும் அலைந்து திரிந்து, வீழ்ந்து கிடக்கும் ஜடாயுவிடம் வந்து சேர்ந்தனர். அவருடைய ஈமக்கடன்களை முடித்து, பிறகு கபந்தனை அழித்தார்கள். அவனது ஆலோசனைப்படி அவர்கள் பம்பா நதிக்கருகே வந்தனர். அங்கே சபரியைச் சந்தித்தனர்.

பின்னர், அனுமானின் உதவியால் சுக்ரீவனின் நட்பு கிடைத்தது. சுக்ரீவன், சீதாதேவி கீழே வீசியெறிந்த ஆடை—அணிகலன்களைக் காட்டினான். அந்த நகைகளை இராமபிரான் எடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டு லட்சுமணனிடம், ''இவற்றைப் பார்!'' என்றார். அவற்றைப் பார்த்த லட்சுமணன் சொன்னார்—

''பகவானே! நான், [பிராட்டியின் புஜங்களில் அணியும்] தோள்வளைகளைப் பார்த்தறியேன்; காதில் அணியும் குண்டலங்களையும் பார்த்ததில்லை. ஆம்! அவர்களுடைய பாதச்சிலம்புகளின் அடையாளம் நிச்சயமாகத் தெரிகிறது. நாள்தோறும் அவர் திருவடிகளில் விழுந்து சேவித்து வந்ததால், அவற்றைப் பார்த்திருக்கிறேன்'' [யுத்த காண்டம் 6/21]. பிரம்மசரிய விரதத்திற்கும், அண்ணன் மனைவி 'வணங்கத்தக்கவள்' என்பதற்கும் எவ்வளவு அழகான, உயர்ந்த எடுத்துக்காட்டு!

இதற்குப் பிறகு சுக்ரீவனுடன் நடந்த உரையாடலில், எல்லா விவரங்களும் எடுத்துரைக்கப்பட்டன. வாலிக்கும் சுக்ரீவனுக்கும் இடையே போர் நடந்தது. ஸ்ரீராமன் ஒரே அம்பினால் வாலியைத் தாக்கி வீழ்த்தினார். சுக்ரீவன், கிஷ்கிந்தைக்கு அரசசராக அபிஷேகம் செய்விக்கப்பட்டான். ஸ்ரீராமனும் லட்சுமணனும் பிரவர்ஷண பர்வதத்தில் தங்கி மழைக்காலத்தைக் கழித்தனர். இலையுதிர் காலம் வந்தது. சுக்ரீவன், இன்பம் துய்த்தலில் ஈடுபட்டு, தாம்

வாக்களித்ததை மறந்து வராமல் இருந்துவிட்டான். இதைக் கண்டதும் ஸ்ரீராமனது கட்டளைப்படி லட்சுமணன் சுக்ரீவனிடம் சென்றார். அந்தக் கட்டத்தில் வால்மீகி ராமாயணத்தில் இடம்பெறும் லட்சுமணனுடைய வீரம், தீரம், சீலம் ஆகியவற்றின் வர்ணனை மிகவும் அழகியது.

அதுசமயம் சுக்ரீவனிடம், "வானரர் தலைவனே! எவனொருவன் முதலில் தன் காரியத்தை முடித்துக் கொண்டு, உபகாரம் செய்த அந்த நண்பருக்குப் பிரதியுபகாரம் செய்யாமலிருக்கிறானோ, அந்த செய்ந்நன்றி மறந்தவன், எல்லா உயிர்ப் பிராணிகளின் நலனை முன்னிட்டுக் கொல்லத்தக்கவன். வேதியரைக் கொல்லுதல், கள் குடித்தல், பசுவைக் கொல்லுதல், விரத நியமங்களைக் கைவிடுதல் — இந்தப் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் சான்றோர்களால் வரையறுக்கப்பட்டுள்ளது. ஆனால், செய்ந்நன்றி மறத்தலுக்குக் கழுவாயே கிடையாது!" [கிஷ்கிந்தா காண்டம் 34/10,12] என வெகு அழகாக லட்சுமணன் அறிவு புகட்டுகிறார்.

அவ்வமயம் தாரை [வாலியின் மனைவி] லட்சுமணன் புரிந்துகொள்ளும்படி பணிவாகச் சில சமாதான வார்த்தைகளைக் கூறி, அவரைச் சாந்தப்படுத்தினாள். அதற்குள் சுயநிலை அடைந்த சுக்ரீவன் லட்சுமணனிடம் சொன்னான்— "எதிரிகளை மாய்க்கும் மாவீரரே! தன்னுடைய [எல்லையற்ற வீரத்தை வெளிக்காட்டி நிகழ்த்திய] செயல்களினால் பெரும்புகழ் பெற்ற அந்த மாமனிதருடைய பராக்கிரமத்திற்கு ஈடான கைம்மாற்றை, என்னால் எப்படிச் செய்ய முடியும்?

தருமாத்மாவான ஸ்ரீராமன், அளவிட முடியாத தனது பேராற்றலாலேயே இராவணனைக் கொல்லப் போகிறார்; சீதாப்பிராட்டியாரைத் திரும்பவும் அடையப் போகிறார்; என்னுடைய உதவி ஒரு நிமித்தமாக மட்டுமே இருக்கும்." [கிஷ்கிந்தா காண்டம் 36/6,7]

அவனது மொழிகளைக் கேட்ட லட்சுமணன் அமைதியும் மனநிறைவும் அடைந்து, சுக்ரீவனைப் புகழ்ந்து பேசி, அவனையும் அழைத்துக் கொண்டு இராமபிரானிடம் வந்தார். அதற்குள் சுக்ரீவனது அழைப்புக்கு இணங்க, எண்ணற்ற வானரர்கள் வந்து சேர்ந்தனர். பிராட்டி சீதையைத் தேடப் பல திக்குகளிலும் அவர்கள் அனுப்பப்பட்டார்கள்.

அனுமான், இலங்கைக்குச் சென்று சீதாதேவியைக் கண்டார். அங்கிருந்து திரும்பிவந்து ஸ்ரீராம–லட்சுமணர்களிடம் சீதாதேவியின் துயர நிலையை எடுத்துக் கூறினார். அதன் பின்னர் எண்ணிறந்த வானரர்கள் கொண்ட பெரும்படையை அழைத்துக் கொண்டு ஸ்ரீராம–லட்சுமணர்கள் கடற்கரைக்கு வந்து சேர்ந்தனர். அங்கே சரணாகதி அடைந்த விபீஷணனுக்கு ஸ்ரீராமன் தஞ்சமளித்தார். கடலின் மேல் 'சேதுபாலம்' கட்டப்பட்டது. ஸ்ரீராம–லட்சுமணர்கள் படைகளுடன் கடலைத் தாண்டி இலங்கை வந்தனர். இலங்கையில் அரக்கர்களுடன் பயங்கரமான போர் நிகழ்ந்தது.

அப்போது ஒருநாள் நடந்த நிகழ்ச்சி. எல்லா வானரர்களும் பார்த்திருக்க, மேகநாதன் மாயையால் சீதையின் உருவத்தைச் செய்து, அந்த மாயா சீதையைக் கொன்று எல்லோரையும் துயரில் ஆழ்த்திவிட்டான். அனுமான் மூலம் இந்தச் செய்தியைக் கேட்ட அண்ணல் இராமபிரான் துயர மிகுதியால் நினைவிழந்துவிட்டார். அவரது மயக்கத்தைத் தெளிவிக்க பல முயற்சிகள் நடந்தன. அப்போது லட்சுமணன், ஸ்ரீராமனின் ஆற்றலை வெகுவாகப் புகழ்ந்து சொன்னார்—

''வீரரே! இராமனே! எழுந்திருங்கள். முந்தைய துயரம் போதாதென்று இப்போது இந்திரஜித்தினாலும் மகத்தான துன்பம் வந்திருக்கிறது. எனது வீரத்தால், அந்தத் துன்பத்தைத் துடைத்தெறிவேன். நெடுங்தோளாய்! நெஞ்சுறுதி கொண்டவரே! மானுட வேங்கையே! மகாத்மாவாகிய தங்களிடம் உள்ள பேராற்றலைத் தாங்கள் அறியீரோ?

மகாத்மாவிற்குரிய மகத்துவத்தையும் ஆற்றலையும் தாங்கள் அறியவில்லையா? விரதங்களைக் காத்து நிறைவேற்றுபவரே! தாங்கள் எழுந்து நில்லுங்கள்.'' [யுத்த காண்டம் 83/42,43]

இவ்விதம் லட்சுமணன் மூர்ச்சையடைந்த ஸ்ரீராமனை மடியில் வைத்துக் கொண்டு அவருக்கு நினைவு வரச்செய்ய முயன்றார். அச்சமயம் விபீஷணனும் அங்கே வந்தார். விபீஷணன் விஷயம் யாதென வினவ, சீதை கொலையுண்டதைக் கேட்டு, ஸ்ரீராமன் துயர்கொண்டு நினைவிழந்து கிடக்கிறார் என்று லட்சுமணன் சொன்னார். அதைக் கேட்ட விபீஷணன் ஸ்ரீராமனுக்குப் பல காரணங்களைக் காட்டி, ''மேகநாதனால் சீதாதேவியைக் கொல்ல முடியாது. இதெல்லாம் அரக்கர்களுக்குக் கை வந்த மாயையின் செயல். தாங்கள் கவலைப்பட வேண்டாம். மேகநாதன் இவ்வமயம் நிகும்பிலைக்கு வேள்வி செய்யச் சென்றிருக்கிறான். அந்த வேள்வி முடிவடைந்துவிட்டால், அவனை வெல்வது கடினமாகிவிடும். நாம் உடனே சென்று அவனுடன் போரிட்டாக வேண்டும். எனவே, லட்சுமணனை உடனே என்னுடன் அனுப்பி வையுங்கள்'' என உரைத்தார்.

இவ்விதம் விபீஷணன் சொல்வதைக் கேட்ட ஸ்ரீராமன் எச்சரிக்கை அடைந்து, மேலே செய்ய வேண்டியதில் கவனம் செலுத்தினார். விபீஷணனை மீண்டும் எல்லாத் தகவல்களையும் திரும்பச் சொல்லும்படி கேட்டு விஷயங்களை அறிந்து கொண்டார். பிறகு, லட்சுமணனிடம் மேகநாதனது பராக்கிரமத்தையும் மாயையின் ஆற்றலையும் விவரமாகச் சொல்லிவிட்டு, சுக்ரீவன், விபீஷணன் – இவர்கள்கூடச் சென்று 'மேகநாதனைக் கொல்வாயாக' என்றார். லட்சுமணனும் மேகநாதனைக் கொல்வதாகச் சூளுரைத்து விட்டு, இராமபிரானை வலம் வந்து வணங்கி படைகளுடன் விபீஷணனையும் அழைத்துக் கொண்டு சென்றார்.

மேகநாதனுக்கும் லட்சுமணனுக்கும் மிகவும் கடுமையான போர் நடந்தது. அதில் லட்சுமணன் தம்முடைய பெரும்

வீரத்தையும், தைரியத்தையும், சிறந்த போர்த்திறனையும் காட்டினார். அவர் மேகநாதனுடைய குதிரைகள், சாரதி, தேர் எல்லாவற்றையும் அழித்துவிட்டு, மீண்டும் மீண்டும் அவனுடைய பல விற்களை முறித்துக் கீழே தள்ளினார். அரக்கர்களின் பெரும்படையையும் கலக்கினார். இறுதியில் மேகநாதனையும் வதம் செய்து, அனைவரையும் வியக்க வைக்கும் அற்புதமான செயலைச் செய்து முடித்தார். பிறகு அவர், ஸ்ரீராமனிடம் வந்து வணங்கினார். ஸ்ரீராமச்சந்திரன், அவரை மார்புற அணைத்துக் கொண்டு அவரைப் புகழ்ந்தார்—

''தம்பி லட்சுமணா! எவராலும் செய்ய முடியாத அரியசெயலைச் செய்து, [உலகுக்கே] மங்களத்தைக் கொடுத்திருக்கிறாய்! இப்போது, போரில் இராவணனின் மைந்தன் இந்திரஜித் மாய்க்கப்பட்டுவிட்டதால், இராவணனும் மாண்டதாகவே நான் நினைக்கிறேன். தீயவனான அந்தப் பகைவன் மாண்டு போய்விட்டதால், நமக்கு வெற்றி நிச்சயம்.'' [யுத்த காண்டம் 92/13]

இதற்குப் பிறகு, ஸ்ரீராமனது கட்டளைப்படி வைத்தியர் சுஷேணன் மருந்து கொண்டு, லட்சுமணனது உடல் வலியையெல்லாம் போக்கிவிட்டான். லட்சுமணனும் உடல் நலனைத் திரும்பப் பெற்றார்.

மேகநாதன் கொல்லப்பட்டதை அரக்கர்கள் சொல்லக் கேட்ட இராவணன் மிகவும் துயரமடைந்தான். பெருங்கோபத்துடன் படையை அழைத்துக் கொண்டு போரிட வந்தான். பயங்கரமான போர் நடந்தது. அந்தப் போரில் இராவணனது சக்தி பாணத்தால் லட்சுமணன் மூர்ச்சை அடைந்தார். அதைக் கண்ட இராமபிரானுக்குப் பெரும் துயரம் ஏற்பட்டது. அவர் தம்பியின் அரும்பணிகளையும் அன்பையும் சொல்லிச் சொல்லிப் புலம்பினார். அதிலிருந்தும் லட்சுமணன் மீது ஸ்ரீராமன் வைத்திருந்த அன்பு நன்கு வெளியாகிறது.

சுஷேணன், அனுமானை அனுப்பி மூலிகைகளைக் கொணர்ந்து, லட்சுமணனை நினைவு பெறச் செய்தான். அதற்குப் பிறகு உடல்நலமடையச் செய்தான். ஸ்ரீராமனுக்கும் இராவணனுக்குமிடையே கோர யுத்தம் நிகழ்ந்தது. இறுதியில் இராவணன் மாண்டான்.

பின்னர் சீதாதேவியை அழைத்து வந்தனர். அரசிக்குரிய மரியாதையுடன் அவர் பல்லக்கில் அமர்ந்து வந்தார். ஆனால் ஸ்ரீராமன், 'அவர் நடந்தே வரவேண்டும்' என்று விபீஷணன் மூலம் கட்டளையிட்டார். இது லட்சுமணனைப் பெரிதும் உறுத்தியது. ஆனால், ஸ்ரீராமனது விருப்பம் என்பதால் அவர் மௌனமாக இருந்துவிட்டார். அருகில் வந்த சீதாதேவியை ஸ்ரீராமன் துறந்துவிட்டார். லட்சுமணனுக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. இருந்தும் சீதாதேவியின் சொற்படி, அண்ணனின் உறுதியான ஆணையென்று அறிந்து, அவர் அக்னிப்பிரவேசத்திற்கான சிதை தயார் செய்தார். சீதாதேவி அக்னி பரீட்சைக்கு உள்ளானார். எல்லா தேவர்களும் வந்தனர். மகாராஜா தசரதரும் வந்தார். அவர், லட்சுமணனிடம் பிரபு ஸ்ரீராமனுடைய பெருமையையும் ஆற்றலையும் புகழ்ந்து, அவருக்குச் சேவை செய்வதில் ஈடுபட்டிருக்கும்படி உற்சாகமூட்டினார்.

பிறகு, புஷ்பக விமானத்தில் அமர்ந்து எல்லோரும் அயோத்தி வந்தனர். அவர்கள், தாய்மார்களையும் பரத–சத்ருக்னர்களையும் சந்தித்தனர். அவர்களுடன் கூடி கலந்து மகிழ்ந்தார். பிறகு முடிசூட்டு விழா நடந்தது. ஸ்ரீராமன் அரியாசனம் ஏறினார். மூன்று தம்பிமார்களும் அவருக்குப் பணிவிடை செய்தனர். இவ்விதம் ஆனந்தமாக வெகுகாலம் கழிந்தது.

இதன்பிறகு சீதாதேவியைப் பற்றி எழுந்த பழிச்சொல்லைக் கேட்ட ஸ்ரீராமன், சீதாதேவியைத் துறக்க எண்ணலானார். எல்லாத் தம்பிகளையும் அழைத்து, ''நீங்கள் அமைதியாக நான் சொல்வதைக் கேளுங்கள்! சீதையின் காரணமாக மக்களிடையே என்மீது அவச்சொல் பரவுகிறது. இலங்கையில்

சீதை நெருப்பில் குதித்து, எல்லோருக்கும் 'தான் தூய்மையானவள்' என்று புலப்படுத்திவிட்டாள். லட்சுமணன் எதிரிலேயே எல்லா தேவதைகளும் மகரிஷிகளும் 'சீதை குற்றமற்றவளே' என்று சொல்லிவிட்டனர். அவள், 'ஒரு குற்றமும் செய்யாதவள்' என்று எனக்கும் தெரியும். இருந்தும், இந்தப் பழிச்சொல்லை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. எனவே லட்சுமணா! நாளை காலையில் நீ, அவளைத் தங்கரதத்தில் அமர்த்திக் கங்கைக்கரைக்கு அழைத்துப் போய் வால்மீகி ஆசிரமத்தருகே விட்டுவிட்டு வா'' என்றார்.

ஸ்ரீராமன் இட்ட இந்த ஆணையின் கொடிய விளைவுகளை லட்சுமணன் நன்றாகவே உணர்ந்தார். ஆனாலும் லட்சுமணனைத் தவிர யாராலும் இந்தக் கட்டளையை நிறைவேற்ற இயலாது என்று இராமபிரான் எண்ணினார். லட்சுமணன், தம்மிடம் வைத்திருந்த அன்பில் அவருக்கு முழுநம்பிக்கை உண்டு. அதனால்தான் இதயத்தைப் பிளக்கும் இந்த ஆணையை நிறைவேற்றும் பொறுப்பை லட்சுமணனுக்குத் தந்தார். தவிர, தம்மேல் ஆணையிட்டு எதுவும் வாயைத் திறந்து பேச முடியாமல் செய்துவிட்டார். அதனால் லட்சுமணன் ஒன்றும் மறுத்துப் பேச முடியவில்லை.

லட்சுமணன் எவ்வளவு வேதனையைச் சகித்துக் கொண்டு இந்தக் கட்டளையை நிறைவேற்றினார் என்பது இந்தக் கட்டத்தைப் படித்தால் புரியும். இந்தச் சிறிய கட்டுரையில் முழு உணர்ச்சியைத் தெளிவாகக் கொண்டுவர முடியாது. சீதாதேவியை வனத்தில் விடும்போது துயரில் மூழ்கிக் கைக்கூப்பியவாறு லட்சுமணன் சொல்கிறார்—

''வைதேகிப் பிராட்டியே! மன்னர், என்னிடம் ஒப்படைத்த இந்தப் பணி, என்னை முள்ளாகக் குத்துகிறது. இந்தச் செயலினால், உலகத்தில் எனக்கும் [மன்னருக்கும்] பெரும் பழி ஏற்படப் போகிறது.'' [கிஷ்கிந்தா காண்டம் 47/4]

இது மட்டுமல்லாமல் லட்சுமணன், ''தாயே! இதைவிட எனக்கு மரணம் ஏற்பட்டிருந்தால் நன்றாக இருக்கும்!'' என்றும் கூறினார். இப்படிப்பட்ட கொடுமையான கட்டளையை நிறைவேற்றுவது, லட்சுமணன் ஒருவராலேயே ஆகக்கூடிய செயலாயிருந்தது. அங்கிருந்து திரும்பி வரும்போது லட்சுமணனுக்கு ஏற்பட்ட கவலையெல்லாம் இதுதான். சீதாதேவியில்லாமல் எப்படி ஸ்ரீராமன் உயிர் வாழ்வார்? என்பதுதான். இவ்விதம் சுமந்திரருடன் உரையாடியவண்ணம் அவர் அயோத்தி வந்து சேர்ந்தார். அவர், ஸ்ரீராமனின் பாதங்களை வணங்கி, சீதாதேவியை விட்டு விட்டு வந்த விவரத்தை எடுத்துச் சொன்னார். ஸ்ரீராமன் துயருற்றுக் கலங்கினார். அவருக்குப் பலவாறும் ஆறுதல் சொன்னார், லட்சுமணன். அதனால் சற்று ஆறுதலடைந்து, ''தம்பி! லட்சுமணா! இந்தப் பயங்கர வேளையில் உன்னைப் போன்ற ஒரு தம்பி கிடைப்பது கடினம். மங்களமானவனே! நீ சிறந்த அறிவாளி; என் மனம்போல் நடப்பவன்!'' என்று தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்.

இதற்குப் பிறகு அசுவமேத யாகத்திற்கு ஏற்பாடு நடந்தது. சீதாதேவியையும் லவகுசர்களையும் உடன் அழைத்துக் கொண்டு வால்மீகி முனிவர், அந்த யாகத்திற்கு வந்தார். குசனும் லவனும் இராமாயணக் கதையைப் பாடினர். ஸ்ரீராமனது ஆணைப்படி சீதாதேவி, தமது கற்புநெறியின் தன்மையை மெய்ப்பித்து பூமிக்குள் மறைந்துவிட்டார்.

இதன்பின் பிரம்மதேவர் சொல்லச் சொன்ன ஒரு செய்தியைச் சொல்வதற்காக ஒரு தபஸ்வி வந்தார். அவர், ''நாம் இருவரும் பேசும்போது, யாராவது நம்மைப் பார்த்தாலோ அல்லது நாம் பேசுவதைக் கேட்டாலோ, அவரைக் கொல்ல உத்தரவிட வேண்டும்!'' என்று இராமபிரானிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டு, தனிமையில் இராமபிரானின் 'மகாபிரயாண'த்தைப் பற்றி, பிரம்மா சொன்ன தகவலைத் தெரிவித்தார். அதே வேளையில் துர்வாச முனிவர் வந்து

அவசரமாக, ஸ்ரீராமனைச் சந்திக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தார். அவருடைய சாபத்திலிருந்து குலத்தையே காப்பாற்ற, தமது உயிருக்கு ஆபத்து வரும் என்று அறிந்திருந்தும், லட்சுமணன் தம் உயிர்மேல் உள்ள ஆசையைத் துறந்து, மகரிஷி வந்ததைச் சொல்ல உள்ளே சென்றார். தண்டனை கொடுக்க தயங்கிய இராமபிரானைத் தம்மைக் கொல்ல உத்தரவிடும்படி கேட்டுக் கொண்டார். இராமபிரான் எல்லோருடைய ஆலோசனையின்பேரில் கொலைக்கு மாற்றாக லட்சுமணனைத் துறந்தார். பிறகு, அவருடைய பிரிவைத் தாங்க முடியாமல், ஒருநாள் கூட இந்த உலகில் தங்க விரும்பாது சரயூநதிக்குச் சென்று, தமது யோகபலத்தின் மூலம் பரமபதத்திற்கு எழுந்தருளிவிட்டார்.

லட்சுமணனின் பெருமையை யாரால் வர்ணிக்க முடியும்? உயர்ந்த லட்சியம், அன்பு, அறிவாற்றல், வஞ்சனையற்ற நேர்மை, நல்ல அறிவுரை வழங்கும் குணம், கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பு, திறமை, நட்பு ஆகிய இக்குணங்கள் சிறப்பாக ஒருங்கே சேர்ந்திருப்பதை இவருடைய சரித்திரத்தில்தான் காண முடிகிறது. அனைத்துலகமும் ஸ்ரீராமனது பெருமையைப் பாடி மகிழ்கிறது. ஸ்ரீராமன், பரதனுடைய குணங்களைப் புகழ்கிறார். ஸ்ரீராமன், பரதன் இருவருமே லட்சுமணனின் புகழ் பாடுகிறார்கள். அப்படிப் பெருமைக்குரிய லட்சுமணனின் மகிமையை நான் இந்தச் சிறிய கட்டுரையில் எப்படி வர்ணித்துவிட முடியும்?



ஒன்று ஆய், இரண்டு சுடர் ஆய், ஒரு மூன்றும் ஆகி,
பொன்றாத வேதம் ஒரு நான்கொடு, ஐம் பூதம் ஆகி,
அன்று ஆகி, அண்டத்து அகத்து ஆகி, புறத்தும் ஆகி,
நின்றான் ஒருவன்; அவன் நீள் கழல் நெஞ்சில் வைப்பாம்.

— கவிச்சக்கரவர்த்தி கம்பன்

# 4. பரதனுடைய ஆதர்ச வாழ்க்கை

பரதனுடைய ஆதர்ச [உன்னத] வாழ்க்கை மிகவும் பொலிவு மிக்கது; எடுத்துக்காட்டாகத் திகழ்வது. அவரிடம் எந்த இடத்திலும் எந்தக் குறையும் காணப்படவில்லை. அவருடைய மகிமை எல்லையற்றது. பரதன், ஸ்ரீவிஷ்ணுவின் அம்சாவதாரம் என்றே வால்மீகி ராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறது. அத்துடன் அவருடைய சரித்திரம், அவரைச் சாதுக்களில் தலைசிறந்தவராகவும், பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் ஒரு யஜமான பக்தராகவும், மகாத்மாவாகவும், பற்றற்றவராகவும், பக்தியை முதன்மையாகக் கொண்ட கர்மயோகியாகவும் நிரூபிக்கிறது. பரதன் தருமத்தையும் நீதியையும் அறிந்தவர்; நற்குணங்கள் நிறைந்தவர்; தியாகசீலர்; புலனடக்கமும் நன்னடத்தையும் உள்ளவர். அன்பு, பணிவு – இவற்றின் உருவமாய்த் திகழ்ந்தார். சிரத்தை கொண்டவராகவும் அறிவாளியாகவும் விளங்கினார். இவரிடத்தில் வைராக்கியம், சத்தியம், தவம், பொறை, சகிப்பு, கருணை, வாத்ஸல்யம், தீரம், வீரம், ஆழம், எளிமை, சாந்தம், இனிமை, தற்பெருமை கொள்ளாமை, எல்லோரையும் நண்பராக்கிக் கொள்ளும் தன்மை முதலிய குணங்கள் சிறப்பாக வளர்ச்சியடைந்து காணப்படுகின்றன. சகோதர பாசத்திற்கு இவர் ‘உயிருள்ள உரு’ போன்றவர்.

## பரதனுக்குத் தந்தையிடமிருந்த பக்தி

திருமணம் முடிந்த உடனேயே பரதன், தம்முடைய அம்மானுடன் பாட்டனார் வீட்டுக்குப் போய்விட்டார். அதனால், இராமாயணத்தில் பரதன் பிதாவிடம் கொண்டிருந்த பக்தியைக் காட்டும் வர்ணனை சிறப்பாக இடம் பெறவில்லை. ஆனால், பாட்டனார் வீட்டில் இருந்தபோது ஒருநாள், அவர் நண்பர்களின் கூட்டத்தினிடையே தாம் கண்ட கெட்ட கனவைப் பற்றிச் சொல்லி, தம்முடைய தகப்பனார் விஷயமான துயரம், பிறகு அயோத்தி வந்த பிறகு அன்னையிடம் தந்தையின் ஸ்வர்க்கவாசம் பற்றிய செய்தியைக் கேட்டபோது

துயரால் அவருக்கு ஏற்பட்ட நிலை, அப்போது தந்தையைக் குறித்து அவர் அழுது புலம்பிய முறை – இவற்றின் மூலம் அவருக்குத் தந்தையிடம் இருந்த சிரத்தையுடன் கூடிய உண்மையான அன்பு நன்கு தெரிய வருகிறது.

அவரிடம் ''தைரியமாக இரு'' என்று அன்னை சொன்னபோது பரதன் சொல்கிறார்— ''மன்னர் தசரதர், இராமபிரானுக்கு முடிசூட்டப் போகிறார்; அல்லது, ஒரு மகாயாகத்திற்கு அவர் சங்கற்பம் செய்து கொள்ளப் போகிறார் என்று, மிகவும் சந்தோஷத்துடன் முடிவு செய்து கொண்டு, அங்கிருந்து புறப்பட்டு வந்தேன். ஆனால், இங்கு நடந்திருப்பதோ நேர்மாறாகவன்றோ உள்ளது. எப்போதும் என் நல்வாழ்வில் அக்கறையுடைய என் தந்தையார், இனிக் காணக் கிடைக்கமாட்டார் என்று ஆகிவிட்டதும் என் உள்ளம் உடைந்து போய்விட்டது.'' [அயோத்தியா காண்டம் 72/27,28]

## சகோதர பாசம்

இவ்விதமாகத் தந்தையை நினைத்து வருந்தும்போதே பரதனது உள்ளத்தில் இராமபிரானிடம் இருந்த அன்பு பொங்கி வழிகிறது.

''என்னுடைய சகோதரரும், தந்தைக்கு ஒப்பானவரும், கஷ்டமான காரியங்களையும் சுலபமாக முடித்துவிடக் கூடியவருமான எந்தப் பேரறிவாளருக்கு நான் தொண்டனோ, அந்த இராமபிரானுக்கு நான் திரும்பி வந்துவிட்ட செய்தியைத் தெரிவியுங்கள்.

அறம் அறிந்தவனுக்கு அவனுடைய அண்ணன், பெற்ற தந்தைக்கு நிகரானவரன்றோ? வணக்கத்திற்குரிய அவருடைய திருவடிகளில் விழுந்து நமஸ்காரம் செய்யப் போகிறேன். இனிமேல், அவர்தானே எனக்குப் புகலிடம்?'' [அயோத்தியா காண்டம் 72/32,33] என அவர் மொழிகிறார்.

பரதன் இவ்வாறு கூறிய பின்னர் கைகேயி, அவருக்கு நடந்ததை எல்லாம் எடுத்துக் கூறி, அரசை ஏற்கும்படி

சொன்னார். கைகேயியினால் சகோதரர்கள் காட்டுக்குப் போனதைக் கேட்ட பரதன் பெருந்துயரால் வேதனை நிறைந்த உள்ளத்தவராகித் தாயைக் கடுமையான சொற்களால் சாடுகிறார். "நீ, பேராசைக்காரி. நான், ஸ்ரீராமனிடம் எவ்வளவு பக்தி வைத்திருக்கிறேன் என்பதை நீ அறியவில்லை என்று நினைக்கிறேன். அதனால் அரசாட்சியைப் பெறுவதற்காக, இத்தகைய மாபெரும் தீங்கைச் செய்திருக்கிறாய்'' [அயோத்தியா காண்டம் 73/13] எனத் தம்முடைய தாயை நிந்திக்கிறார்.

பரதன், இதற்கு மேலும் கடுஞ்சொற்களைப் பயன்படுத்தி, தாயைப் பலவாறு நிந்திக்கிறார். அதற்குப் பிறகு, தம்மை பார்க்க வந்து கொண்டிருந்த அன்னை கோசலையை வழியிலேயே சந்தித்தார். அவர் மடியில் விழுந்து அழத் தொடங்கினார். எவ்வளவோ சபதங்கள் கூறி, 'ஸ்ரீராமன் காட்டிற்குப் போனதற்கு தனக்கு எந்தவிதமான ஒப்புதலும் இல்லை' என்று அன்னை கோசலைக்கு நம்பிக்கையூட்டினார்.

இதற்குப் பிறகு, வசிஷ்ட முனிவர் ஆணையின்படி தசரதருக்கு ஈமச்சடங்குகள் தொடங்குகின்றன. அச்சமயம் அரசருடைய சடலத்தைப் பார்த்து, பரதன் அழுதுகொண்டே புலம்புகிறார்— ''மன்னரே! வேறு நாட்டிலிருந்த நான் திரும்பி வருவதற்கு முன்னதாக, அறம் அறிந்த இராமபிரானையும், பேராற்றல் பொருந்திய இலக்குவனையும் காட்டுக்கு அனுப்பிவிட்டு, [இந்த நிலையை அடைவதற்குத்] தாங்கள் எவ்வாறு திருவுள்ளம் கொண்டீர்கள்?'' [அயோத்தியா காண்டம் 76/6]

பரதன் அழுவதைக் கண்ட வசிஷ்ட மாமுனிவர், அவருக்கு மீண்டும் சமாதானம் கூறுகிறார். அதற்குப்பின் விதிமுறைப்படி தசரதருடைய ஈமச்சடங்குகள் நடந்தேறின. அரண்மனைக்குத் திரும்பி வந்த பிறகு பரதன், பத்து நாட்கள் வரை பூமியிலேயே படுத்துக் கொண்டு பெருந்துயரத்துடன் நாட்களைக் கழித்தார்.

சிராத்தம் முதலியவை முடிந்தபிறகு அரசவையில் வசிஷ்ட முனிவரும், மற்ற அவை உறுப்பினரும் பரதனுக்கு அறிவுறுத்தி, அவரை அரசை ஏற்கும்படி வலியுறுத்திக் கேட்டுக் கொண்டனர். அப்போது பரதன் கூறினார்—

''இந்த அரசு, நான் – இரண்டுமே இராமபிரானுக்குச் சொந்தம். தாங்கள், எனக்குத் தருமத்தை எடுத்துக் கூறுங்கள். இராமபிரான் எவ்வகையிலும் எனக்குப் பெரியவர். புருஷோத்தமரான ஸ்ரீரகுநாதன் இந்த அயோத்தி என்ன, மூன்று உலகங்களுக்குமே அரசனாகத் தகுதி வாய்ந்தவர். நான், அவரையே பின்பற்றி நடப்பேன். குணக்குன்றான அவரைக் காட்டிலிருந்து திருப்பி அழைத்துவர முடியாமற்போனால், புருஷோத்தமனான லட்சுமணன் போல் நானும் அந்தக் காட்டிலேயே வசிக்கப் போகிறேன்.

நற்குடிப் பிறப்பும், நற்குணங்கள் கொண்டவர்களும், மரியாதைக்கு உரியவர்களுமான உங்கள் அனைவருடைய கண்ணெதிரில், காட்டிலிருந்து அவரை அழைத்துக் கொண்டு வருவதற்கு எல்லாவிதமான உபாயங்களையும் கடைப்பிடிப்பேன்'' [அயோத்தியா காண்டம் 82/16, 18, 19] என்றார். சகோதர அன்பில் தோய்ந்த பரதனுடைய சொற்களைக் கேட்ட அவையினர் அனைவருடைய கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன.

ஸ்ரீராமனைத் திருப்பி அழைத்துவர, பரதன் பெரும் படையுடனும், மக்கள் வெள்ளத்துடனும் சித்திரகூடம் செல்லும் பொழுது, வழியில் வேடர்களின் அரசனான குகனை சந்திக்கிறார். இவருடன் நால்வகைப் படையும் வருவதைக் கண்ட குகனது மனத்தில் சந்தேகம் ஏற்படுகிறது. அதை அவரிடம் வெளிப்படுத்தி விடுகிறார். அப்போது பரதன், ''வேடுவ அரசனே! சகிக்க முடியாத இந்தக் கஷ்டகாலம் ஏற்பட வேண்டாம். நீ, என்னைச் சந்தேகப்படக் கூடாது. இராகவன், என்னுடைய மூத்த சகோதரர். அவரைத் தந்தைக்கு நிகராக மதிக்கிறேன். காட்டில் வசிக்கும் ஸ்ரீராமனைத் திரும்ப அழைத்துவரவே, நான் சென்று கொண்டிருக்கிறேன்''

[அயோத்தியா காண்டம் 85/9,10] என்று குகனது ஐயத்தை நீக்குகிறார். அவருடைய வார்த்தையைக் கேட்ட வேடர் தலைவனுடைய முகம் மலர்ந்தது.

''தாங்கள் பெரும் போற்றுதலுக்குரியவர். எவ்வித முயற்சியுமில்லாமலே கிடைத்த பூமண்டலத்தைத் துறந்துவிட விரும்புகிறீர்களே! தங்களுக்கு நிகரான உத்தமரை, நான் இந்த உலகில் பார்த்ததே இல்லை!'' [அயோத்தியா காண்டம் 85/12] என குகன் மகிழ்ச்சி ததும்ப பரதனைப் புகழ்கிறார்.

இதே ரீதியில் இருவருக்குமிடையே நெடுநேரம் உரையாடல் நிகழ்ந்தது. ஸ்ரீராமனது பிரிவில் அவரைப் பற்றியே எண்ணியெண்ணித் துயரத் தீயில் வாடியதால், பரதன் திடீர் என்று மூர்ச்சையடைந்து விழுந்துவிட்டார். அருகில் அமர்ந்திருந்த சத்ருக்னனும் அவரைப் பிடித்துக் கொண்டு அழ ஆரம்பித்து நினைவிழந்தார். இதைக் கண்ட குகன் மயங்கி நின்றார். சற்று நேரம் கழித்து பரதன், ''குகனே! அன்று இரவு என் தமையனார் ஸ்ரீராமன் சீதாதேவியுடனும் லட்சுமணனுடனும் எங்கே தங்கியிருந்தார்? என்ன அருந்தினார்? எங்கு சயனித்தார்? எல்லாவற்றையும் எனக்கு விரிவாகச் சொல்வாயாக!'' [அயோத்தியா காண்டம் 87/12] என குகனிடம் வினவுகிறார்.

பரதன் இவ்விதம் கேட்டவுடன் குகன் மனமகிழ்ச்சி அடைந்தார். நடந்ததையெல்லாம் விரிவாக அப்படியே எடுத்துக் கூறினார். அவர், அங்கே இருந்த இலுப்பை மரத்தையும், தர்ப்பைப் படுக்கையையும் காட்டினார். ''அதன் மேல்தான் அன்று ஸ்ரீராமனும் சீதாதேவியும் உறங்கினர்'' என்று குகன் கூறினார். அந்த இடத்தைப் பார்த்த பரதனது நிலை விவரிக்கவொண்ணாததாக ஆயிற்று. பலவாறாகப் புலம்பத் தொடங்கிவிட்டார்— ''அந்தோ! நான் செத்தேன்! நான் மிகவும் இழிந்தவன்! என்னாலன்றோ பத்தினியோடு ஸ்ரீராமன் எந்த ஆதரவும் இல்லாதவரைப் போல, இவ்வளவு சாமானியமான படுக்கையில் படுக்க நேரிட்டிருக்கிறது?

உலகனைத்தையும் ஆட்சி செய்யும் பரம்பரையில் தோன்றியவர்; எல்லா உலகத்தினருக்கும் சௌக்கியத்தைக் கொடுப்பவர்; எல்லா மக்களாலும் பெரிதும் விரும்பப்படுபவர்; நீலோத்பல மலர் போன்ற திருமேனிப் பாங்கு உடையவர்; செவ்வரியோடிய திருக்கண்களை உடையவர்; எல்லா சுகங்களையும் அனுபவிக்கத்தக்கவர்; துக்கங்களை அனுபவிக்க வேண்டாதவர் – இப்படிப்பட்ட காட்சிக்கினிய அந்த ரகுநந்தனர், உத்தமமான சுக–சௌக்கியங்களை அளிக்கவல்ல நாட்டைத் துறந்து, இந்தத் தரையில் எவ்வாறுதான் படுத்துக் கொண்டாரோ?

நற்குணங்கள் கொண்ட லட்சுமணன், தமையனார் ஸ்ரீராமனுடைய கஷ்டகாலத்தில் பக்கத்திலிருந்து தொண்டு செய்கிறான். அவன்தான் புண்ணியாத்மா! எல்லோராலும் கொண்டாடத்தக்கவன்'' [அயோத்தியா காண்டம் 88/17–20]. இவ்விதமாக பரதன் அழுது புலம்பினார்.

அடுத்து பரதன், பரத்வாஜர் ஆசிரமத்தை அடைகிறார். அங்கே மகரிஷி, பரதனிடம் நலம் விசாரித்தபிறகு, பரதனின் உள்ளத்தை நோகச் செய்யக்கூடிய ஒரு கேள்வியைக் கேட்டு விடுகிறார்— ''பரதா! நீ காட்டுக்கு வருவதற்கு என்ன காரணம்? குற்றமற்றவர்களும், அறமே வடிவெடுத்தவர்களுமான இராமனுக்கும் லட்சுமணனுக்கும் தீங்கேதும் இழைக்க விரும்பவில்லையே!''

இதைக் கேட்டதும் பரதனுடைய கண்களில் நீர் நிரம்பிவிட்டது. துயரத்தால் நடுங்கும் குரலில், தடுமாறும் சொற்களில் சொன்னார்— ''அச்சோ! என்ன துர்ப்பாக்கியம் எனக்கு? எல்லாம் அறிந்தவரான தாங்களும் என்னைப் பற்றித் தவறாகக் கருதினால், நான் என்ன செய்வேன்? நான், எந்தக் குற்றத்தையும் செய்யவில்லை. அப்படியிருந்தும் தாங்களே என்னைக் குற்றவாளியாக எண்ணுகிறீர்கள் என்றால், நான் எல்லாவிதங்களிலும் பாவப்பட்டவன்.

நான் இல்லாதபோது என் தாயார் என்ன பேசினாரோ [வரங்கள் கேட்டாரோ], அவைகள் என் விருப்பத்தின்பேரில்

நடைந்தவையல்ல. அதனால், நான் மனக்களிப்பும் அடையவில்லை; அதை ஏற்றுக்கொள்ளவுமில்லை.

மானுடச்சிங்கம் போன்ற அவரைப் பிரார்த்தித்து, மனமகிழச் செய்து, அயோத்திக்குத் திருப்பி அழைத்து வருவதற்காகவும், அவருடைய திருவடிகளில் தலைவைத்து வணங்குவதற்காகவும் செல்கிறேன்.

என்னை [இப்படிப்பட்ட நல்ல நோக்கத்துடன் செல்பவனாக அறிந்துகொண்டு] தாங்கள் அருள்புரிய வேண்டும். பகவானே! மன்னராகிய ஸ்ரீராமன் தற்போது எங்கே தங்கியிருக்கிறார்? என்று என்னிடம் சொல்லுங்கள்.'' [அயோத்தியா காண்டம் 90/15—18]

இதைக் கேட்ட பரத்வாஜர் மிகவும் மனமகிழ்ச்சி கொண்டு பரதனைப் புகழ்ந்தவாறே சொன்னார்— ''பரதா! நான், உன் மனதை அறிவேன். இருந்தும் அதை உறுதி செய்துகொள்வதற்காகவும், உன் கீர்த்தியை மேலும் பெருக்குவதற்காகவுமே, நான் உன்னிடம் இவ்வாறு கேட்டேன்.'' [அயோத்தியா காண்டம் 90/21]

இதற்குப் பிறகு மேலும் பலவிதமான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டனர். பரத்வாஜர் வற்புறுத்தியதால் முனிவர் அளித்த விருந்தை பரதன் ஏற்க நேர்ந்தது. அம்முனிவர்க்கரசர் பரதனுக்கும், அவருடைய படை மற்றும் பரிவாரங்களுக்கும் சீரிய முறையில் விருந்தளித்தார். அன்று இரவு மிகவும் அற்புதமான முறையில் ஆனந்தமாகக் கழிந்தது. அந்தக் கட்டத்தில்தான் பின்வரும் செய்தியும் வருகிறது— ''[அங்கே முனிவர், தம் யோகபலத்தால் ஒரு அரண்மனையைப் படைத்திருந்தார்.] பரதன், அவ்விடத்தில் காணப்பட்ட அரியாசனத்தையும், திவ்யமான சாமரத்தையும், வெண்கொற்றக் குடையையும் பார்த்தார். மன்னரான இராமபிரானே அங்கே வீற்றிருப்பதாகக் கருதி, அமைச்சர்களுடன் கூடிய பரதன் வழிபட்டார். பின், இராமபிரானை மனத்தால் எண்ணி வணங்கி

சிம்மாசனத்திற்குத் தலைவணங்கினார். பின்னர், தாமே கையில் வெண்சாமரத்தை எடுத்து வீசிக் கொண்டு, அமைச்சர்களுக்கான இருக்கை ஒன்றில் அமர்ந்து கொண்டார்'' [அயோத்தியா காண்டம் 91/38,39]. பாருங்கள். எவ்வளவு உயர்ந்த பாவனை, பக்தி! எவ்வளவு புனிதமான உணர்வு! தற்பெருமை நீங்கிய எத்துணை எளிமை! தியாகம்!

பரதன் சித்திரகூடத்தை நெருங்கினார். அப்போது வானத்தில் புழுதி எழும்பிப் படர்ந்தது. அதைப் பார்த்த ஸ்ரீராமன், லட்சுமணனிடம் அதற்குரிய காரணத்தை அறிந்து வரச் சொன்னார். லட்சுமணன் ஒரு மரத்தின் மேல் ஏறிப் பார்க்கிறார். பரதன்தான் படையுடன் வருகிறார் என்று உறுதி செய்துகொள்கிறார். அவர் மீது சந்தேகம் கொண்டு கடுமையான சொற்களை வெளியிடுகிறார். அப்போது ஸ்ரீராமன், பரதனுடைய நற்குணங்களையும் அன்பையும் பெருமைப்படுத்திப் புகழ்ந்து சொல்கிறார்—

''லட்சுமணா! பரதன் நம்மைப் பார்க்கவேண்டும் என்று சரியான காலத்தில்தான் விரும்பியிருக்கிறான். இவன் நமக்கு நல்லது அல்லாததை மனத்தாலும் சிறிதளவுகூடச் செய்யமாட்டான். பரதன், முன்பு எப்போதாவது உனக்குத் துன்பம் விளைவிப்பதான ஒரு செயலைச் செய்திருக்கிறானா? [செய்ததே இல்லை எனும்போது] பரதன் விஷயத்தில் உனக்கு இப்படிப்பட்ட பயமும் சந்தேகமும் எப்படி வந்தது? [அவன், நம்மைக் கொல்வதற்காகவே வருகிறான் என்று ஏன் தீர்மானிக்கிறாய்?]

நீ, பரதனைக் குறித்து இவ்வளவு கடுமையான, அன்பில்லாத சொற்களைப் பேசலாகாது. பரதனைப் பற்றி நீ நிந்தனை செய்தால், அது, என்னை நிந்தித்ததாகவே ஆகும். உனக்கு அரசாட்சி வேண்டும் என்ற காரணத்தால் இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்கிறாயேயானால், நான் பரதனைப் பார்த்து, 'ராஜ்யத்தை இவனுக்குக் கொடுத்துவிடு' என்று சொல்கிறேன். லட்சுமணா! 'அரசாட்சியை இவனிடம் ஒப்படைத்துவிடு' என்று நான் சொல்லியதைக் கேட்டவுடனேயே,

'அவ்வாறே ஆகட்டும்' என்றுதான் பரதன் நிச்சயமாகச் சொல்வான்'' [அயோத்தியா காண்டம் 97/13–15,17,18].

இவ்விதமாக பரதன் முற்றிலும் நல்லவராகவும் குற்றமற்றவராகவும் இருப்பினும், எல்லோருடைய சந்தேகங்களுக்கும் இலக்காக நேர்ந்தது. பரதனைப் போன்ற முற்றிலும் பற்றற்ற தருமாத்மாவும் தியாகியுமான மாமனிதர், இவ்விதம் எல்லோருடைய சந்தேகங்களுக்கும் இலக்காவதென்பது உலகச் சரித்திரத்தில் அபூர்வமான ஒரு விஷயமாகும். அப்படியிருந்தும் பரதன் அமைதியுடன் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டார். அவரது சகோதர பாசத்தை என் சொல்வது? அது பாராட்டுக்குரியதே! பரதனது சுவாமி பக்தியும் போற்றி! அவருடைய பொறையும் போற்றி!! போற்றி!!!

இங்கே பரதன், தம்பி சத்ருக்னன், குகன் முக்கியமான மந்திரிகள் ஆகியோரிடம் இராமபிரானின் ஆசிரமம் இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடிக்கும்படி உத்தரவு பிறப்பித்து விட்டு, ''சந்திரன் போல் தண்ணொளி வீசும் பிரகாசமுடையவரும், தாமரையிதழ் போன்ற கண்களையுடைய அழகிய திருமுகத்தையுடையவருமான என் சகோதரரைக் காணாத வரையில், என் மனம் அமைதி அடையாது. அரச லட்சணங்களுள்ள தமையனாரின் திருவடிகளை, என் தலையால் தாங்காத வரையில் என் மனம் அமைதி அடையாது.

ஆட்சி செலுத்தும் உரிமை பெற்ற அவர், பாட்டன்—முப்பாட்டன் காலத்திற்கு முன்பிருந்தே பரம்பரையாக வந்துள்ள அரசபீடத்தில், பட்டாபிஷேகப் புனித நீரால் நனைக்கப்பட்டவராக அமராத வரையில் என் மனம் அமைதி அடையாது'' [அயோத்தியா காண்டம் 98/7–9] என்று பலவாறு புலம்பித் தவிக்கிறார்.

இவ்விதமாகப் பலவாறு சொல்லிவிட்டு, மனிதர்களில் சிறந்த பரதன் கால்நடையாகவே ஸ்ரீராமனைத் தேடிக்

கொண்டு அந்த அடர்ந்த காட்டில் புகுந்தார். ஓர் உயரமான மரத்தின் மேலேறித் தொலைவில் ஸ்ரீராமன் உறையும் ஆசிரமத்தைக் கண்டார். அங்கு அவர் அமர்ந்திருப்பதை அடையாளம் கண்டுகொண்டார். அதைக் கண்டதும் அவர் புத்துயிர் பெற்றார். அவர் மிகவும் மகிழ்ச்சி கொண்டு குகனைத் தம்முடன் வரச்செய்து ஆசிரமத்தை நோக்கிப் புறப்பட்டார்.

ஸ்ரீராமன் உறையும் குடிலுக்கு அருகில் சென்ற பரதன், பூவுலகம் அனைத்துக்கும் இறைவனும் தருமசீலருமான பகவான் இராமபிரான் சீதாதேவியுடனும் லட்சுமணனுடனும் ஒரு மேடையின் மேல் அமர்ந்திருப்பதைப் பார்த்தார். இராமபிரான் கருத்த மான்தோலையும் மரவுரியையும் அணிந்திருந்தார். அவரது திருமுடியில் சடைகள் அழகாக மிளிர்ந்தன. தாமரை போன்ற கண்கள்; நீண்ட பெரிய கைகள். அவர் தோள்கள் சிங்கத்தின் தோள்கள் போல் தோற்றமளித்தன. இராமபிரானை இந்த நிலையில் கண்டு, மகாத்மா பரதன் துயரத்தில் ஆழ்ந்து மூழ்கிவிட்டார். அண்ணலின் பக்கமாகப் பார்வை சென்றவுடனேயே, பரதன் துயரம் நிறைந்த, தழுதழுத்த குரலில், புலம்பிக் கொண்டு சொல்லத் தொடங்கினார்— ‘‘அட! என் தமையனார் அரசவையில் வீற்றிருந்து நகர மக்கள், மந்திரிப் பிரதானிகள் போன்ற மதிப்புமிக்க மக்களால் போற்றி வணங்கத்தக்கவர்! [இப்போது] காட்டு விலங்குகளால் சூழப்பட்டவராக [தரையில்] அமர்ந்திருக்கிறார்!

மகோன்னத மாமனிதரான எவர், எப்போதும் மதிப்புமிக்க ஆடைகளை அணிந்து கொண்டிருந்தாரோ, அவர் தவம் செய்வோரின் நெறிமுறைகளை ஏற்றுக் கொண்டு இரண்டு மான்தோல் ஆடைகளை அணிந்து கொண்டிருக்கிறார். ஐயோ! அவர் எல்லா வகையாலும் சுகம் துய்க்க வேண்டியவராயிற்றே.

அந்த பகவான் ஸ்ரீராமன் என் நிமித்தமாக எவ்வளவு கஷ்டங்களை ஏற்றுக் கொண்டுள்ளார்! நானும்தான் எத்தனை

*கொடியவன்! உலகமே நிந்திக்கும் என் வாழ்க்கை வெறுக்கத்தக்கது! சீ! சீ! இது ஒரு வாழ்க்கையா!''* [அயோத்தியா காண்டம் 99/31,32,36]

இவ்விதம் பலவும் சொல்லிப் புலம்பிய பரதன் துயரத்தால் நைந்து போனார். தாமரையொத்த அவரது முகத்தில் கண்ணீர் தாரையாக வழியத் துவங்கியது. அளவற்ற பெருந்துயரால் மனமுடைந்து போன அவர், ஸ்ரீராமனுடைய பாதங்களைத் தொடுவதற்கு முன்பே, ''என் ஐயனே!'' என்று சொல்லிக் கொண்டே அவரருகில் தீனனாகக் கீழே விழுந்துவிட்டார். துயரத்தால் அவருடைய தொண்டை அடைப்பட்டுவிட்டது; ஒன்றும் பேச இயலவில்லை. தொடர்ந்து சத்ருக்னனும் அழுதுகொண்டே இராமபிரானுடைய திருவடிகளில் பணிந்தார். சடையும் மரவுரியும் தரிந்திருந்த பரதன், கைகளைக் கூப்பிக் கொண்டு தரையில் கிடப்பதைப் பார்த்த ஸ்ரீராமனுக்கு, அவரை அடையாளம் தெரிந்து கொள்ளவே கடினமாயிருந்தது. அவர் இரண்டு தம்பியரையும் தூக்கி எடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டார். பரதனது நிலைகண்ட காட்டுவாழ் மக்கள் வாய்விட்டு விம்மத் தொடங்கினர்.

பிறகு, இராமபிரான் பரதனை மடியிலிருத்தி வைத்துக் கொண்டு, ''தம்பி! நீ ராஜ்யத்தை விட்டுவிட்டு, இப்படி மரவுரி—மான்தோல்—சடை தரித்துக் கொண்டு, இங்கு எதற்காக வந்தாய்?'' என்று கேட்டார். அதற்கு விடையாகத் தந்தை இறந்த செய்தியைச் சொல்லிவிட்டு பரதன் மேலே சொன்னார்— ''அனைவரையும் மதித்துப் போற்றும் பெருமையுடைய ரகுநந்தனா! [மூத்த புதல்வனுக்கே அரசுரிமை என்ற] பரம்பரை வழக்கப்படி சரியானதும், அதனால் நியாயப்படி தங்களுக்கே கிடைக்க வேண்டியதுமான அரசை ஏற்றுக் கொண்டு நண்பர்களையெல்லாம் மனோரதம் கைகூடியவர்களாகச் செய்யுங்கள். நான், தங்களுடைய சகோதரன்; சிஷ்யன்; அடிமை. இங்குள்ள அமைச்சர்களோடு

தலைவணங்கிப் பிரார்த்திக்கிறேன். எனக்குத் தாங்கள் அருள்புரிய வேண்டும்.'' [அயோத்தியா காண்டம் 104/10,12]

இவ்வாறு கூறியபடி பரதன் கண்களில் நீரைப் பெருக்கிக் கொண்டு, இராமபிரானுடைய பாதங்களில் விழுந்தார். [அயோத்திக்குத் திரும்பி வந்து முடிசூடிக் கொண்டருள வேண்டும் என்று பிரார்த்தித்தார். அப்போது ஸ்ரீராமன் சாஸ்திரங்களிலிருந்து அநேக தத்துவங்களை எடுத்துக் கூறியும், தந்தையின் ஆணைக்குள்ள மகத்துவத்தைச் சுட்டிக்காட்டியும், நாட்டை ஆளும் பொறுப்பை ஏற்குமாறு பரதனை அறிவுறுத்தினார். ஆனால், பரதனுக்கு இது ஏற்புடையதாக, மகிழ்ச்சியூட்டுவதாக இல்லை. அவர் சொன்னார்— ''பகவானே! தங்களுக்குச் சமமாக யார் பேச முடியும்? தங்களுக்கு சுகம்—துக்கம், பெருமை—சிறுமை, நிந்தை—துதி – இவையெல்லாமே சமமானவை. தங்களளவு பேரறிவு படைத்தவன், எத்தகைய இன்னல் நேரினும் துயருற மாட்டான். ஆனால், நான் அப்படிப்பட்டவன் அல்லன். அதனால்தான் நான் மீண்டும் மீண்டும் தங்களுடைய பாதங்களில் விழுந்து வேண்டுகிறேன்; தயை புரியுங்கள். நீங்கள் மனிதருள் மாணிக்கம். எனக்கும், என் தாயாருக்கும் ஏற்பட்ட கறையைக் கழுவி, வணங்குதற்குரிய பிதாவையும் பழிச்சொல்லினின்றும் காப்பாற்றுங்கள்'' என்று மேலும் பலவும் சொன்னார்.

பரதன் இவ்விதமெல்லாம் சொல்வதைச் செவியுற்ற வேள்வி செய்வோர், நகரமாந்தர், பல்வேறு சமுதாயங்களின் தலைவர்கள், தாய்மார்கள் அனைவரும் தங்களை மறந்தவர்களாய் கண்ணீர் பெருக்கி, அவரைப் புகழத் தொடங்கினர். மேலும், அவர்கள் எல்லோருமே ஸ்ரீராமனிடம் திரும்பி வரும்படி, தங்கள் நிலைக்கேற்றவாறு வேண்டிக் கொண்டனர்.

அதற்குமேல் இராமபிரான் நியாயமும் தருமமும் பொதிந்த பல வார்த்தைகளைச் சொல்லி, பரதனுக்கு அறிவுறுத்தினார்.

இவ்விதம் என்ன சொல்லியும் இராமபிரான் திரும்பி வருவதற்கு உடன்படாததைப் பார்த்த பரதன் அளவற்ற வருத்தமடைந்து, ''என் அண்ணன் என் வேண்டுகோளை ஏற்காதவரை, நீர் பருகாமல், ஆகாரம் உண்ணாமல் அவர் எதிரே உட்கார்ந்திருப்பேன்'' என்று சொல்லிவிட்டு, அப்படியே தரையில் தர்ப்பை ஆசனத்தில் அமர்ந்துவிட்டார்.

அப்போது ஸ்ரீராமன், பரதனைச் சமாதானப்படுத்திச் சொன்னார்— ''நீ செய்யும் இந்தச் செயல் அறத்துக்கு மாறானது. இந்த வீண்பிடிவாதத்தை விட்டுவிடு.'' இதைக் கேட்டு பரதன் உடனே எழுந்து நின்று, எல்லோருடைய முன்னிலையில் இவ்வாறு கூறினார்— ''தந்தையின் சொல்லைக் காக்க, இவர் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசிக்க வேண்டும் என்றால், இவருக்குப் பதிலாக நான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாசம் செய்வேன்'' என்று சொன்னார்.

இதற்கு இராமபிரான் கூறினார்— ''தம்பி பரதா! இவ்விதம் மாற்றுவதற்கு நமக்கு உரிமை இல்லை'' என்று சொல்லிவிட்டு, எல்லோரிடமும் பின்வருமாறு சொன்னார்— ''பரதன் மிகவும் பொறுமையுடையவன்; ஆசார்யர்களை வழிபடுகிறவன் என்பதை நான் அறிவேன். சத்தியம் தவறாத மகாத்மாவான அவனிடம் எல்லா நற்குணங்களும் உள்ளன. வனவாசம் முடிந்து மீண்டும் திரும்பி வந்து, தருமநெறி தவறாத இந்தச் சகோதரன் பரதனுடன் இந்தப் பூமண்டலத்திற்குச் சிறந்த தலைவனாவேன்.

கைகேயி, மன்னரிடம் வரம் கோரினார். நான், அந்த ஆக்ஞைப்படி நடப்பதாக வாக்குக் கொடுத்துவிட்டேன். இப்படிச் செய்வதால் மட்டுமே, தந்தையை 'அசத்தியம்' என்ற [கொடுத்த வாக்கை மீறிய] பாவத்திலிருந்து விடுவிக்க முடியும்.'' [அயோத்தியா காண்டம் 111/30–32]

இரு சகோதரர்களும் ஒப்பற்ற பிரதாபம் உள்ளவர்கள். அவர்களிடையே நிகழ்ந்த உரையாடல் உடல்சிலிர்க்கச்

செய்கிறது. அதையும், அவர்கள் ஒருவர் மேல் மற்றவர் கொண்டிருந்த அன்பையும் கண்டு அங்கே வந்திருந்த அனைத்து மக்களும் முனிவர்களும் வியப்படைந்து மெய்மறந்தனர். ஆகாயத்தில் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்து நின்ற முனிவர்கள், எதிரே கண்களின் பார்வைக்குப்பட அமர்ந்திருந்த முனிவர்கள் ஆகிய அனைவரும் இரு சகோதர்களையும் வாயார, மனமாரப் புகழ்ந்தனர்.

இதற்குப் பிறகு எல்லா ரிஷிகளுமே ஸ்ரீராமன் சொல்வதைக் கேட்டு நடக்கும்படி பரதனுக்கு அறிவுறுத்தினர். இராமபிரானுக்கும் இதனால் மனநிறைவு ஏற்பட்டது. ஆனால், பரதனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவர் கைகளைக் கூப்பிக் கொண்டு இராமபிரானிடம், ‘‘பெருந்தகையே! நான் இந்த அரசை ஆள வல்லவனல்லன். தாங்கள் இந்த ராஜ்யத்தை ஏற்றுக்கொண்டு வேறு யாரையாவது ஆட்சிப் பொறுப்பை ஏற்கச் செய்யுங்கள்’’ என்று குரல் தழுதழுக்க உரைத்தார். இவ்விதம் சொல்லிவிட்டு பரதன், அண்ணனுடைய பாதங்களில் வணங்கினார். அப்போது ஸ்ரீராமன், அவரைத் தூக்கி எடுத்து மடியில் அமர்த்திக் கொண்டு, ‘‘அன்புத் தம்பியே! இயற்கையாகவும், கல்வியின் பயனாகவும் பணிவோடு கூடிய இந்த அறிவு உனக்குக் கிடைத்திருக்கிறது. அதைக் கொண்டே இந்த உலகத்தையே காப்பாற்றும் அபார வலிமை உன்னிடம் இருக்கிறது’’ [அயோத்தியா காண்டம் 112/16] என்று இனிமையான குரலில் சொன்னார்.

சூரியதேவனுக்கொப்பான தேஜஸ் கொண்ட ஸ்ரீராமச்சந்திரனுடைய அன்பு நிறைந்ததும், அறிவு புகட்டுவதுமான இவ்வார்த்தைகளைக் கேட்டும், அவரது மனஉறுதியைப் பார்த்தும் பரதன் சொன்னார்— ‘‘அண்ணா! பொன்னால் அலங்கரிக்கப்பட்ட இந்தப் பாதுகைகளின்மேல் திருவடி சார்த்தி அருள்வீராக! இந்தப் பாதுகைகள்தாம்

எல்லா உலகங்களின் யோக–க்ஷேமங்களை நிர்வகிக்கப் போகின்றன.'' [அயோத்தியா காண்டம் 112/21]

பரதனுடைய உயர்ந்த உணர்வுகள் போற்றி! எத்துணை உயரிய கருத்துக்கள் பரதனுக்கு இருந்தன!

பகவான் ஸ்ரீராமன், அந்தப் பாதுகைகளின்மேல் மங்களம் தரும் தம்முடைய அடியிணையை வைத்து, அவற்றைப் பரதனிடம் கொடுத்தார். பரதன் அவற்றை வணங்கிவிட்டு இராமபிரானிடம், ''ரகுநந்தனா! வீரரே! எதிரிகளை வாட்டுபவரே! ஜடை–மரவுரி தரித்துக் கொண்டு, பழங்களையும் கிழங்குகளையும் உணவாகக் கொண்டு, தங்கள் பாதுகைகளிடம் அரசு நிர்வாகத்தை ஒப்படைத்து விட்டு, தங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டு, நகரத்தின் வெளியிலேயே பதிநான்கு ஆண்டுகள் தங்கியிருக்கப் போகிறேன்.

ரகுகுல ஏந்தலே! பதிநான்கு ஆண்டுகள் முடிந்த மறுநாளில், நான் தங்களைக் காணாவிட்டால் எரியும் நெருப்பில் புகுந்துவிடுவேன்'' [அயோத்தியா காண்டம் 112/23–25] என்று சூளுரைத்தார்.

பரதன் கூறிய இச்சூளுரையைக் கேட்ட ஸ்ரீராமன் மகிழ்ச்சியுடன் அதை ஏற்றுக் கொண்டார். பிறகு பரதனிடமும், தம்பி சத்ருக்னனிடமும் தாயான கைகேயினிடம் நல்லமுறையில் நடந்துகொள்ளச் சொல்லி அறிவுறுத்தினார். இருவரையும் மார்புறத் தழுவிக் கொண்டார். விடையும் கொடுத்தார். அப்போது பரதனின் பிரிவைத் தாங்காமல் ஸ்ரீராமனுடைய கண்களில் கண்ணீர் நிரம்பிற்று.

பின்னர் பரதன், ஸ்ரீராமனுடைய பாதுகைகளைத் தம் தலைமேல் ஏந்தியவாறு, மிக்க மனநிறைவோடு தேரேறினார். வழியில் பரத்வாஜ முனிவரைச் சந்தித்து, நடந்தவை அனைத்தையும் உரைத்து, அவரிடம் அனுமதி பெற்று சிருங்கிபேரபுரம் வழியாக அயோத்தி வந்தடைந்தார். பரதன், தாய்மார்களை அரண்மனையில் இருக்கச் செய்துவிட்டு,

''நான் நந்திக்கிராமம் செல்லப் போகிறேன். உங்கள் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொள்கிறேன். இராமன் இல்லாததால் ஏற்பட்டுள்ள இந்தத் துக்கத்தையெல்லாம் அங்கே சகித்துக் கொண்டிருப்பேன்.

நம்மையெல்லாம் ஆண்ட மன்னர் தசரதர் விண்ணுலகம் சென்றுவிட்டார். என்னுடைய தமையனார் காட்டிலிருக்கிறார். நான், நந்திக்கிராமத்தில் இருந்து கொண்டு, நாட்டை ஆள்வதற்கு வருகைபுரியும் ஸ்ரீராமனை எதிர்பார்த்துக் காத்திருப்பேன். பெரும்புகழ் கொண்ட அவர்தான் [இந்த நாட்டிற்கு] அரசர்'' [அயோத்தியா காண்டம் 115/2,3] என்றார்.

பரதன் இவ்விதம் கூறியதைக் கேட்ட புரோகிதர் வசிஷ்டர், மந்திரிகளுடன் சேர்ந்து கொண்டு, ''பரதா! சகோதரனிடம் மிக்க அன்புடைய உன்னால் கூறப்பட்ட விஷயம் மேன்மையான உன் இயல்பிற்கு ஒத்தது; புகழத்தக்கது; உனக்கே ஏற்றது. உன் தமையனின் தரிசனத்தை நீ எப்போதும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாய்; அவர் நலனில் முழு அக்கறை கொண்டிருக்கிறாய். உத்தமமான வழியைத் தேர்தெடுத்துவிட்ட உனக்கு, எவர்தான் அனுமதி கொடுக்காமலிருப்பார்?'' [அயோத்தியா காண்டம் 115/5,6] என்று அவரைப் புகழ்ந்தார்கள்.

மேற்கூறியபடி எல்லோருடைய அனுமதியையும் பெற்ற பரதன், ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதுகைகளைத் தலை மேல் தாங்கியவராய் சத்ருக்னனுடன் நந்திக்கிராமம் சென்றார். அங்கே தேரிலிருந்து இறங்கியவுடன், ''இந்த அரசு, அடகுப்பொருளாக என்னுடைய சகோதரராலேயே என்னிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பொன்னால் அலங்கரிக்கப்பட்ட அவருடைய இந்த இரு பாதுகைகள்தாம் அரசு நிர்வாகம் செய்யப் போகின்றன. மகாபுருஷராகிய ஸ்ரீராமனுடைய திருவடிகளே எனக் கருதத்தக்க இந்தப் பாதுகைகளுக்கு [அரச சின்னமாகிய] வெண்கொற்றக் குடையைப் பிடியுங்கள். என்னுடைய சகோதரருடைய திருப்பாதுகைகளின்

வல்லமையால்தான் நாட்டில் தருமம் நிலையாக நிற்கப் போகிறது.

என்னிடம் கொண்டுள்ள நன்னம்பிக்கையால், என் தமையனார் ஸ்ரீராமனால் என்னிடம் ஒப்படைக்கப்பட்டதை, அவர் திரும்பிவரும் காலம் வரையில், இதனை நல்ல முறையில் பரிபாலனம் செய்வேன். ஸ்ரீராமன் திரும்பி வந்தவுடனேயே, நானே இவைகளை அவருடைய திருவடிகளில் சேர்த்து, திருப்பாதுகைகளுடன் கூடியவைகளாக, அவருடைய திருவடிகளைத் தரிசிப்பேன்.

பின்னர், அவர் திரும்பி வந்து சந்தித்தவுடனேயே, தமையனாரிடம் அரசாட்சியை ஒப்புவித்துவிட்டு, [அரசுச்] சுமை நீங்கியவனாக [பொறுப்பு ஏதும் இல்லாதவனாக], அவருக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபடப் போகிறேன். அடகுப் பொருளாக என்னிடம் தரப்பட்ட ராஜ்யம், பாதுகை, அயோத்தி ஆகிய அனைத்தையும் ஸ்ரீராமனுடைய சந்நிதியில் ஒப்புவித்துவிட்டு, நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் விடுபட்டு விடுவேன்'' [அயோத்தியா காண்டம் 115/14,16–20] என்று அங்கு குழுமியிருந்த பெரியோர்களிடம் கூறினார்.

பின்னர் மனவுறுதி படைத்த பரதன், சடையும் மரவுரியும் தாங்கியவராய் ஒரு முனிவரின் கோலம் பூண்டு, நந்திக்கிராமத்தில் வசிக்கத் தொடங்கினார். அரசுக்குரிய எல்லாச் செயல்களையும் ஸ்ரீராமனுடைய 'திருவடி நிலை'களிடம் விண்ணப்பித்துவிட்ட பின்பே செய்தார். அவற்றிற்குத் தாமே குடை பிடிப்பார்; சாமரம் வீசுவார். அவர், தம் அண்ணன் ஸ்ரீராமனுடைய பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகம் செய்து, அரசருக்குரிய எல்லாப் பணிகளையும் செய்தார். அரசின் எல்லாச் செயல்களையும் முதலில் பாதுகைகளிடம் தெரிவித்துவிட்டுப் பிறகு நடத்துவார். ஏதாவது விலையுயர்ந்த பரிசுப் பொருட்கள் வந்தால், அவற்றை முதலில் பாதுகைகளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, பிறகு பொருத்தமான ஏற்பாடுகளைச் செய்வார்.

இலங்கையை வெற்றிகொண்ட பிறகு பகவான் ஸ்ரீராமன் விபீஷணனுக்கு அரசை அளித்துவிட்டு, சீதாதேவியுடனும் லட்சுமணனுடனும் அயோத்திக்குத் திரும்பிவரத் தயாரானார். அப்போது விபீஷணன் ஸ்ரீராமனிடம், நீராடி ஆடையலங்காரம் செய்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். ஸ்ரீராமனோ பரதனது பக்தியை நினைவுபடுத்திக் கொண்டு சொல்கிறார்— ''இந்த நேரத்தில், தருமாத்மாவும் வலிமை மிக்கவனும் சத்தியத்தையே நம்பியிருப்பவனும் கட்டழகனும் சிறுவனுமாகிய பரதன், என் காரணமாகத் தவித்துக் கொண்டிருக்கிறான். கைகேயியின் புதல்வனான அறநெறி வழுவாத பரதன் இல்லாமல் நீராடுவதிலோ, ஆடை—அணிகலன் அணிவதிலோ எனக்கு விருப்பமில்லை. அந்தத் தம்பி பரதனைக் காண, என் மனம் துடித்துக் கொண்டிருக்கிறது.'' [யுத்த காண்டம் 124/5,6,18]

இதிலிருந்தே பரதனிடம் ஸ்ரீராமன் எவ்வளவு அன்பு வைத்திருந்தார் என்பது தெரிய வரும்!

அதற்குப் பிறகு லட்சுமணனுடனும் மற்றுமுள்ள எல்லோருடனும்கூட புஷ்பக விமானத்தில் ஸ்ரீராமன் அயோத்திக்குப் புறப்பட்டார். பரத்வாஜ ஆசிரமம் வந்து சேர்ந்தவுடன், அனுமானை அழைத்துத் தாம் வந்துவிட்ட நற்செய்தியைத் தம் அன்புத்தம்பி பரதனிடம் தெரிவிக்க அனுப்பி வைத்தார். அனுமானும் நந்திக்கிராமத்திற்கு வந்தார். அங்கே என்ன கண்டார்?

''நகருக்கு வெளியே பரதன் ஆசிரமத்தில் வசிக்கிறார். சடையாக முடியப்பட்ட கேசம்; தூசு படிந்த உடல்; அண்ணனின் நிலைகுறித்து வருந்தியதால் இளைப்பு; துயருற்ற வறியவன் போல் தோற்றம் அளிக்கிறார். பழம்—கிழங்குகளே உணவு; மனத்தை அடக்கியவன்; தவசிகள் போன்ற வாழ்க்கை; அறவொழுக்கம்; மேல் நோக்கி நிமிர்ந்து நிற்கும் ஜடாமகுடம்; மரவுரி—மான்தோல் மேலாடைகள்; புலன்கள் கட்டுப்பாடு; ஆத்மாவில் செலுத்தப்பட்ட உள்ளம்;

பிரும்மரிஷிகளுக்கு நிகரான ஆன்மவொளி – இவ்வாறு தோற்றமளித்த பரதன், இராமபாதுகைகளை முன்னிறுத்தி, அகில பூமண்டலத்தையும் ஆண்டு வந்தார்.'' [யுத்த காண்டம் 128/27–30]

இதுமட்டுமா? பரதனின் அன்பினாலும் செயல்களினாலும் ஈர்க்கப்பட்ட அமைச்சர்களும் புரோகிதர்களும் படையின் மிக முக்கிய அதிகாரிகளும்கூட காவியுடை அணிந்து கொண்டவர்களாக அவரருகிலேயே இருக்கிறார்கள் என்பதையும் அனுமான் கண்ணுற்றார்.

அனுமான், பரதனிடம் ஸ்ரீராமனின் வருகையைத் தெரிவித்தார். அனுமானின் வாய்மொழியாக அண்ணன் வந்துவிட்ட செய்தி கேட்ட பரதன் மகிழ்ச்சியால் உருகிவிட்டார். அவர் தம் சுயநினைவை இழந்துவிட்டார். சற்றுநேரத்தில் சுயநினைவை அடைந்து, அவர் அனுமானை மார்புடன் தழுவிக் கொண்டார். அன்புடன் கண்ணீரால் நீராட்டியவாறே அவரிடம், ''பெருங்கருணையுடன் இங்கு வந்திருக்கும் தாங்கள் தேவரோ, மானுடரோ? நான் அறியேன். அண்ணலே! இனிய சொற்களால் மனத்திற்குப் பிரியமான செய்தியைத் தெரிவித்தீர்கள். இதற்காக தாங்கள், எதை விரும்பிக் கேட்டாலும் நான் கொடுத்துவிடுவேன் [யுத்த காண்டம் 128/41]. ஐயனே! என்னுடைய யஜமானர் மிக அடர்த்தியான காட்டுக்குச் சென்று பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அவரைப் பற்றிய மகிழ்ச்சி அளிக்கும் செய்தியை இப்போதுதான் கேட்கிறேன்! [யுத்த காண்டம் 129/1]'' என மொழிந்தார்.

இதற்குப் பிறகு பரதன், ''வானரர்களுடன் இராமபிரானுக்கு நட்பு ஏற்பட்டது எப்படி?'' என்று கேட்டார். காட்டுக்குச் சென்றதிலிருந்து இலங்கை சென்றது, அங்கே நடந்தது, திரும்பி பரத்வாஜ ஆசிரமத்திற்கு வந்துசேர்ந்த வரையிலான எல்லா விஷயங்களையும் அனுமான் சொன்னார். இதைக் கேட்ட பரதன் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அருகில்

நின்ற சத்ருக்னனிடம் நகரை அலங்கரிக்க ஏற்பாடு செய்து, மக்கள் எல்லோரிடமும் ஸ்ரீராமனை வரவேற்கத் தயாராகும்படி அறிவித்துவிடச் சொன்னார். செய்தியறிந்த நகரமாந்தரிடையே அன்பும் ஆனந்தமும் வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து ஓடின. எல்லோரும் பெருமானுடைய வரவை எதிர்பார்த்து நின்றனர்.

தருமம் அறிந்த பரதன், ஸ்ரீராமனுடைய பாதுகைகளை அழகான மாலைகளால் அலங்கரித்து, தம் சிரசின் மேல் வைத்துக் கொண்டார். அதற்குப் பிறகு அவற்றின் மேல் தங்கக்குடையைக் கவிழ்த்தார். தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட வெண்சாமரத்தை எடுத்து வீசினார். அப்படி வீசிக் கொண்டே சென்றவர் சிறிது தூரம் சென்றபின்னர், இராமபிரான் வருவதைக் காணாமல் அன்பினால் கலங்கி அனுமானிடம், ''அனுமானே! இது என்ன? இன்னமும் ரகுகுல திலகரான இராமபிரான் வரக் காணோமே?'' என்று கேட்டார். கேட்டுக் கொண்டிருக்கும் போதே பரதன், விமானம் வருவதைக் கண்டார். அதில் அமர்ந்திருந்த ஸ்ரீராமனைத் தரிசனம் செய்து பக்தியுடன் அவரை வணங்கினார். விமானமும் இராமபிரானது திருவுள்ளப்படி கீழே இறங்கியது.

விமானத்தில் இருந்த இராமபிரானைக் கண்டு மனம் பூரித்தவராக, பரதன் மீண்டும் அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கினார். ஸ்ரீராமச்சந்திரனும் பல நாட்களுக்குப் பிறகு கண்ட பரதனை வாரியெடுத்து மடியில் வைத்துக் கொண்டு, அன்பு ததும்ப, மகிழ்ச்சி பொங்க, அவரை அணைத்துக் கொண்டார். பிறகு பரதன், லட்சுமணனைச் சந்தித்துவிட்டு, சீதாதேவியின் திருவடிகளை வணங்கினார். பின்னர் தருமமறிந்த பரதன், இராமபிரானுடைய திருப்பாதுகைகளைக் கைகளில் எடுத்து, ஸ்ரீராமன் திருவடிகளில் சேர்ந்தார். கைகளைக் கூப்பிச் சொன்னார்— ''இந்த ராஜ்யம், தங்கள் பொருட்டு இதுகாறும் என்னால்

பாதுகாக்கப்பட்டது. அடியேன், இந்த அரசாட்சியைத் தங்களிடம் திரும்பவும் ஒப்படைக்கிறேன். இப்போதுதான், நான் வாழ்வில் செய்யவேண்டிய காரியத்தைச் செய்து முடித்தவனாகிறேன். என் மனோரதமும் ஈடேறிவிட்டது. ஆகா! தாங்கள் திரும்பி வந்து, அயோத்திக்கு மன்னராகிவிட்டதை என் கண்களால் பார்க்கிறேனே!'' [யுத்த காண்டம் 130/50,51].

இவ்விதம் அண்ணனிடம் அன்பு கொண்ட பரதன் சொல்வதைக் கேட்ட அரக்கர் கோமானான விபீஷணனுடைய கண்களிலிருந்தும், சுக்ரீவன் முதலான வானரர்களுடைய கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகியது. பின்னர், ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேக வைபவம் நடந்தேறியது. பரதனும் லட்சுமணனைப் போல் இராமபிரானுடைய சேவையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

சிலநாட்கள் சென்ற பிறகு இராமபிரான் பரதனுடைய அம்மானிடமிருந்து வந்த செய்தி கிடைத்ததும், கந்தர்வர்களை வெற்றிகொள்ள பரதனை அனுப்பி வைத்தார். பரதனும் அரசரின் ஆணையைச் சிரமேற்கொண்டு அங்கே சென்று கந்தர்வர்களை வென்றார். அதன் பின்னர், அண்ணலின் ஆணையின்படி அந்த நாட்டுக்கு அரசராகத் தம் புதல்வர்களுக்கு முடிசூட்டிவிட்டு விரைவிலேயே பெருமானிடம் வந்துசேர்ந்தார். எல்லா விஷயங்களையும் ஸ்ரீராமனிடம் கூறினார். அவர் வந்து தெரிவித்த செய்திகள் அனைத்தையும் கேட்டு, இராமபிரான் மனம் மகிழ்வுற்று பரதனைப் புகழ்ந்தார்.

முடிவில் லட்சுமணனைத் துறந்தபிறகு, தாம் பரமபதம் [ஸ்ரீவைகுண்டம்] செல்ல விரும்புவதால், பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கும் கருத்தை இராமபிரான் வெளியிட்டார். ஆனால் பரதன், அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அவர் அந்தப் பேச்சை எடுத்தவுடனேயே

நினைவிழந்தார். நினைவு வந்தவுடன், ''மன்னரே! ரகுநந்தனா! நான் சத்தியத்தின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். தாங்கள் இல்லாமல், அரசபோகம் எனக்குத் தேவையில்லை. ஏன், தாங்கள் இல்லாவிட்டால் சுவர்க்க போகமும் எனக்கு வேண்டாம்'' [உத்தர காண்டம் 107/6] எனத் தெரிவித்தார்.

அப்போது ஸ்ரீராமன், பரதனது கருத்தையேற்று, குசனுக்கும் லவனுக்கும் முடிசூட்டி அவர்களை அரசர்களாக்கிவிட்டு, சத்ருக்னனையும் அழைத்துக் கொண்டு அனைவருடனும் பரமபதம் எழுந்தருளினார்.

உண்மையில் ஸ்ரீராமனிடம் பரதன் கொண்டிருந்த பக்தி உலக வரலாற்றிலேயே ஒப்பிட இயலாததாகும். அவருடைய தியாகம், புலனடக்கம், விரதம், நியமம் முதலியவை எல்லாமே போற்றுதற்கரியன; பின்பற்றத்தக்கன. இவர்தம் சரித்திரத்திலிருந்து சுயநலத்தைத் துறத்தல், பணிவு, சகிப்புத்தன்மை, எளிமை, பொறுமை, வைராக்கியம், சுவாமி பக்தி போன்ற எண்ணற்ற நற்குணங்களையும், படிப்பினையாக நாம் பெறவேண்டும். பக்தியுடன் பற்றற்றவராக இல்லறத்தை நடத்திக் கொண்டே குடிமக்களைக் காத்துவந்த பரதாழ்வானது தூய வாழ்க்கை, நம் அனைவருக்குமே ஓரழகிய, அரிய முன்னுதாரணமாகும்!



எவ் இடத்தும், இராமன் சரிதை ஆம்
அவ் இடத்திலும், அஞ்சலி அத்தனாய்,
பவ்வ மிக்க புகழ்த் திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தை செய்வாம்அரோ.

— கவிச்சக்கரவர்த்தி கம்பன்

# 5. ஸ்ரீராமனுடைய அடியார்க்கடியான் சத்ருக்னன்

சத்ருக்னனுடைய சரித்திரமும் அதன் வழியில் தனிச்சிறப்பு வாய்ந்ததே. வால்மீகி ராமாயணத்தில் சத்ருக்னனும் விஷ்ணு பகவானுடைய அம்சாவதாரமெனக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், அவருடைய சரித்திரத்தைப் பார்த்தோமானால், அவர் ஸ்ரீராமனுடைய அடியார்க்கடியார்களில் முதன்மையானவர் என்பது நிரூபணமாகிறது. சத்ருக்னன் மௌனமாகச் செயல்புரிபவர், அன்பு கொண்டவர், நன்னடத்தை உள்ளவர், அளவாகப் பேசுபவர், உண்மையே பேசுபவர், இன்பங்களைத் துய்க்கும் ஆசையைத் துறந்தவர், எளிமையானவர், ஆற்றல் நிறைந்தவர், பெரியவர்களைப் பின்பற்றுபவர், மேலும் சிறந்த வீரர். ஸ்ரீராமாயணத்தில் இவரைப் பற்றிய மிகுதியான விவரங்கள் கிடைக்கவில்லை. ஆனாலும் கிடைக்கின்ற விவரங்களிலிருந்தே அவர்தம் பெருமையை ஒருவாறு ஊகிக்க முடியும்.

அவர் இளமைப் பருவத்திலிருந்தே பரதனுடன் கூடவே இருந்தவர். எனவே, இருவரது சரித்திரமும் இணைந்தே செல்கின்றன. அதனால்தான் ஸ்ரீராமாயணத்தில் அவரைப் பற்றி எத்தகைய தனிப்பட்ட தகவலும் காணப்படவில்லை. பரதன் நடந்துகொண்ட விதத்திலிருந்தே சத்ருக்னனுடைய குணங்களைப் பற்றியும், வாழ்க்கையைப் பற்றியும் நாம் அனுமானித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். பால காண்டத்தில் அவரது அன்பின் வர்ணனை இவ்வாறு கூறப்பட்டுள்ளது— ''கையில் வில்லேந்தி தமையனுக்கு உறுதுணையாக லட்சுமணனும் பின்தொடர்ந்து சென்றது போலவே, லட்சுமணனுக்குப் பிறகு பிறந்த சத்ருக்னன் பரதனிடம் மிகவும் பிரியமாக இருந்தான்'' [பால காண்டம் 18/31,32].

ஜனகபுரியில் எல்லா சகோதரர்களுக்கும் திருமணம் நிகழ்ந்தபிறகு, அனைவரும் அயோத்திக்குத் திரும்பி

வந்தனர். திரும்பிவந்த சில நாட்களுக்குப் பிறகு, பரதனை அவருடைய தாய்மாமன் யுதாஜித், தன் நாட்டுக்கு அழைத்துச் சென்றார். அப்போது சத்ருக்னனும் அவருடன் சென்றார். பரதனிடம் கொண்டிருந்த அன்பின் மேலீட்டால், அவர் தாய், தந்தை, உறவினர், அண்மையில் திருமணம் செய்துகொண்ட மனைவி – இவர்கள் மீது மோகம் கொள்ளவில்லை. 'பரதனுடன் இருப்பதே தமது தலையாய கடமை' என்று அவர் அச்சமயம் எண்ணினார்.

பிறகு அயோத்தியிலிருந்து அழைப்பு வந்ததும், அவர் பரதனுடன் திரும்பி அயோத்தி வந்தடைந்தார். அயோத்திக்கு வந்தவுடன் கைகேயியின் வரம், தந்தையின் மரணம், லட்சுமணன்–சீதாதேவியுடன் ஸ்ரீராமன் வனவாசம் சென்றது ஆகிய நிகழ்ச்சிகளைச் சொல்லக் கேட்டு, அவருக்குப் பெருந்துயரம் ஏற்பட்டது. அண்ணன் லட்சுமணனது வீரத்தை அவர் நன்கு அறிந்திருந்தனர். அதனால், அவர் வருத்தம் நிரம்பிய உள்ளத்துடன் வியந்து பரதனிடம் சொன்னார்—

''அண்ணா! எவர் துன்பம் நேரும்போது எல்லாப் பிராணிகளுக்கும் புகலிடமோ அவர், தங்களுக்கும் தங்களைச் சேர்ந்தோர்க்கும் புகலிடம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இயல்பாகவே நற்குணங்கள் நிரம்பிய இராமபிரான், கேவலம் ஒரு பெண்ணால் காட்டிற்கு அனுப்பப்பட்டார் [என்பது எவ்வளவு வேதனையான நிகழ்ச்சி]. அண்ணன் லட்சுமணன் மிகவும் பலசாலி, பராக்கிரமம் உடையவர் என்றெல்லாம் பேச்சு. தாய்–தந்தையரைச் சிறையில் அடைத்தாவது இராமபிரானை இந்த இக்கட்டிலிருந்து ஏன் விடுவிக்கவில்லை?'' [அயோத்தியா காண்டம் 78/2,3]

சத்ருக்னனிடம் வருத்தமும் கோபமும் நிறைந்திருந்தன. உரையாடல் நடந்து கொண்டிருக்கும்போதே ஒரு வாயிற்காவலன் வந்து, ''இளவரசே! கொடிய பாவியான எந்த மந்தரையின் சூழ்ச்சியினால் இராமபிரான் காட்டுக்கு அனுப்பப்பட்டாரோ, அவள் ஆடை–அலங்காரங்களுடன் நின்று

கொண்டிருக்கிறாள்'' என்று சொன்னான். இதைக் கேட்டதும் சத்ருக்னனுக்குப் பெரும் சினம் ஏற்பட்டது. அவர் மந்தரையின் முடியைப் பிடித்து, அவளை முற்றத்திற்கு இழுத்து வந்தார்.

இதைக் கண்ட கூனியின் மற்ற தோழிகள், தயையே உருவான கோசலையிடம் சரணடைந்தாலொழிய, நம்மையும் இந்தச் சத்ருக்னன் விடமாட்டார் என்றெண்ணி, விரைவாக கோசலையிடம் ஓடிவிட்டனர். கைகேயி, மந்தரையை விடுவிக்க வந்தார். அப்போது சத்ருக்னன் அவரையும் அதட்டினார். கடைசியில் பரதன் பெண்களைக் கொல்வது தவறு என்று எடுத்துச் சொன்னார். மேலும் அவர், ''தம்பி! தருமாத்மாவான இராமன், 'இந்தக் கூனி அடித்துத் துன்புறுத்தப்பட்டாள்' என்பதை அறிந்தாரேயானால், உன்னிடத்திலும் என்னிடத்திலும் நிச்சயமாகப் பேசவே மாட்டார்'' [அயோத்தியா காண்டம் 78/23] என்றார். பரதன் சொன்னதைக் கேட்ட சத்ருக்னன், மூர்ச்சையடைந்திருந்த நிலையிலேயே கூனியை விட்டுவிட்டார்.

இந்த நிகழ்ச்சியிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியவை— முதல் விஷயம், இராமபிரானுடைய தருமநீதியின்படி எந்தச் சந்தர்ப்பத்திலும் பெண்களைக் கொலை செய்யக்கூடாது என்பதும், பெண்களுக்கு எவ்வளவு மரியாதை தரவேண்டும் என்பதும். இரண்டாவது விஷயம், தம்மை மறந்து துயரில் கலங்கி நின்றிருந்த நிலையிலும்கூட பரதன், தம்முடைய தம்பியை அதருமம் செய்வதிலிருந்து தடுத்தது. மூன்றாவது விஷயம், கோபத்திலும்கூட சத்ருக்னன் அண்ணனுடைய வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்து அடங்கியது.

இதற்குப் பிறகு ஸ்ரீராமனைத் திருப்பி அழைத்துவர பரதன் புறப்பட்டவுடன் சத்ருக்னனும் கூடவே சென்றார். சித்திரகூடம் சென்று, அங்கே பரதனது கட்டளைக்கிணங்க இராமபிரானது குடிலைத் தேடத் தொடங்கினார். பரதன்,

ஸ்ரீராமனைக் கண்டு விட்டு, அவரை நோக்கி ஓடினார். சத்ருக்னனும் ஸ்ரீராமனைக் காண ஆவல் கொண்டு பரதனைப் பின்தொடர்ந்தார். இங்கே கவி சொல்கிறார்— ''சத்ருக்னனும் கண்ணீர் பெருக்கியவாறே இராமனின் திருவடிகளை வணங்கினான். அவ்விருவரையும் அணைத்துக் கொண்டு இராமனும் கண்ணீர் சொரிந்தார்'' [அயோத்தியா காண்டம் 99/40]. அதற்குப் பிறகு சத்ருக்னன், அண்ணன் லட்சுமணனிடமும் சீதாதேவியிடமும் பேசினார்.

எல்லோரும் ஒன்றுசேர்ந்தனர். அப்போது ஸ்ரீராமனுக்கும் பரதனுக்குமிடையே உரையாடல் நடந்தது. அச்சமயத்தில் லட்சுமணனுக்கும் சத்ருக்னனுக்கும் அங்கே வேலையில்லை. சத்ருக்னன், தமது வாழ்வையே ஸ்ரீராமனின் அடியாரான பரதனுக்கு அர்ப்பணம் செய்திருந்தவர். எனவே அவர், ஸ்ரீராமனிடம் பேச நினைத்ததை எல்லாம் பரதனே சொல்லிவிட்டார்.

பாதுகைகளை எடுத்துக் கொண்டு அயோத்திக்குப் புறப்படும் முன் பரதன், சத்ருக்னன் ஆகிய இரண்டு சகோதரர்களும், ஸ்ரீராமனை வலம் வந்து வணங்கினார். லட்சுமணனது சுபாவம் போன்றே சத்துருக்னனது சுபாவமும் சற்றுத் துடிப்பு மிகுந்ததுதான். கைகேயியின் மீது அவரது மனத்தில் ஆத்திரம் இருந்தது. ஸ்ரீராமன் இதை அறிந்திருந்தார். இதன் காரணமாக விடைகொடுக்கும்போது, நேசத்துடன் சத்ருக்னனுக்கு, ''ரகுகுலத்தில் பிறந்த உத்தமனே! என்மேலும், சீதையின்மேலும் ஆணையிட்டுச் சொல்கிறேன், அன்னை கைகேயியை நன்றாகக் கவனித்துக் கொள். அவரிடம் ஒருபோதும் கோபம் கொள்ளாதே'' [அயோத்தியா காண்டம் 112/27] என அறிவுரை வழங்கினார். சத்ருக்னனுக்கு இராமபிரானிடம் எவ்வளவு அன்பும் பக்தியும் இருந்தன? என்பது இதிலிருந்தும் தெளிவாகிறது.

இதற்குப் பிறகு சத்ருக்னன், பரதனுடன் அயோத்திக்கு வந்து, தொடர்ந்து பரதனது கட்டளைப்படி அரசுக்கும்

குடும்பத்திற்கும் ஒரே சீராகத் தொண்டு செய்து கொண்டிருந்தார். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பரதனுடனேயே இருந்து கொண்டு, அவரது கட்டளையையே சத்ருக்னன் எதிர்பார்த்திருந்தார். பரதனது மனத்திலும் சத்ருக்னன் மீது நம்பிக்கை இருந்தது. இதனாலேயே மிகச்சிறிய வேலையாயிருந்தாலும், மிகப்பெரிய பணியாயிருந்தாலும், அதைச் செய்யுமாறு சத்ருக்னனுக்கே கட்டளையிட்டு வந்தார், பரதன்.

இதற்குப்பின் இராமபிரான் திரும்பிவரும் வரையில், வால்மீகி ராமாயணத்தில் சத்ருக்னனைப் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய சிறப்பான விஷயம் எதுவும் இடம் பெறவில்லை. அனுமான் வந்து, ‘‘இராமபிரான் வருகிறார்’’ எனத் தெரிவித்ததும், பரதனது கட்டளைப்படி சத்ருக்னன்தான் இராமபிரானை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். நகரத்தை அலங்கரித்தல், அரச வீதிகளையும் மற்றப் பாதைகளையும் செப்பனிடுதல் ஆகிய பணிகளைச் செய்ய ஏற்பாடு செய்தார். இராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் முடிந்த பிறகும்கூட, சத்ருக்னன் பரதனுடன் சேர்ந்தே ஸ்ரீராமனுக்காகப் பணிவிடைகளைச் செய்தார். தம்பியர் என்ற முறையில், லட்சுமணன், சத்ருக்னன் இருவரிடமும் பரதனுக்குச் சமமான உரிமை உண்டு என்றாலும், பரதன் பணிகளனைத்தையும் சத்ருக்னனையே செய்யச் செய்தார்.

சீதாதேவி காட்டுக்கு அனுப்பப்பட்ட பிறகு, ரிஷிகள் பலர் இராமபிரானை அணுகி, லவணாசுரன் செய்து வந்த கொடுமைகளை அவரிடம் எடுத்துக் கூறினர். அப்போது இராமபிரான் அவர்களுக்குச் சமாதானம் கூறிவிட்டு, அவையினரிடம், ‘‘லவணாசுரனைக் கொல்ல யார் போகப் போகிறார்கள்? யாருக்கு அனுமதி கொடுக்கலாம்? பரதனுக்கா, சத்ருக்னனுக்கா?’’ என்று கேட்டார். இதைக் கேட்டு பரதன், ‘‘எனக்கு அனுமதி கொடுங்கள். நான், லவணாசுரனைக் கொன்று வருவேன்’’ என்றார்.

பரதன் கூற்றைக் கேட்ட சத்ருக்னன், தம் இருக்கையை விட்டு எழுந்து, ஸ்ரீராமனை வணங்கிச் சொன்னார்— "ரகுநாதா! பெருந்தோளரும் ரகுநந்தனருமான நடுசகோதரர் பரதன், தன் கடமையைச் செய்து முடித்துவிட்டார். முன்னர், தாங்கள் அயோத்தியை வெற்றிடமாகச் செய்துவிட்டு, [கானகம் சென்றபோது,] தாங்கள் திரும்பி வரும் காலம் வரை துயரத்தை மனத்திலிருத்தி நாட்டைப் பரிபாலித்தார். மன்னரே! அவர் பலவிதமான கஷ்டங்களை அனுபவித்து விட்டார். முன்னர் நந்திக்கிராமத்தில், உடலுக்குத் துன்பம் தரும் படுக்கைகளில் படுத்துக் கொண்டு கஷ்டம் அனுபவித்திருக்கிறார்.

கனி–கிழங்குகளைப் புசித்துக் கொண்டு, ஜடை தரித்து, மான்தோல் ஆடையணிந்து, ரகுநந்தனரான அவர் துக்கத்தை அனுபவித்திருக்கிறார். வேந்தரே! நான் இருக்கும்போது, அவர் மறுபடியும் [லவணனுடன் போர் என்ற] இன்னல்களை அனுபவிக்க வேண்டுமா?" [யுத்த காண்டம் 62/11–15]

சத்ருக்னன் இவ்விதம் சொன்னதைக் கேட்டு ஸ்ரீராமச்சந்திரன் பின்வருமாறு சொன்னார்— "காகுத்தனே! [சத்ருக்னா!] நல்லது. நீ சொன்னபடியே ஆகட்டும். நீயே, என் கட்டளையை நிறைவேற்றுவாயாக. லவணாசுரனது அழகான மது நகரத்தில் அரச பதவி அளித்து, உனக்கு முடிசூட்டுகிறேன். பரதனுக்குக் கஷ்டம் கொடுக்கலாகாது என்று நீ கருதினால், அவன் இங்கேயே இருக்கட்டும். நீ மகாசூரன்; கல்வி கற்றவன்; புதிய நகரத்தை நிர்மாணிக்க உன்னால் முடியும். நான் சொல்வதைக் கேட்க எண்ணினாயானால், அந்த ராஜ்யத்தையே தரும முறைப்படி அரசாட்சி செய். சூரனே! எனது கட்டளைக்கு மாறாக, நீ எதுவும் சொல்லக்கூடாது" [உத்தர காண்டம் 62/16,17,19,20].

பகவான் ஸ்ரீராமன் இப்படிச் சொன்னதைக் கேட்டவுடன் சத்ருக்னனுக்கு வெட்கம் வந்துவிட்டது. தணிந்த குரலில்

அவர் பின்வருமாறு சொன்னார்— ''மன்னரே! காகுத்தரே! [எனக்கு முடிசூட்டுதல் என்ற] இந்த விஷயம் 'அறநெறி பிறழ்ந்தது' என்று நான் கருதுகிறேன். மூத்தவர்கள் இருக்கும்போது இளையவனுக்குப் பட்டம் சூட்டுவது என்பது எப்படி நியாயமாகும்? புருஷோத்தமரே! தங்கள் கட்டளைக்குப் பணிந்து நடக்க வேண்டும்தான். பெருந்தகையாளரே! தங்கள் ஆணையை எவராலும் மீற முடியாது.

தாங்கள், எனக்கு நல்லுரை சொல்லியிருக்கிறீர்கள்; வேத–தரும சாஸ்திர நூல்களைக் கற்றும் [நற்குணங்கள் பற்றி] அறிந்திருக்கிறேன். நடுசகோதரன் [பரதன், 'லவணனை நானே அழிக்கிறேன்' என்று] உறுதியாகக் கூறிய பிறகு, நான் இடையில் பேசியிருக்கக் கூடாது. என்னுடைய வாயிலிருந்து, 'நானே சென்று லவணனைக் கொல்கிறேன்' என்ற பதற்றமான சொல் வெளிவந்திருக்கக் கூடாது. அப்படி அநாகரிகமாகக் கூறியதால்தான், இப்படிப்பட்ட [பட்டம் சூட்டிக்கொள்ளுதல் என்ற] பரிதாபநிலை எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

மூத்த சகோதரர் பரதன் [தானே லவணாசுரனைக் கொல்வதாகக்] கூறியபிறகு, நான் அதை மறுத்துப் பதில் சொல்லியிருக்கக்கூடாதுதான். தங்கள் ஆணைக்கு உட்படாவிட்டால், அது அறம் தவறிய செயலாகும். ஆணையை ஏற்று நடந்தால் மூத்தவன் இருக்க, இளையவன் பட்டம்சூட்டிக் கொண்ட குற்றம் ஏற்பட்டு உயர்ந்த பரலோகத்தை இழந்தவன் ஆவேன். காகுத்தரே! பிறரை மதிப்பவரே! தங்கள் ஆணை எதுவோ, அதன்படி நடப்பேனே தவிர, அதற்குமாறாகப் பதில் சொல்ல மாட்டேன்.'' [உத்தர காண்டம் 63/2–7]

எவ்வளவு சிறந்த தியாகம்! ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த நிலையில் பட்டம் பெறுவதை, அவர் தீமை என்கிறார். உண்மை நிலையும் அதுதான். சாதகர்கள் இந்த விஷயத்தை நன்கு கவனிக்க வேண்டும்.

இதற்குப் பிறகு சத்ருக்னன், லவணாசுரன் மீது படையெடுத்தார். இராமபிரான் சத்ருக்னனை வழியனுப்பும் போது அவனைக் கொல்வதற்கான யுக்தியைச் சொல்லிக் கொடுத்தார். ஸ்ரீராமன் வழிச்செலவுக்காக நிரம்பப் பொருள் கொடுத்து, மிகப்பெரிய படையையும் உடன் அனுப்பினார். போகும்போது சத்ருக்னன் ஓர் இரவு வால்மீகியின் ஆசிரமத்தில் தங்கினார். அந்த இரவில்தான் சீதாதேவிக்குக் குசன், லவன் என்ற இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. அந்த இரவு சத்ருக்னனுக்கு மகிழ்ச்சியைத் தரும் இரவாக அமைந்தது. அதற்குப் பிறகு சத்ருக்னன் அங்கிருந்து புறப்பட்டு வழியில் ஏழு நாட்கள் பயணம் செய்து, யமுனைக் கரையில் சியவன ரிஷியின் ஆசிரமத்தை அடைந்து, அங்கே தங்கினார்.

அங்கே சியவன ரிஷியிடமிருந்து லவணாசுரனது அன்றாட வாழ்க்கையைப் பற்றியும், அவனது படை பலம் பற்றியும், போர்த்திறமை பற்றியும் பல உண்மைகளைத் தெரிந்து கொண்டார். பின்பு லவணாசுரன் உணவுக்காக வேட்டையாடக் காட்டுக்குக் கிளம்பிப் போனபிறகு, அவன் திரும்பி வருவதற்குள் சத்ருக்னன் அங்கே சென்று நகரின் நுழைவாயிலில் நின்று கொண்டு அவனைத் தடுத்தார். சத்ருக்னனைப் பார்த்து லவணாசுரன், ''உன்னால் என்ன ஆகும்? நீ ஒரு மனிதப்பதர்! இப்படியே அன்றாடம் நான் ஆயிரக்கணக்கான மனிதர்களை உண்கிறேன்'' என்றான். சத்ருக்னன், தம்மைப் பற்றி அறிமுகம் செய்துகொண்டு, ''நான், உன்னுடன் போரிட விரும்பி வந்திருக்கிறேன்'' என்றார். இருவருக்கும் இடையே பயங்கரமான போர் நடந்தது. கடைசியில் சத்ருக்னன் தமது காதுவரை வில்லின் நாணை இழுந்து, திவ்யமான ஓர் அம்பை அவன் மார்பில் எய்தார். அந்த அம்பு, அவன் மார்பைத் துளைத்துக் கொண்டு பாதாளத்தில் புகுந்து, மீண்டும் சத்ருக்னனது அம்புறாத்தூணியினுள் புகுந்தது. தேவதைகளும் மகரிஷிகளும் சத்ருக்னனைப் புகழத்

தொடங்கினர். ஆகாயத்தில் 'ஜய, ஜய' என்ற ஒலி எழுந்தது; பூமாரி பொழிந்தது.

இவ்விதம் லவணாசுரனைக் கொன்றுவிட்டு அங்கேயே அழகிய மதுராபுரி என்ற நகரத்தை அமைத்த பிறகு, நல்லாட்சிக்கான ஏற்பாடு செய்தார். பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தபின், சத்ருக்னன் அங்கிருந்து அயோத்திக்குத் திரும்பி வந்தார்.

வரும்போதும் வழியில் அவர் வால்மீகியின் ஆசிரமத்தில் தங்கினார். அங்கே அவர் இனிய குரலில் ஸ்ரீராமனது கதை பாடப்படுவதைக் கேட்டார். அதைக் கேட்ட அவர் உள்ளம் கருணையால் நிரம்பியது. இரவில் அங்கேயே தங்கி, அவர் ஸ்ரீராமனைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அவருக்குத் தூக்கமே வரவில்லை. பொழுது புலர்ந்ததும் நித்ய கர்மங்களை முடித்து, முனிவருடைய அனுமதியைப் பெற்று, ஸ்ரீராமனைப் பார்க்கும் ஆவலுடன் விரைவாக அயோத்திக்குப் புறப்பட்டார். வந்தவர் ஸ்ரீராமச்சந்திரனுடைய அரண்மனைக்கு வந்தார். அங்கே இந்திரனைப் போன்று அரியாசனத்தில் அமர்ந்திருந்த ஸ்ரீராமனுக்கு வணக்கம் செலுத்திவிட்டுச் சொன்னார்—

"பகவானே! உங்களுடைய கட்டளைப்படி, லவணாசுரனை வதம் செய்துவிட்டு, அங்கே ஒரு நகரம் அமைத்துவிட்டு வந்திருக்கிறேன். மன்னரே! ரகுநந்தனரே! தங்களைத் தரிசிக்காமல் எப்படியோ ஒருவாறாகப் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. இனியும் தங்கள் பிரிவாற்றாமையை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது.

எல்லை காண முடியா பராக்கிரமம் உடையவரே! காகுத்தரே! கன்றுக்குட்டி, தன் தாயைவிட்டு வெகுநேரம் பிரிந்திருக்க முடியாததைப் போல, தங்களைப் பிரிந்து என்னால் வாழ முடியாது. [அதனால், 'சரி, இங்கேயே இரு' என்று உத்தரவிட்டு,] எனக்கு அருள்புரிய வேண்டும்" [உத்தர காண்டம் 72/11,12].

சத்ருக்னனின் பேச்சைக் கேட்ட இராமபிரான், அவரை மார்புறத் தழுவிச் சொன்னார்— ''வீரனே! நீ வருந்தக் கூடாது. இது க்ஷத்திரியனுக்கு ஏற்ற குணமாகாது. நீ, க்ஷத்திரிய தருமப்படி குடிகளைக் காக்க வேண்டும். அவ்வப்போது என்னைப் பார்த்துப் போக வந்து கொண்டிரு.'' இவ்விதம் ஸ்ரீராமன் கட்டளையிட்டவுடன் சத்ருக்னன் மெல்லிய குரலில் ஒத்துக் கொண்டார். பிறகு அவர் பரதனையும் லட்சுமணனையும் சந்தித்துப் பேசிவிட்டு, எல்லோருக்கும் வணக்கம் சொல்லிவிட்டு, மதுராபுரிக்குத் திரும்பி விட்டார்.

ஸ்ரீராமபிரான் பரமபதம் புறப்பட்ட நேரத்தில், சத்ருக்னன் மீண்டும் அழைக்கப்பட்டார். அப்போது சத்ருக்னன் தம்முடைய புதல்வர்களுக்கு முடிசூட்டிவிட்டு அயோத்தி வந்திருந்தார். ஸ்ரீராமனிடம் வந்து வணங்கிவிட்டுத் தழுதழுத்த குரலில் விண்ணப்பித்தார்—

''ரகு குலத்தின் ஆனந்தக் களஞ்சியமே! என் இரண்டு புதல்வர்களுக்கும் பட்டாபிஷேகம் செய்வித்து, ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்துவிட்டேன். மன்னரே! தங்களுடன் கூடவே செல்வது என்ற முடிவுடன் நான் வந்திருக்கிறேன். வீரரே! அதனால், வேறுவிதமாக ஆணையிட்டு என்னைத் தண்டித்து விடாதீர்கள். என் கோரிக்கையின் அங்கீகாரத்தையே எதிர்பார்க்கிறேன். தங்களைப் போன்றவர்கள் எப்போதும் பேரருள் செய்பவர்கள், அல்லவா?'' [உத்தர காண்டம் 108/13,14]

கருத்து இதுதான்— ''நான் இதுவரை ஒருபோதும் உங்களுடைய கட்டளையை மீறி நடந்ததில்லை. இனியும் நான் அவ்வாறு மீறாமல் நடப்பதற்கு நீங்கள்தான் உதவ வேண்டும்.''

ஸ்ரீராமச்சந்திர பிரபு, சத்ருக்னனது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். சத்ருக்னன், இராமபிரானுடன் பரமபதம் சென்றார். சத்ருக்னனது இந்தச் சிறிய வரலாறு வால்மீகி ராமாயணத்தை ஆதாரமாகக் கொண்டே

எழுதப்பட்டிருக்கிறது. வேறு ராமாயணங்களிலிருந்தோ, மற்ற புராணங்களிலிருந்தோ எந்தக் கருத்தும் எடுத்தாளப்படவில்லை. இதனால் அவருடைய அன்பைப் பற்றியும், பண்புகளைப் பற்றியும் முழு விவரமும் வாசகர்களுக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம். அதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்வதைத் தவிர, நான் வேறு என்ன செய்ய முடியும்?

[குறிப்பு:- லட்சுமணன், இராமபிரானிடம் ஊழியராக இருந்து பணியாற்றியவர். அவரைப் போலவே, பரதனும் இராமபிரானுடைய தாசராக விளங்கியவர். அந்த இராமதாசராகிய பரதனுக்குத் தொண்டு செய்த சத்ருக்னனை இங்கே 'தாசனுக்குத் தாசன்' அதாவது 'தாசானுதாசன்' எனக் கொண்டாடுகிறார் ஆசிரியர்.

ஸ்ரீராமபக்தராகிய லட்சுமணனை 'பகவத்பக்திக்கு' எடுத்துக்காட்டாகவும், ஸ்ரீராமபக்தராகிய பரதனின் தொண்டிற்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட சத்ருக்னனை 'பாகவத அபிமானத்திற்கு' எடுத்துக்காட்டாகவும் கொள்வது வைணவ மரபு].



## அனுமன் துதி

அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக,
ஆர் உயிர் காக்க ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு, அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்,
அவன் எம்மை அளித்துக் காப்பான்.

— கவிச்சக்கரவர்த்தி கம்பன்

# 6. ஆதர்ச பக்தரான அனுமான்

அனுமான், ஸ்ரீராமபிரானது ஆதர்ச [உன்னத] பக்தர். அனுமான், இராமபிரானுடைய தாசபக்தர்களுள் [தொண்டு மூலம் பக்தி செய்பவர்களுள்] தலைசிறந்தவர். வாயுதேவரது அம்சமாக அஞ்ஜனையின் கர்ப்பத்தில் தோன்றிய அனுமான் நைஷ்டிகப் பிரம்மசாரி; மாபெரும் வீரர். அதிசயிக்கத்தக்க பலசாலி; பேரறிவு படைத்தவர்; சாதுர்யம் உள்ளவர்களில் சிறந்தவர்; நன்கு கற்றவர்; சேவா தருமத்தின் ஆசிரியர்; அச்சம் என்பதே இல்லாதவர்; உண்மையே பேசுபவர்; யஜமானரிடத்தில் விசுவாசம் கொண்டவர். பகவானுடைய தத்துவம், ரகசியம், குணநலன்கள், பெருமை – இவற்றையெல்லாம் மிகத்தெளிவாக அறிந்தவர்; சிறந்த வைராக்கியம் படைத்தவர்; சித்திகள் கைவரப் பெற்றவர்; மிகவும் உயரிய அன்பு நிறைந்த பக்தர்; மேலும் நன்னடத்தை உள்ள மகாத்மா; அவர் போர்க் கலையில் நிபுணர்; விருப்பப்படி வடிவம் எடுக்க வல்லவர்; பகவானுடைய பெயர், குணம், லீலை, ஸ்வரூபம் – இவற்றின் சிறந்த ரசிகர்!

யத்ர யத்ர ரகு$_4$நாத$_2$கீர்தநம்
தத்ர தத்ர க்ருதமஸ்தகாஞ்ஜலிம் ।
ப$_3$ாஷ்பவாரிபரிபூர்ணலோசநம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ॥

''எங்கு ஸ்ரீராம நாம கதை சொல்லப்படுகிறதோ அல்லது எங்கு அவரது கீர்த்தனம் நடைபெறுகிறதோ, அங்கே அனுமான் ஏதாவதொரு வேஷத்தைத் தாங்கியவராக இருக்கிறார்'' என்று இப்போதும் கூறுகிறார்கள். இக் கூற்றில் நம்பிக்கை கொள்ளாமல், மக்கள் அவரை அடையாளம் கண்டு கொள்வதில்லை.

அனுமானுடைய நற்பண்புகள் எல்லையற்றவை. பகவானுடைய குணங்களையும், அவர்தம் பக்தர்களுடைய குணங்களையும் யாரால் எவ்விதம் வர்ணிக்க முடியும்?

இதைப் பற்றி எவ்வளவு எழுதினாலும் அவை மிகவும் குறைவாகவே இருக்கும். இங்கே அனுமானது சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறுவதன் வாயிலாக, அவருடைய குணங்களைக் கோடிட்டுக் காட்டுவோம். பம்பா நதிக்கரையில் ஆஞ்சநேயர் ஸ்ரீராமனையும் லட்சுமணனையும் முதன்முதலாகச் சந்திக்கின்ற கட்டம் இருக்கிறதே, அதைப் பார்க்கும்போது அனுமானிடத்தில் காணப்படும் பணிவு, புலமை, மதிநுட்பம் [சாதுர்யம்], எளிமை, அன்பு, சிரத்தை முதலிய குணங்கள் தனிச்சிறப்புடன் கூடியவை என்பது தெளிவாகிறது!

சுக்ரீவன், தம்முடைய மந்திரிகளுடன் ரிச்யமூக மலையில் அமர்ந்து இருந்தான். அப்போது அவனது பார்வை பம்பை என்கிற பொய்கையை நோக்கிச் சென்றது. அங்கே இருவீரர்கள் கைகளில் வில்—அம்புகளுடன் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் மிகவும் அழகாயிருந்தனர். பெருந்தோள்கள் பொருந்திய அவர்கள் மிகுந்த பராக்கிரமசாலிகளாகத் தோற்றமளித்தனர். அவர்களைப் பார்த்ததுமே சுக்ரீவன் அச்சமடைந்தான். ''அனுமான்! நீ சென்று, அவர்களைப் பரீட்சை செய்து, அவர்கள் யார்? என்று அறிந்துவா. அவர்கள் வாலியால் அனுப்பப்பட்டவர்கள் என்று தெரிந்தால், எனக்குச் சைகை மூலம் தெரிவி. நான் புரிந்து கொண்டு இந்த மலையை விட்டு உடனே ஓடிவிடுகிறேன்'' என்று சுக்ரீவன் அனுமானிடம் சொல்கிறான்.

சுக்ரீவனின் கட்டளையைப் பெற்று, அனுமான் ஒரு பிரம்மசாரி வடிவம் தாங்கி, அங்கு போகிறார். ஸ்ரீராமச்சந்திரனை வணங்கி, அவரிடம் கேள்விகள் கேட்கிறார். ஸ்ரீராமசரிதமானசத்தில் கோஸ்வாமி துளசிதாசர், அனுமான் இருவரையும் எவ்வாறு விநயத்துடன் கேட்கிறார்? என்பதை வர்ணிக்கிறார்— ''கருநீல வண்ணமுடைய சரீரமும், சிவந்த நிறமுடைய உடலும் கொண்ட தாங்கள் யார்? க்ஷத்திரிய வேடத்தில் காட்டில் திரியும் வீரர்களா? கடினமான இந்தத்

தரையின் மீது மிருதுவான பாதங்கள் கொண்ட தாங்கள் எதற்காக நடந்து அலைகிறீர்கள்? சுவாமி! தாங்கள் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளில் ஒருவரா? அல்லது தாங்கள் இருவரும் நரநாராயணர்களா? உலகிற்கு மூலமோ? உலகைக் காப்பவரோ? பிறவிகளையும் உலக பாரத்தையும் சிதைக்கும் அந்தப் புவனேசுவரன் எடுத்த மனித அவதாரமோ?''

அத்யாத்ம ராமாயணத்திலும் ஏறத்தாழ வர்ணனை இப்படித்தான் இருக்கிறது. இது தவிர, ஸ்ரீராமச்சந்திரன் தம்பி லட்சுமணனிடம், ''லட்சுமணா பார்! பிரம்மசாரி உருவத்தில் இருக்கும் இவன் எவ்வளவு அழகாகப் பேசுகிறான்! நிச்சயம் இவன் 'வியாகரண [இலக்கண] சாஸ்திர'த்தைப் பல முறைகளில் நன்றாகப் படித்திருக்க வேண்டும். இவன் இவ்வளவு பேசினானே, எங்கும் எந்தப் பிழையும் நேரவில்லையே!'' என்று மாருதியின் புலமையைப் புகழ்கிறார்.

வால்மீகி ராமாயணத்தில் ஸ்ரீராமன், ''இவன் நிச்சயம் எல்லா வேதங்களையும் ஓதியிருக்கிறான். இல்லையென்றால் இந்தவிதமாக எப்படிப் பேச முடியும்?'' என்று சொல்கிறார். மேலும் பலவாறாக, அவர் அனுமானுடைய சொல்லாற்றலைப் புகழ்கிறார். இறுதியில், ''இந்த அறிவாளியான தூதன், எந்த அரசனிடம் இருக்கிறானோ, அந்த அரசனுடைய எல்லாச் செயல்களும் இத் தூதனின் பேச்சாலேயே நிறைவேறிவிடும்.'' ஸ்ரீராமசரிதமானசத்தில் இதற்கு அடுத்து வரும் வர்ணனையில் அன்பு நிறைந்து ததும்புகிறது.

பகவான் ஸ்ரீராமன், தம்மை முழுமையாக அறிமுகப்படுத்திவிட்டு அவரிடம், ''நீங்கள் யார்? சொல்லுங்கள்!'' என்று கேட்கிறார். உடனே அனுமான், அவரை நன்கு அடையாளம் கண்டு கொண்டு அவர் காலில் விழுந்து விடுகிறார். அவரது மேனி சிலிர்த்தது. வாயிலிருந்து வார்த்தை வரவில்லை. அவர் விழிகள் அசைவதை நிறுத்தி,

பகவானுடைய உருவ அழகையும் விசித்திரமான வடிவத்தையும் பார்க்கத் தொடங்குகிறார். அப்போது ஆகா! என்ன திவ்யமான அன்பு வெளிப்படுகிறது. பிறகு சுயநினைவை அடைந்து, தைரியத்தை வரவழைத்துக் கொண்டு ஸ்ரீராமனிடம் இவ்விதம் கூறுகிறார்— ''சுவாமி! நான் [ஐயம் கொண்டு] கேட்பது நியாயம்தானே! ஆனால், தாங்கள் ஏதோ மனிதனைப் போல் கேட்கிறீர்களே? நான், தங்களுடைய மாயையால் மறந்து திரிகிறேன். அதனால், நான் பிரபுவை அறியவில்லை.

அடியேன் சிற்றறிவினன்; மோகம் கொண்டவன்; கோணல் இதயம் கொண்ட அஞ்ஞானி! தீனபந்து ஆகிய பகவானே! நீங்கள் என்னை மறந்துவிட்டீர்களே! இறைவா! என்னிடம் எவ்வளவோ தீய குணங்கள் இருந்தாலும், இந்த அடிமை யஜமானனின் மறதிக்கு ஆளாகிவிடக் கூடாது.''

எவ்வளவு அன்பு! எவ்வளவு எளிமை! இதற்குப் பிறகு மிகவும் பணிவுடன் சுக்ரீவனது நிலையை விளக்கிய அனுமான், இரு சகோதரர்களையும் தம்முடைய தோள்களின் மேல் ஏற்றிக் கொண்டு, அவர்களை சுக்ரீவனிடம் அழைத்துச் செல்கிறார். அங்கே ஒருவரையொருவர் அறிமுகம் செய்து வைத்து, அக்னிசாட்சியாக ஸ்ரீராமனுக்கும் சுக்ரீவனுக்கும் இடையே நட்பு ஏற்படுத்துகிறார். பிறகு 'வாலி வதம்' நடக்கிறது.

ஸ்ரீராமச்சந்திரன், லட்சுமணனுடன் பிரவர்ஷண மலையில் வாழ்ந்து மழைக்காலத்தைக் கழிக்கிறார். அங்கோ சுக்ரீவன் அரசபோகம், ஆடம்பரங்கள், மனைவி என்று இவை கிடைத்தவுடன் ஸ்ரீராமனது கைங்கரியத்தை மறந்து, இன்பம் துய்ப்பதில் ஈடுபட்டுவிடுகிறார். இதைப் பார்த்த அனுமான் அரச நீதிப்படி ஸ்ரீராமனுக்குச் செய்யவேண்டிய கடமையை சுக்ரீவனுக்கு நினைவூட்டுகிறார். அவரது அனுமதி பெற்று வானரர்களை அழைத்து வர, பல நாடுகளுக்கும் தூதர்களை அனுப்புகிறார். எவ்வளவு அறிவுடன் அவர் செயல்படுகிறார்!

இதற்குப் பிறகு சீதாதேவியைத் தேட, வானரர்களை அனுப்புவதைப் பற்றிய ஆலோசனையின் வர்ணனையை வால்மீகி ராமாயணத்தில் படித்தால், சுக்ரீவனுக்கு அனுமான் மீது எவ்வளவு நம்பிக்கை இருந்தது என்பதும், இராமபிரானுக்கும் அவரது செயல் திறனில் எவ்வளவு நம்பிக்கை இருந்தது என்பதும் நன்கு தெரிய வருகின்றன. அங்கே ஸ்ரீராமனின் முன்னிலையில் ஆஞ்சநேயரிடம் சுக்ரீவன் சொல்கிறான்—

''வானரோத்தமனே! பூமி, பரந்த வெளியான ஆகாயம், தேவலோகம் மற்றும் தண்ணீரிலும் உனது போக்குக்குத் தடையேதும் இல்லை என்பதை நான் அறிவேன். அசுரர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், மானுடர்கள், தேவர்கள் மற்றும் சமுத்திரங்கள், மலைகள் கொண்ட எல்லா உலகங்களையும் அறிந்தவன், நீ. வானரோத்தமனே! வீரனே! தடைபடாத உனது போக்கு, வேகம், பொலிவு, எதையும் எளிதாகச் செய்து முடிக்கும் திறன் ஆகிய இவையெல்லாம் பேராற்றல் பெற்ற உனது தந்தை வாயுவுக்கு நிகரானவை.

ஈடிணையில்லாத அறிவுடன் கூடிய பராக்கிரமத்தில் உனக்குச் சமமான பிராணி இவ்வுலகில் இல்லை. எனவே, சீதாதேவியைக் கண்டுபிடிப்பதற்கான [அடைவதற்கான] வழிமுறைகளையும் நீயே நிச்சயித்துக் கொள். ராஜதந்திர வல்லுநனான அனுமானே! உன்னிடத்தில்தான் உடலாற்றல், தெளிந்த அறிவு, பேராற்றல், இடம்—காலங்களுக்கு ஏற்றபடி செயலாற்றுதல், தகுந்த உபாயத்தை மேற்கொள்வது ஆகிய இந்தச் சிறப்புகளெல்லாம் ஒருங்கே அமைந்திருக்கின்றன.'' [வால்மீகி. கிஷ்கிந்தா. 44/3—7]

சுக்ரீவன், இவ்விதம் கூறியதைக் கேட்ட இராமபிரான் மாருதியை நோக்கினார். தமது நோக்கம் நிறைவேறி விட்டதாகவே எண்ணினார். மனத்துக்குள் மிகுந்த மகிழ்ச்சி கொண்டு அவர் அனுமானுடைய கையில் தமது பெயர் பொறிக்கப்பட்ட மோதிரத்தைக் கொடுத்துப் பின்வருமாறு மொழிந்தார்—

''வானரோத்தமனே! ஜனகரின் புதல்வி சீதை, இந்த அடையாளத்தைக் கொண்டு என்னிடத்திலிருந்து வந்திருப்பவனாக, உன்மீது நம்பிக்கை கொள்வாள். அப்போது அவள் அச்சமின்றி உன்னைப் பார்ப்பாள். வீரனே! உன்னுடைய முயற்சி, தைரியம், பராக்கிரமம் ஆகியவற்றுடன் [உன்னிடம் அளவற்ற நம்பிக்கை வைத்து] சுக்ரீவன் கூறிய கூற்றும், உன்னால்தான் இந்தக் காரியத்தில் வெற்றி கிடைக்கப் போகிறது என்பதை எனக்குத் தெரிவிப்பது போலிருக்கிறது.'' [வால்மீகி. கிஷ்கிந்தா. 44/13,14]

அத்யாத்ம ராமாயணத்திலும்கூட இவ்விதமே ஸ்ரீராமன் அனுமனின் குணங்களைப் பாராட்டியிருக்கிறார். தமது அடையாளமாக மோதிரத்தை அனுமானிடம் கொடுத்துவிட்டு பகவான் ஸ்ரீராமன் சொல்கிறார்— ''வானர வீரர்களில் சிறந்தோனே! இந்த வேலையை முடிப்பதில் நீயே திறமை வாய்ந்தவன். நான் உனது பராக்கிரமம் முழுவதையும் அறிவேன். நல்லது, சென்றுவா. நீ செல்லும் பாதை மங்களகரமாக இருக்கட்டும்.'' [அத்யாத்ம. கிஷ்கிந்தா. 6/29]

இதற்குப் பிறகு ஜாம்பவான், அங்கதன் முதலியோருடன் அனுமான், சீதாதேவியைத் தேடிக் கொண்டு போகிறார். அவர்கள் சமுத்திரக்கரைக்கு வருகிறார்கள். சீதாதேவியைப் பற்றிய துப்பு எதுவும் கிடைக்கவில்லை. அதனால் துயருற்று எல்லோரும் உண்ணாநோன்பை மேற்கொண்டு உட்கார்ந்து விடுகிறார்கள். அப்போது சம்பாதி என்ற கழுகரசனுடன் பேசிய போது, நூறு யோஜனை தாண்டிக் கடலுக்கப்பால் இலங்கை நகரில் அரக்கருக்கரசன் இராவணன் இருக்கிறான் என்றும், அங்குதான் அவன் அசோகவனத்தில் வைதேகியை மறைத்து வைத்திருக்கிறான் என்றும் தெரிய வருகின்றன.

எல்லா வானரர்களும் ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு கடலைத் தாண்டுவதைப் பற்றி யோசிக்கத் தொடங்கினர். அங்கதன் ஒவ்வொருவராகக் கேட்டான். ஒவ்வொருவரும்

தனது ஆற்றலைப் பற்றிக் கூறினர். ஆனால், அனுமானோ மௌனமாக இருந்துவிட்டார். அவருடைய தற்பெருமையற்ற குணம்தான் என்னே! வால்மீகி ராமாயணத்தில் இந்த இடத்தைப் பற்றிய வர்ணனை மிகவும் சுவையாகவும் விரிவாகவும் உள்ளது. அங்கே ஜாம்பவான் அனுமானுடைய புத்தி, பலம், ஆற்றல், பராக்கிரமம், கல்வி, வீரம் ஆகிய எல்லாவற்றையும் பற்றி வியப்பூட்டும்வண்ணம் வர்ணிக்கிறார். அவர் சொல்கிறார்— ''வானரர் உலகத்தின் தனிப்பெரும் வீரனே! எல்லாச் சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்தவனே! அனுமானே! தனியாக ஓர் இடத்தில் மௌனமாக உட்கார்ந்திருக்கிறாயே? ஏன் பேசமாமல் இருக்கிறாய்? நீ, மனோபலம், உடல்வலிமை போன்றவற்றால் இராம–லட்சுமணர்களுக்கும் நிகரானவனாயிற்றே!

மகாபலசாலியும், புள்ளினத்தில் முதன்மையானவருமான கருடனின் இறக்கைகளின் வலிமை எவ்வளவோ, அவ்வளவு உன் தோள்வலிமை. அத்துடன் உன்னிடமுள்ள அளவுகடந்த துணிச்சலும் வேகமும் அவருடையதைக் காட்டிலும் குறைந்தவையல்ல. வானரோத்தமனே! எல்லா உயிர்ப்பிராணிகளையும்விட மிக அதிகமான பலம், அறிவு, துணிச்சல், தைரியம் போன்றவை உன்னிடம் இருக்கின்றன. இதை, நீ ஏன் அறியவில்லை?'' [வால்மீகி. கிஷ்கிந்தா. 66/2–4,6,7]

இதன் பிறகு ஜாம்பவான், அவர் பிறப்பின் சிறப்பைச் சொல்கிறார். சிறுவயதில் அவரிடம் இருந்த வீரம், அவருக்குக் கிடைத்த வரம் ஆகியவற்றைச் சொல்லி, அவரது பலத்தை அவருக்கு நினைவுறுத்தி, ''புலி நிகர் வானரனே! உடனே எழுவாய்; பெருங்கடலைத் தாண்டுவாய். அனுமானே! மற்ற எல்லாப் பிராணிகளைக் காட்டிலும், பாய்ந்து தாவிச் செல்லும் சக்தி, உன்னிடம் அதிகமாக இருக்கிறது. எல்லா வானரர்களும் கவலையோடு இருக்கிறார்கள். அனுமானே! நீ ஏன் அவர்களை அலட்சியம் செய்கிறாய்? பேராற்றல்

படைத்த பகவான் மகாவிஷ்ணு, மூன்றே அடிகளால் மூவுலகையும் அளந்தது போல, நீயும் உடலை வளர்த்துக் கொண்டு உனது சக்தியைக் காட்டு'' [வால்மீகி. கிஷ்கிந்தா. 66/37,38] என உற்சாகமூட்டுகிறார். இதைக் கேட்டவுடனேயே அனுமான் கடலைத் தாண்டுவதற்கு வசதியாக, தமது உடலைப் பெரியதாக்கிக் கொண்டார்.

ஸ்ரீராமசரிதமானசத்திலும் இதே கருத்துடன் ஒத்ததான வர்ணனை இருக்கிறது. அங்கே அங்கதனுக்குத் தைரியம் சொன்ன பிறகு ஜாம்பவான் அனுமானிடம், ''அனுமானே! கேள், நீ பலவான். ஏன் மௌனம் சாதிக்கிறாய்? நீ, வாயுவின் புதல்வன்; வாயுவிற்குச் சமமான பலம் கொண்டவன். புத்தி, விவேகம், அறிவு – எல்லாவற்றிற்கும் நீ பொக்கிஷம். அப்பா! உன்னால் நிறைவேற்ற முடியாத செயல் என்று இந்த உலகத்தில் என்ன இருக்கிறது? ஸ்ரீராமபிரானது பணிக்கெனவே உனது அவதாரம் ஏற்பட்டிருக்கிறது'' என்று சொல்கிறார். இதைக் கேட்டதும் அனுமான் மலையளவிற்கு வளர்ந்தார். தங்கநிறம் கொண்ட உடல், ஆற்றலின் பொலிவு – இவற்றில் மற்றொரு மலையரசன் போல் காணப்பட்டார்!

அத்யாத்ம ராமாயணத்திலும் ஏறத்தாழ இதே போன்ற வர்ணனை இடம் பெறுகிறது. மேலும் மலைபோல உருவம் எடுத்தபிறகு அனுமான் கேட்கிறார்— ''வானர வீரர்களே! நான் சமுத்திரத்தைத் தாண்டி இலங்கை சென்று, அதைச் சாம்பலாக்கி, மேலும் இராவணனையும் அவன் குலத்தையும் அழித்து, ஜனகரின் மகளான சீதாப்பிராட்டியைக் கொண்டு வருவேன். சொல்லுங்கள், இராவணனது கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்துக் கொண்டு, இலங்கையைத் திரிகூட மலையுடன் இடது கையில் எடுத்துக் கொண்டுவந்து இராமபிரான் முன் வைக்கட்டுமா? அல்லது நல்ல அங்க அடையாளங்கள் கொண்ட ஜானகி அன்னையைப் பார்த்துவிட்டு வந்து விடட்டுமா?'' [அத்யாத்ம. கிஷ்கிந்தா. 9/22–24]

அவரது ஆத்மபலம்தான் என்னே! ஜாம்பவான், ''வீரனே! உனக்கு மங்களம் உண்டாகட்டும்! நீ சுபலட்சணங்கள் பொருந்திய ஜானகிதேவி 'உயிரோடு இருக்கிறாரா?' என்பதை மட்டும் பார்த்துவிட்டு வந்துவிடு!'' என்றார். கடலைக் கடக்க உறுதிபூண்ட அனுமான், வானரர்களிடம் சொல்லும் வார்த்தைகளிலிருந்து, அவர் ஸ்ரீராமநாமத்தின்மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தார் என்பது புலப்படுகிறது. அவர் ஸ்ரீராமனுடைய குணம், பிரபாவம், தத்துவம் எல்லாவற்றையும் நன்கு அறிந்திருந்தார். மேலும் ஸ்ரீராமனிடம் அசையாத அன்பு கொண்டிருந்தார். அத்யாத்ம ராமாயணத்தில் இந்தக் காட்சி பின்வருமாறு சித்தரிக்கப்படுகிறது—

''வானரர்களே! நீங்கள் அனைவருமே பகவான் ஸ்ரீராமன் விடுத்த அம்பைப் போல் நான் ஆகாயத்தில் போவதைப் பாருங்கள். நான் இன்றே ஸ்ரீராமனுக்கு இனியவரான ஜனகரின் மகளைத் தரிசனம் செய்துவிடுவேன். உண்மையிலேயே நான் கடமையைச் செய்பவனாக ஆனேன்; கொடுத்து வைத்தவனாக ஆகிவிட்டேன். நான் மீண்டும் ஸ்ரீராமனைக் காண்பேன். உயிரை விடும்போது, எவருடைய பெயரை ஒருமுறை நினைப்பதாலேயே தாண்ட இயலாத இந்தச் சம்சாரக் கடலைத் தாண்டி, மனிதர்கள் பரமபதத்தை அடைகிறார்களோ, அந்த ஸ்ரீராமனுடைய தூதன் நான். அவர் கைவிரல் மோதிரத்தை எடுத்துக் கொண்டு, உள்ளத்தில் அவரையே தியானித்துக் கொண்டு இந்தச் சிறிய கடலைத் தாண்டிவிடுவேன். இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது?'' [அத்யாத்ம. சுந்தர. 1/2–6]

அனுமன், சமுத்திரத்தைக் கடப்பதற்காக பயங்கரமான உருவத்தை எடுத்துக் கொண்டார். அந்த உருவத்தின் வர்ணனை வால்மீகி ராமாயணத்தில் விரிவாகவே இருக்கிறது. அதன் ஒரு சிறுகுறிப்பே இங்குச் சுட்டப்படுகிறது— ''எவ்விதம் பௌர்ணமியன்று கடல் பொங்கி வளர்கிறதோ, அவ்விதமே அனுமானும் பகவான் ஸ்ரீராமனது காரியம் வெற்றி பெறுவதற்காக ஓங்கி வளரத் தொடங்கினார்.

அளவிட முடியாதபடி சரீரத்தை எடுத்துக் கொண்ட அவர், சமுத்திரத்தைத் தாண்ட விரும்பி, [அதற்குத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ளும்விதமாகக்] கைகளாலும் கால்களாலும் அந்த மலையை அழுத்தினார்.

வானரரால் அழுத்தப்பட்ட அந்த மலையும் சிறிது நேரம் நடுங்கிற்று. [அந்த அசைவினால்] மரங்களில் பூத்திருந்த மலர்களெல்லாம் உதிர்ந்தன. படைவீரர்கள் அரசனைப் பின்தொடர்ந்து செல்வதைப் போல, அவரது தொடை வேகத்தால் முறிக்கப்பட்ட ஸால மரங்களும் மற்ற மரங்களும் அனுமானைப் பின்தொடர்ந்து சென்றன.'' [வால்மீகி. சுந்தர. 1/10,11,12,48]

இது தவிர, அங்கே ஆஞ்சநேயரது தோற்றம் பற்றியும் உள்ளத்தைக் கவரும் நடையில் மிக அழகாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. 'அப்போது பத்து யோஜனை அகலமும், முப்பது யோஜனை நீளமும் கொண்ட நிழல், வேகத்தின் காரணமாகக் கடலின் மீது மிகவும் அழகுடன் காணப்பட்டது' என்று வர்ணிக்கப்படுகிறது. பேராற்றலும் பேருருவமும் கொண்ட அவ்வானர வீரர், வானில் தொங்குகின்ற 'இறக்கைகள் படைத்த பர்வதம்' போல் அப்போது காணப்பட்டார். இதிலிருந்து அவரது உயர அகலத்தை ஒருவாறு ஊகித்துக் கொள்ள முடியும்.

அவரைப் பார்த்த மைநாக பர்வதம், தன்னிடத்தில் தங்கி இளைப்பாறிப் போகும்படி, அவரைப் பலவாறு வேண்டிக் கொண்டது. ஆனால், பகவான் ஸ்ரீராமனது பணியை முடிக்காமல் அவருக்கு இளைப்பாறுதல் என்பது ஏது? அதன் வேண்டுகோளை ஏற்றதற்கு அடையாளமாக, அவர் அதைத் தொட்டுவிட்டுத் தொடர்ந்து முன்னேறுகிறார்.

ஸ்ரீராமசரிதமானசத்தில் ஸ்ரீதுளசிதாசர் இந்தக் கட்டத்தைப் பின்வருமாறு வர்ணிக்கிறார்— ''மலையை மாருதி காலால் தொட்டதுதான் தாமதம், உடனே அது பாதாளத்தில் அழுந்திவிட்டது. அவர் வீணாகாத வேகமுடைய இராமபாணம்

போல் சென்றார். கடல், அவர் 'இராமதூதர்' என்பதால் மைநாகமலையிடம் 'இவர் ஓய்வெடுக்க உதவு' என்றது. அனுமானோ அதைத் தொட்டுவிட்டு, 'இராம கைங்கரியத்தைச் செய்து முடிக்காமல் எனக்கு ஏது ஓய்வு?' என்று அதை வணங்கிச் சென்றார்.

சுரஸை என்கிற நாகமாதாவுக்குத் தம் புத்தி பலத்தைக் காட்டிவிட்டு, அவர் மேலே சென்றபோது மிகப்பெரிய உடல் படைத்த ஓர் உருவம் கடலின் மேல் கிடப்பதைப் பார்க்கிறார். அச்சுறுத்தும் முகத்தோற்றம் கொண்ட அந்த அரக்கியைப் பார்த்த மாருதி, வானர அரசன் சுக்ரீவன் சொன்ன நிழலைப் பற்றி இழுக்கும் மிக்க பலம் வாய்ந்த அரக்கி 'சாயாகிராகி' இவள்தான் என உணர்ந்து கொண்டார். அப்படி உறுதி செய்து கொண்டு, அவர் தமது உடலை மிகவும் பெரிதாக்கிக் கொண்டார். அதைக் கண்ட சிம்ஹிகை என்ற அந்த அரக்கியும் தன் பயங்கரமான வாயை விரித்துக் கொண்டு, அவர் மீது பாய்ந்தாள். அப்போது அனுமான் சிறிய உருவம் எடுத்துக் கொண்டு அவள் வாய்க்குள் புகுந்து, தம் நகங்களினால் அவளுடைய இதயத்தைக் கிழித்துவிட்டார். இவ்விதம் திறமையாகவும் தைரியத்துடனும் அவளைக் கொன்றுவிட்டு முன்போலவே மேலே சென்றார். அவரது அறிவுத்திறன், தைரியம், துணிவு ஆகியவைதாம் எப்படிப்பட்டவை!

இவ்விதம் கடலைத் தாண்டி, அஞ்சனை மைந்தன் திரிகூடமலை மீது இறங்கினார். இடையில் எந்தவித இளைப்பாறலுமின்றி இடையறாது நூறு யோஜனை கொண்ட கடலைக் கடந்து வந்த போதும், அவர் உடலில் எந்தவிதக் களைப்பும் ஏற்படவில்லை. அங்கிருந்து அவர் இலங்கையை நன்கு கூர்ந்து பார்த்தார். பிறகு, இலங்கையின் மிக அருகே வந்து எப்படி உள்ளே புகலாம்? என்று ஆராய்ந்தார். முடிவில், 'சிறிய உருவத்தில் உள்ளே புகுவதே சரி' என்று முடிவு செய்தார்.

மாலை நேரத்தில் அவர் சிறிய உருவத்தில் இலங்கைக்குள் புகத் தொடங்கினார். அப்போது இலங்கை நகரின் காவல் தெய்வம் லங்கிணி என்கிற அரக்கி, அவரைக் கண்டுவிட்டாள். அவள், அனுமானை அதட்டி விரட்டிவிட்டு, அவரை உதைத்தும் விட்டாள். அவர், தம் இடது கை முட்டியால், அவள் மீது விளையாட்டாக ஒரு குத்துவிட்டார். அதுபட்டவுடனே அவள் ரத்தத்தைக் கக்கிக் கொண்டு பூமியில் விழுந்துவிட்டாள். பிறகு எழுந்த அவள் பிரம்மதேவன் சொன்னதை நினைத்து, அனுமானைத் துதிக்கத் தொடங்கினாள். இறுதியில் சொன்னாள்— ''இன்று நானும் பேறுபெற்றவளானேன். அதனால்தான் பலகாலம் சென்றபின் பிறவித்தளையை அகற்றவல்ல ஸ்ரீரகுநாதனுடைய நினைவு இன்று கிடைத்தது. மேலும், கிடைப்பதற்கரிய அவருடைய பக்தனுடைய சந்திப்பும் கிடைத்தது. அந்த தசரதர் மைந்தன், என் இதயத்தில் எப்போதும் மகிழ்ச்சியுடன் குடிகொள்ளட்டும்!'' [அத்யாத்ம. சுந்தர. 1/57]

ஸ்ரீராமசரிதமானசத்தில் இந்தக் கட்டம் பின்வருமாறு காணப்படுகிறது. அனுமானிடம் அடிபட்டு நிலைகுலைந்து கீழே விழுந்து, பிறகு நினைவு தெளிந்து லங்கிணி சொல்கிறாள்— ''ஐயனே! நான் மிகுந்த புண்ணியம் செய்திருக்க வேண்டும். அதனால்தான் இன்று என்னுடைய கண்களால் ஸ்ரீராமச்சந்திரனின் தூதனைக் காணப் பெற்றேன். அப்பனே! ஸ்வர்கம், மோட்சம் – இவ்விரண்டின் சுகங்களெல்லாம் ஒருங்கே கிடைத்தாலும், அந்தச் சுகம் சத்சங்கத்தால் ஒருகணமே கிடைக்கும் இன்பத்திற்கு ஒப்பாகாது!''

இதற்குப் பின்னர் வாயுபுத்திரன், சிறிய உருவத்தைத் தாங்கி, இலங்கையில் சீதாதேவியைத் தேடிக் கொண்டு சுற்றும்போது, பல அரக்கர்களுடைய வீடுகளில் புகுந்து பார்த்துக் கொண்டே, கடைசியில் இராவணனது அரண்மனைக்கும் செல்கிறார். அங்கே இராவணனது

அரண்மனையின் அற்புதமான அமைப்பைப் பார்த்துக் கொண்டே வந்தவர், அங்கிருந்த புஷ்பக விமானத்தை வியப்போடு பார்க்கிறார். அதற்குப் பிறகு சீதாதேவியைக் கண்டறியும் முயற்சியில் அந்தப்புரத்திலுள்ள இராவணனுடைய மனைவியரைப் பார்த்தபோது, அவர் தம் மனநிலையை வர்ணிக்கும் அந்த வர்ணனையிலிருந்து பிரம்மசரியத்தில் அவருடைய உறுதி எவ்வளவு உயர்வானது என்றும், பிறருடைய மனைவியரைப் பார்ப்பது அவருக்கு எவ்வளவு தவறாகப்பட்டது என்பதும், அவர் உணர்வு எவ்வளவு அழகியதாகவும் தூய்மையானதாகவும் இருந்தது என்பதும் தெரிகின்றன.

வால்மீகி ராமாயணத்தின்படி இராவணனது அரண்மனையில் அனுமான் மூலைமுடுக்கெல்லாம் சலித்துப் பார்த்துவிட்டார். ஆனால், ஜானகிதேவி எங்கும் காணப்படவில்லை. அப்போது சீதாதேவியைத் தேடும் பணியில் பெண்களைப் பார்க்க நேரும்போது அவர் உள்ளத்தில், 'இது தருமம்தானா?' என்ற பயம் ஏற்பட்டுவிட்டதாம். அவர் சிந்திக்கத் தொடங்கிவிட்டார். 'இவ்விதம் அந்தப்புரத்தில் அயர்ந்து உறங்கும் மங்கையரைப் பார்ப்பது என் தருமத்தை முழுமையாக அழித்துவிடும். ஆனால் நான், இந்தப் பெண்களைக் காமக்கண் கொண்டு பார்க்கவில்லை. இவர்களைக் காணும்போது என் மனத்தில் ஒருவிதமான மாற்றமும் ஏற்படவில்லை. பலன் அனைத்தின் தீய–நல்ல போக்குகளுக்குமே மனமே காரணம். என் மனமோ முழுமையாக விகாரமற்று இருக்கிறது. வேறு எந்த வழியாலும் நான் சீதாதேவியைத் தேட இயலாது. பெண்ணைப் பெண்களிடையே தானே தேட வேண்டி நேரிடுகிறது?' இந்த அழகிய எண்ணங்களும் தூய்மையான உணர்ச்சிகளும் அவருக்கே பொருந்தும்!

சாதகர்கள் இதிலிருந்து சிறப்பானதொரு பாடம் கற்றுக் கொள்ள வேண்டும். மிகவும் விபரீதமான எந்த ஒரு

நிலையிலும்கூட மனத்தில் விகாரம் வரவிடக் கூடாது. வால்மீகி ராமாயணத்தில் சீதாதேவியைத் தேடும் இடம் மிகவும் விசித்திரமாகவும் விரிவாகவும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. இங்கு சுருக்கமாகக் கூறியுள்ளோம்.

ஸ்ரீராமசரிதமானசத்தில் பின்வரும் விவரம் சொல்லப்பட்டிருக்கிறது. சீதாதேவியைத் தேடிச் செல்லும் வேளையில், அனுமானுக்கு ஓர் அழகிய அரண்மனை தென்படுகிறது. அதன்மீது பகவான் ஸ்ரீராமனுடைய ஆயுதங்களின் அடையாளங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. துளசிச்செடிகள், அந்த அரண்மனையின் அழகை அதிகப்படுத்திக் கொண்டிருக்கின்றன. இவற்றைக் கண்ட அவர் சிந்திக்கிறார்— 'இங்கே உள்ள அனைத்து வீடுகளுமே அரக்கர் வசிக்குமிடங்கள். இங்கே ஒரு சாது எப்படி வசிக்க வந்தார்?' அதே நேரத்தில் விபீஷணன் கண்விழித்து எழத் தொடங்கியதும் இராமநாமத்தைப் பலமுறை சொல்வதைப் பார்த்த அனுமான், 'இவர் நிச்சயம் ஸ்ரீராமனுடைய பக்தர்தாம். அவரைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு சாதுவால் காரியத்திற்கு எந்தக் கேடும் ஏற்படாது' என்று முடிவு செய்கிறார்.

அந்தணர் வேடத்தில் இருந்த அனுமான் அவரை அழைத்தார். அதைக் கேட்ட விபீஷணன் எழுந்து, அவரிடம் வந்தார். நமஸ்காரம் செய்து, அவருடைய நலனைப் பற்றி விசாரித்தார்— ''அந்தணரே! உங்களுடைய கதையைத் தெளிவாகச் சொல்லுங்கள். நீங்கள், ஹரி பக்தர்களில் ஒருவரா? என் உள்ளத்தில் உங்களிடம் அதிகமான அன்பு ஏற்படுகிறது. அல்லது, நீங்கள் ஏழைகளை நேசிக்கும் இராமபிரான்தானா? என்னைப் பேறு பெற்றவனாக்க வந்துள்ளீர்களா?''

அப்போது அனுமன் ஸ்ரீராமச்சந்திரனுடைய கதை முழுமையையும் கூறிவிட்டு, தம் பெயரையும் வெளியிட்டார். இராமகதையைக் கேட்டவுடன் இருவர் உடல்களும்

விம்மியெழுந்தன. இராமனுடைய குணங்களை எண்ணி, இருவருடைய மனமும் அவற்றில் ஆழ்ந்தன.

ஸ்ரீராமனின் பக்தர்களிடையே அன்பு எப்படி இருக்க வேண்டும்? என்பதைத் தெளிவாக்கும் ஓர் அழகிய சித்திரம் இங்கே தீட்டப்பட்டிருக்கிறது. விபீஷணன் சொல்கிறார்— ''சூரியகுல நாதன், என்னை நாதனற்றவன் என்றறிந்து, எப்போதாவது அருள்புரிவாரா? என் உடல் தாமசமானது; அரக்கனுடைய உடல்; ஒரு சாதனையும் என்னிடம் கிடையாது. மனத்திலும் இராமனிடம் அன்பு இல்லை. ஆனால் அனுமானே! இப்போது எனக்கு ஒரு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. ஹரியின் அருள் இல்லாமல் ஒரு சாது கிடைக்க மாட்டார்.''

அப்போது அஞ்சனை மைந்தர் சொல்கிறார்— ''விபீஷணரே! கேளுங்கள். அடியாரிடத்தில் எப்போதுமே அவர் அன்பு காட்டுகிறார். இது அவருடைய வழிமுறை. நான் என்ன உயர்ந்த குலத்தோனா? சஞ்சல குணமுள்ள வானரம்; எல்லா விதங்களிலும் தாழ்ந்தவன். நண்பரே! கேளுங்கள், நான் அவ்வளவு தாழ்ந்தவனாக இருப்பினும், இராமன் எனக்கு அருள்புரிந்தார்.'' பகவானுடைய குணங்களை எண்ணிய அனுமானின் கண்களில் நீர் நிரம்பிற்று.

மேலும் கூறுகிறார்— ''இதை அறிந்தும்கூட, அவரை மறந்து எங்கோ சுற்றுகிறார்களே! அவர்களுக்குத் துயரம் ஏற்பட்டால், அதில் வியப்பதற்கு எதுவுமில்லை.'' இவ்விதம் இராமனுடைய குணங்களைத் தொகுத்துக் கூறிய மாருதி சொல்லால் விளக்கவொண்ணாத அமைதியைப் பெற்றார்.

அனுமானிடம்தான், எவ்வளவு அழகிய பணிவும் அடக்கமும், ஒப்பற்ற நம்பிக்கையும், மாற்றறியாத பகவத் பிரேமையும்! இதற்குப் பிறகு விபீஷணனிடமிருந்து எல்லாவற்றையும் அறிந்துகொண்ட ஆஞ்சநேயர், அசோகவனத்திற்குச் சென்று சீதாப்பிராட்டியைக் காண்கிறார். மனத்திலேயே அவருக்கு வணக்கம் செய்கிறார்.

அனுமான், அசோகவனத்திற்குச் சென்று, சீதாதேவியைச் சந்தித்துப் பேசுவதற்கு எவ்வளவு மதிநுட்பம் காட்ட வேண்டியிருந்தது? என்னென்ன தந்திரம் செய்ய வேண்டி இருந்தது? என்ற விபரங்கள் வால்மீகி ராமாயணத்தில் விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. பலவிதமான யுக்திகளைச் செய்து, சீதாதேவியைச் சந்திக்கும் வழியைச் சிந்தித்துச் சிந்தித்து, இறுதியில் மிகவும் எச்சரிக்கையுடன் அடர்ந்த ஒரு மரத்தின் கிளைகளுக்கிடையே மறைந்து உட்கார்ந்து கொள்கிறார் என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது.

அங்கிருந்து கொண்டே எல்லாப் புறங்களிலும் பார்வையைச் செலுத்துகிறார். அப்படிப் பார்க்கும்போது அவர் பார்வை சீதாப்பிராட்டியின் மேல் விழுகிறது. பல அடையாளங்களைக் கொண்டு அவர்தான் சீதாதேவி என்று உறுதி செய்து கொள்கிறார். அங்கே அன்னை சீதை வாழ்ந்து வந்த முறையைப் பற்றியும், அவருடைய சுவபாவத்தைப் பற்றியும் மிகவும் விசித்திரமானதும் அழகியதுமான முறையில் வால்மீகி வர்ணித்திருக்கிறார். மாருதி, ஜானகிதேவியின் நகைகளைப் பார்த்து இவ்வாறு ஊகிக்கிறார். ஸ்ரீராமன், சீதாதேவியின் அங்கங்களில் எந்தெந்த நகைகள் இருப்பதாகச் சொல்லியிருந்தாரோ, அவை எல்லாம் அவர் மீது காணப்பட்டன. சீதாதேவி, ரிச்யமூக பர்வதத்தில் வீசியெறிந்த நகைகள் மட்டுமே காணப்படவில்லை.

இவ்விதம் சீதாதேவியின் தோற்றம் மற்றும் குணங்களைச் சோதித்து, மிகுந்த புத்திக்கூர்மையுடன் 'இவர்தான் நாம் தேடிவந்த சீதாதேவி' என்று உறுதி செய்து கொண்டார். இது உறுதியானவுடன் அவருக்கு, சீதாதேவிக்கு இருந்த துயரநிலையைக் காட்டிலும் மிகுந்த துயரம் ஏற்பட்டது. மனதிற்குள்ளேயே அவர் மிகவும் உழன்று இரங்கிப் புலம்பினார்.

இதற்கப்பால், 'சீதாதேவியாரிடம் எப்படிப் பேசவேண்டும்? எப்போது, எந்த நேரத்தில், எப்படிச் சந்திக்க வேண்டும்?

இராமபிரானுடைய தாசன் என்ற நம்பிக்கை ஏற்படும்படி எப்படிச் சொல்ல வேண்டும்?' என்பதைப் பற்றி ஆழ்ந்து யோசித்து, தம்முடைய சிந்தனை திறனைக் காட்டியிருக்கிறார். சரியாக அதே நேரத்தில் இராவணன் அரக்கியர் பலர் புடைசூழ, அங்கே வந்து சேருகிறான். அவன், ஜானகிதேவியைப் பலவாறு அச்சுறுத்தித் தன்வசப்படுத்த முயல்கிறான். ஆனால், தேவியோ சற்றுகூட அசைந்து கொடுக்கவில்லை. முடிவில் அவன் போய் விடுகிறான். அவன் கட்டளைப்படி அரக்கிகள் பலவாறாக சீதையை அச்சுறுத்துகிறார்கள். அப்போது 'திரிஜடை' என்கிற அரக்கி, தான் கண்ட கனவை எடுத்துக் கூறி, மைதிலியைத் தைரியம் கொள்ளச் செய்கிறாள். அவள் வார்த்தையைக் கேட்டு, மற்ற அந்தக் கொடிய அரக்கிகள்கூட அமைதியாகி விடுகின்றனர். சீதாதேவியார் பிரிவாற்றாமை துயரில் வாடிப் புலம்பத் தொடங்கி விடுகிறார்.

அப்போது ஆஞ்சநேயர் சீதாதேவியைச் சந்திக்க, இதுதான் சரியான நேரம் என்று தீர்மானித்து, தான் ஏற்கனவே நிச்சயித்திருந்தபடி இராமனுடைய கதையை வர்ணிக்கத் தொடங்குகிறார். ஸ்ரீரகுநாதருடைய பிறப்பு முதல் இந்த நேரம் வரையிலான வரலாற்றைக் கேட்டு, சீதாதேவிக்கு மிகவும் வியப்பு ஏற்பட்டது.

அத்யாத்ம ராமாயணத்தில், 'இறுதியாக சீதாதேவி இது கனவோ, பிரமையோ என்று எண்ணத் தொடங்கினார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் எண்ணிய அவர் கூறியதாவது— ''எவர் என் காதுகளுக்கு அமுதம் போல் இனிமையான வார்த்தைகளைச் சொன்னாரோ அவர், அந்த இனிய சொல்லுக்குரியவர், பெரியவர், என் எதிரே வெளிப்படட்டும்.'' [அத்யாத்ம. சுந்தர. 3/18]

இவ்வார்த்தைகளைக் கேட்டு, அன்னை ஜானகிக்கெதிரே அனுமான் மிகவும் பணிவுடன் வந்து நிற்கிறார். திடீர் என்று ஒரு குரங்கைக் கண்ட தேவியின் மனத்தில் ஐயம்

ஏற்படுகிறது. 'ஒருக்கால் இராவணன்தான் என்னை வஞ்சிக்க வந்துவிட்டானோ?' என்றெண்ணி, அவர் முகத்தைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு அமர்ந்து விடுகிறார். அப்போது அனுமான் பேசிய பேச்சு ஸ்ரீராமசரிதமானசத்தில் இவ்வாறு வர்ணிக்கப்பட்டுள்ளது— ''தாயே ஜானகி! நான் இராமனுடைய தூதன். கருணைக்கு எல்லையான இராமபிரான்மேல் ஆணை அம்மா! இந்த மோதிரத்தை நான் கொண்டு வந்திருக்கிறேன். இதை இராமபிரானே அடையாளத்திற்காகக் கொடுத்திருக்கிறார்.''

இதற்குப் பிறகு ஜானகி அம்மையார் கேட்க, அவர் வானர அரசரான சுக்ரீவனுடன் இராமனுக்கு நட்பு எப்படி ஏற்பட்டது? என்பதை விரிவாகச் சொல்லி, ஸ்ரீராம–லட்சுமணர்களின் அங்க அடையாளங்கள், குணச்சிறப்புகள் எல்லாவற்றையும் எடுத்துரைத்தார். வால்மீகி ராமாயணத்தில் இந்தக் கட்டத்தின் வர்ணனை மிக விரிவாகவும், சுவையோடு கூடியதாகவும் அமைந்திருக்கிறது. ஸ்ரீராமசரிதமானசத்தில் கோஸ்வாமி துளசிதாசர் மிகவும் சுருக்கமாக பின்வருமாறு வர்ணித்திருந்தார்— ''அனுமனின் பேச்சைக் கேட்டு, அவர் மனத்தில் நம்பிக்கை பிறந்தது. இவனுடைய மனம், செயல், சொல் – இவற்றால் 'இவன் கருணைக்கடலான இராமபிரானின் பக்தன்தான்' என்று அறிந்தார். அவ்வாறு அறிந்ததும் அன்பு பெருகி வந்தது. கண்கள் நீராலும் உடல் மகிழ்ச்சியாலும் நிரம்பின.''

இதற்குப் பிறகு வீரம் செறிந்த அனுமான், பகவான் ஸ்ரீராமன் கொடுத்திருந்த மோதிரத்தை அன்னை சீதையிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்ட தேவி, ஸ்ரீராமனையே அடைந்துவிட்டது போல் மகிழ்ச்சியடைந்தார்.

அப்போது வைதேகி மாருதியிடம் கூறிய சொற்கள் ஸ்ரீராமசரிதமானசத்தில் பின்வருமாறு வர்ணிக்கப்பட்டுள்ளன— ''அப்பனே! பிரிவாற்றாமை என்னும் கடலில் மூழ்கிய எனக்கு, நீ தோணி ஆனாய். தம்பி லட்சுமணனுடைய நலம்

பற்றியும், கரனின் எதிரியும் சுகத்தின் உறைவிடமுமாகிய பகவானுடைய நலன் பற்றியும் சொல். ஸ்ரீரகுநாதன் மென்மையான இதயம் உள்ள கருணை வள்ளல். அப்படியிருக்க அனுமானே! என்ன காரணம் கொண்டு என்னை, இப்படிக் கொடுமையாகத் துறந்திருக்கிறார்? அடிமைக்கு இன்பம் தருவது அவர் இயல்பு. அவர், அந்த ரகுநாயகன் என்னை எப்போதாவது எண்ணுகிறாரா? அப்பனே, என் கண்கள் எப்போது அவரைப் பார்க்கும்? அந்த மென்மையான கருநீல சரீரத்தைப் பார்த்து, எப்போது அவற்றின் தாபம் தீரும்? எனக்கு பேச நா எழவில்லை. கண்களில் நீர் நிரம்பிற்று. நாதா! என்னை ஏன் இப்படி அடியோடு மறந்தீர்கள்? ஐயோ! என்ன செய்வேன்!'' என்று வருந்தினார்.

இவ்விதம் பிரிவாற்றாமைத் துயரில் வாடிய அவரைப் பார்த்து ஆஞ்சநேயர் சொல்கிறார்— ''தாயே! கருணைக்கு இருப்பிடமான அழகன், பிரபு ஸ்ரீராமன் தம்பியுடன் நலமாக இருக்கிறார். ஆனால், தங்களைப் பற்றிய துயரத்தினால் துயருற்றிருக்கிறார். அம்மா! மனத்தில் குறை கொள்ளாதீர்கள். ஸ்ரீராமச்சந்திரனின் மனத்தில் தங்களைப் பற்றி இரண்டு மடங்கு அன்பு இருக்கிறது. தாயே! இப்போது மனத்தைச் சரி செய்து கொண்டு, இராமபிரான் அனுப்பிய சேதியைக் கேளுங்கள்.'' இதைச் சொல்லிவிட்டு அனுமான் அன்பினால் நெகிழ்ந்துவிட்டார். அவர் கண்களில் நீர் நிரம்பி வழிந்தது.

அறிவாளியான அஞ்சனை மைந்தன், இராமபிரானது அன்பு நிறைந்த பிரிவாற்றாமை துயரை, அன்னை ஜானகிக்குக் கூறினார். இறுதியில், ''அன்பே! எனக்கும் உனக்கும் இடையே உள்ள ரகசியத்தை என் மனம் ஒன்றே அறியும். அந்த மனம், எப்போதும் உன்னிடமே இருக்கிறது. அதிலிருந்து என் அன்பின் ஆழத்தைத் தெரிந்து கொள்'' என இராமபிரான் மொழிந்ததாகப் பிராட்டியிடம் தெரிவித்தார்.

இராமபிரானின் அன்பு ததும்பும் இச்செய்தியைச் செவியுற்ற மைதிலியும் பிரேமையில் மூழ்கிவிட்டார். அவருக்குத் தம் உடலைப் பற்றிய நினைவே இல்லை. அப்போது அனுமான் மீண்டும் சொல்கிறார்— ''ரகுபதியின் மாட்சிமையை எண்ணுங்கள். என் வார்த்தையைக் கேளுங்கள். இந்த அச்சத்தை விடுங்கள். அரக்கர்கள் கூட்டம் விட்டில்பூச்சிக் கூட்டம் போன்றது. ரகுபதியின் அம்பு நெருப்பு போன்றது. தாயே! இதயத்தில் தைரியம் கொள்ளுங்கள். அவை எரிந்து பொசுங்கிவிட்டதாகவே எண்ணுங்கள்.''

இவற்றையெல்லாம் கேட்டுவிட்டு வைதேகி, ''எல்லா வானரர்களும் உன்னைப் போலத்தானே இருப்பர்? அரக்கர்கள் மிகவும் பயங்கரமானவர்கள். அச்சம் ஏற்படுத்தும் தோற்றமுடையவர்கள். இவர்களை நீங்கள் எவ்வாறு வெற்றி கொள்வீர்கள்? என் மனத்தில் இந்த ஐயம் எழுகிறது!'' என்று கேட்டார். இதைக் கேட்ட மாருதி மலை போன்ற பயங்கரமான தமது தோற்றத்தையும், மறைந்திருந்த தமது உண்மையான ஆற்றலையும் காட்டினார். அதைப் பார்த்த தேவியின் மனத்தில் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது.

அவர் மனம் மகிழ்ந்து, அனுமானுக்குப் பல வரங்களைத் தந்தருளினார். ''பகவான் ஸ்ரீராமன் உனக்கு அருள் புரிவார்'' என்றும் சொன்னார். இதைக் கேட்டதும் அனுமான் அன்பில் மூழ்கிவிட்டார். மீண்டும் மீண்டும் அவருடைய திருவடிகளில் விழுந்து எழுந்து, கைகளைக் கூப்பிக் கொண்டு சொன்னார்— ''இப்போது நான் தன்யனானேன். உங்களுடைய ஆசிகள் வீண்போகாதவை. இது எல்லோரும் அறிந்தது'' என்றார். இதிலிருந்து அனுமானுக்கு ரகுநாதனுடைய சரணங்களில் எவ்வளவு ஆழமான அன்பு இருந்தது! என்று வெளியாகிறது.

ஜானகிதேவி, ''வானரப்படையுடன் ஸ்ரீராமன் இந்தப் பெரிய கடலைக் கடந்து, இங்கே எப்படி வருவார்?'' என்று வினவியதற்கு, ''புருஷோத்தமர்களான இருவரும் என் தோள்களின் மீது ஏறி வந்துவிடுவார்கள். வானர அரசன்

சுக்ரீவன் படையுடன் ஆகாய வழியாக நொடி நேரத்தில் இந்தப் பெருங்கடலைத் தாண்டி வந்துவிடுவார்'' [அத்யாத்ம. சுந்தர. 3/47,48] என்று விடைகூறுவதாக அத்யாத்ம ராமாயணம் கூறுகிறது.

இந்தக் கட்டத்திலும் அனுமானுடைய பலம், வீரியம், துணிவு ஆகியவற்றைப் பற்றிய விவரம் கிடைக்கிறது. இதற்குப் பிறகு அன்னை ஜானகியின் அனுமதி பெற்று, அனுமான் அசோகவனத்தின் பழங்களைத் தின்று, பிறகு தம் சுவாமி இராமனுடைய காரியத்தைச் செய்து முடிக்கும் எண்ணத்தோடு, அந்த வனம் முழுவதையுமே அழித்து விட்டார். விவரமறிந்த இராவணன் பெரிய படையையும் அட்சகுமாரனையும் அனுப்பினான். அவர்களுக்கும் வாயுகுமாரருக்கும் இடையே பயங்கரப் போர் நிகழ்ந்தது. அனுமான், தனது மிகச்சிறந்த வீரம்—போர்த்திறன் காரணமாக, எளிதாகவே ஜம்புமாலி என்கிற மந்திரியின் ஏழு புதல்வர்களையும், ஐந்து சேனாதிபதிகளையும், அட்சகுமாரனையும் கொன்றுவிட்டார். இந்தப் போரிலிருந்து அனுமானுடைய ஒப்பற்ற பலம், ஆண்மை, போர்த்திறன் ஆகிய எல்லாம் நன்கு புலனாகின்றன.

வால்மீகி ராமாயணத்தில் இந்த இடம் மிக அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளது. அனுமானது ஒப்பற்ற பராக்கிரமத்தைச் சித்தரித்து, அங்கே பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது— "எதிரிகளை வாட்டுபவரான அனுமான், சிலரை உள்ளங்கையால் அறைந்து வீழ்த்தினார்; சிலரைக் கால்களாலும், சிலரை முஷ்டியினாலும் தாக்கிக் கொன்றார்; நகங்களால் சிலரைக் கிழித்தார்; சிலரை மார்பினால் தேய்த்தார்; சிலரைத் தொடையால் நசுக்கினார். அவருடைய பயங்கர சப்தத்தைக் கேட்டு, [நடுநடுங்கி] அங்கேயே தரையில் விழுந்து மாண்டனர், சிலர்.'' [வால்மீகி. சுந்தர. 45/12,13]

உயிர் பிழைத்த அரக்கர்கள் மூலமாக, மந்திரியின் ஏழு புதல்வரும், தலைவர்கள் அனைவரும், ஐந்து சேனாதிபதிகளும்,

அட்சகுமாரனும் கொல்லப்பட்டனர் என்று இராவணனுக்குத் தெரிய வந்தபின், அவன் இந்திரஜித்தை உற்சாகப்படுத்தி, அனுமானைப் பிடித்துவர அனுப்பினான். மேகநாதனுக்கும் [இந்திரஜித்திற்கும்], மாருதிக்கும் இடையே மிகவும் பயங்கரமான போர் நிகழ்ந்தது. கடைசியில் அவன், அனுமானைக் கட்ட பிரம்மாஸ்திரத்தை விடுத்தான். அப்போது பிரம்மாவை மதித்து அனுமான் கட்டுண்டார். மேலும், 'அரக்கர்களிடம் பிடிபடுவதால் தமக்கு நன்மையும் உண்டு; அரக்கர்களின் அரசனான இராவணனுடன் பேச வாய்ப்பும் கிடைக்கும்' என்று எண்ணியும், அவர் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட எவ்வித முயற்சியும் செய்யாமல் இருந்துவிட்டார். அப்போது அரக்கர்கள், அவரைப் பலவிதமான கயிறுகளால் கட்டினர். இவ்விதம் செய்ததனால் பிரம்மாஸ்திரத்தின் ஆற்றல் மறைந்துவிட்டது. அப்படி பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டும்கூட மிகுந்த மதிநுட்பம் படைத்த ஆஞ்சநேயர், அதை உணராதது போலவே நடந்து கொண்டார்.

அத்யாத்ம ராமாயணத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது— "இதற்குப் பிறகு அவர் இராவணனின் சபைக்குக் கொண்டு வரப்பட்டார். அங்கே சென்று, பெரிய அவையின் நடுவே மிகவும் ஆடம்பரமாக அரியாசனத்தில் அமர்ந்திருந்த இராவணனைப் பார்த்தார். அனுமானைப் பார்த்த இராவணனது மனத்தில் பெரும் கவலை துளிர்த்தெழுந்தது. இந்த அச்சம் ஊட்டும் வானரன் யார்? 'சிவகணத்தைச் சேர்ந்த நந்தி பகவானே வானரனாக உரு எடுத்து வந்துவிட்டாரோ' என்றெல்லாம் சிந்திக்கத் தொடங்கினான். இவ்விதம் மனத்திற்குள்ளேயே பலவாறாகத் தர்க்கம் செய்துவிட்டு, பிரஹஸ்தனிடம் பின்வருமாறு கேட்டான்— "பிரஹஸ்தா! இவனைக் கேள்! இவன் ஏன் இங்கு வந்திருக்கிறான்? இங்கே இவனுக்கு என்ன வேலை? வனம் முழுவதையும் ஏன் அழித்தான்? என் அரக்க வீரர்களை எதற்காக வலுவிலே கொன்றான்?" [அத்யாத்ம. சுந்தர. 4/5]

பிரஹஸ்தனும் எல்லா விஷயங்களையும் உள்ளபடியே சொல்லும்படி கட்டாயப்படுத்தினான். அப்போது அனுமன் அரசியல் நுணுக்கத்துடன் விடையளித்தார். மனத்தில் சுவாமி ஸ்ரீராமனை நினைத்துக் கொண்டே, ''தேவர்களுக்கெல்லாம் பகைவனான இராவணா! நீ நன்றாகக் கேட்டுக் கொள். நாய், தூய அவியைத் திருடி எடுத்துக் கொண்டு வருவது போலவே, நீ உன் அழிவைத் தேடிக் கொள்ள, எந்தச் சர்வேசுவரனின் உத்தம பத்தினியைக் கவர்ந்து கொண்டு வந்திருக்கிறாயோ, எல்லோர் உள்ளத்துள்ளும் உறையும் அந்த பகவான் ஸ்ரீராமனுடைய தூதன் நான்'' [அத்யாத்ம. சுந்தர. 4/8] என்றார் மாருதி.

வால்மீகி ராமாயணத்தில் இந்தக் கட்டம் விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது— ''நான் இந்திரனாலோ, யமனாலோ, வருணனாலோ அனுப்பப்பட்டவன் அல்லன்; குபேரனுடன் எனக்கு நட்பு கிடையாது. அதாவது, நான் பிறப்பினாலேயே வானரன்தான்! [பொய்யுருவம் ஏற்று வரவில்லை]. ராட்சஸ மன்னனைக் காண்பதற்காக இங்கே வந்தேன். அது எளிதில் கைகூடாத காரியமாக இருந்ததால், ராட்சஸ ராஜனைச் சந்திக்க[க் கிடைக்கும் குறுக்கு வழியாக] அசோகவனத்தை அழித்தேன். அதன்பிறகு, பலசாலிகளான ராட்சஸர்கள் [யுத்தம் செய்வதற்காக] அங்கே வந்தார்கள்.

என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, நான் பதில் யுத்தம் செய்தேன். தேவாசுரர்களாலும்கூட அஸ்திர–பாசங்களால் என்னைக் கட்டிப் போட முடியாது. மன்னனைப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே, பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டேன்'' [வால்மீகி. சுந்தர. 50/13–17] என்று மிடுக்குடன் பேசுகிறார், வாயுகுமாரர்.

இதற்குப் பிறகு அவர், இராமபிரானது கதை முழுவதையும் விவரித்துவிட்டு, சுக்ரீவனுடன் அவர் நட்பு கொண்டதையும், வாலியைக் கொன்றதையும் சொல்லி, ''நான், சீதாதேவியின் இருப்பிடம் பற்றி அறிந்து போக வந்திருக்கிறேன்'' என்றார்.

இதற்குப் பிறகு அவர் மிகுந்த யுக்தியுடன் தனது சுவாமியின் பலம், பராக்கிரமம், பெருமை, ஐசுவரியம் ஆகியவை பற்றி இராவணனுக்குக் கூறி, அவனுக்கு அறிவு புகட்ட முயன்றார். ஸ்ரீராமசரிதமானசத்தில் அனுமான் பின்வருமாறு சொல்கிறார்— ''இராவணா! நான் கைகூப்பி உன்னிடம் வேண்டிக் கொள்கிறேன். தற்பெருமையை விட்டுவிட்டு என் அறிவுரையைக் கேள்.

தேவர்கள் அசுரர்கள் மற்றும் எல்லாச் சராசரப் பிராணிகளையும் விழுங்குகிற காலமே, எவரிடம் அச்சம் கொண்டு மிகவும் பயப்படுகிறதோ, அவரிடம் ஒருபோதும் பகைமை பாராட்டாதே. நான் சொல்கிறேன், ஜானகி தேவியைக் கொடுத்துவிடு.

கரனுடைய எதிரி, ஸ்ரீரகுநாதன் அடைக்கலம் வந்தவரை அணைத்துக் காப்பவர்; கருணைக்கடல். நீ, அவரடிகளை அண்டினால் பிரபு உன் குற்றங்களை மறந்து, தம் திருவடிகளில் உனக்கு இடம் தருவார்.

இராமபிரானுடைய திருவடிக் கமலங்களை இதயத்தில் பதித்துக் கொள். இலங்கையில் தொடர்ந்து, அரசை ஆள். தசகண்டனே! [பத்துத் தலையனே!] இராவணா! நான் அறுதியிட்டுச் சொல்கிறேன், கேட்டுக் கொள். ஸ்ரீராமனைப் பகை கொண்டவனைக் காக்கக் கூடியவர் யாருமே இல்லை. உன் தற்பெருமையை விட்டுவிடு. அது மோகத்தை மூலமாகக் கொண்டது. மிகுந்த துன்பத்தை விளைவிக்கக் கூடியது. அதை விட்டுவிட்டு ரகுகுலத்தின் தலைவனும் கருணைக்கடலுமான பகவான் ஸ்ரீராமச்சந்திரனை வழிபடு'' என்று இராவணனுக்கு இனிமையாக அறிவுறுத்துகிறார்.

ஸ்ரீராமனது பிரபாவத்தைப் பலவிதங்களில் எடுத்துச் சொல்லி, அனுமான் அறிவுறுத்தியதாக அத்யாத்ம ராமாயணத்திலும் சொல்லப்படுகிறது— ''இராவணா! நீ, உன் இதயத்தில் இடம் கொண்டிருக்கும் பகையுணர்ச்சியான

மூர்க்கத்தனத்தை விட்டுவிட்டு, சரணாகதி செய்பவனுக்கு அன்பரான இராமபிரானை வழிபடு. சீதாதேவியை முன்னிட்டுக் கொண்டு, உன் புதல்வர்களையும் உறவினர்களையும் உடன் அழைத்துக் கொண்டு, இராமபிரானிடம் சென்று, அவரைச் சரணடை. அவ்விதம் செய்தால் நீ அச்சத்திலிருந்து விடுபடுவாய்!'' [அத்யாத்ம. சுந்தர. 4/23]

இவ்விதம் அஞ்சனை மைந்தர், இராவணனுக்கு நன்மை தரக்கூடிய பல அறிவுரைகளைச் சொன்னார். ஆனால், அவனுக்கு அவை பிடிக்கவில்லை. அவன் அனுமானிடம் கோபம் கொண்டு, ''அட குரங்கே! அச்சமற்றவன் போல, என் எதிரே எப்படிப் பிதற்றிக் கொண்டிருக்கிறாய். நீ குரங்குகளிலும் தாழ்ந்தவன். இதோ நான் உன்னைக் கொல்வேன்'' என்றான். அவன் அனுமானைப் பலவகையாக வசை பாடிவிட்டு, அரக்கர்களிடம் அவரைக் கொல்ல உத்தரவிட்டான். உத்தரவைக் கேட்டதும் பல அரக்கர்கள் அனுமானைக் கொல்ல எழுந்து வந்தனர். அப்போது விபீஷணன், இராவணனுக்கு அறிவுரை கூறினார்.

விபீஷணன் தலைதாழ்த்தி, ''தூதனைக் கொல்லாதீர்கள். அது நீதிக்கு விரோதம். அண்ணா! வேறு தண்டனை ஏதாவது கொடுங்கள்!'' என்று மிகவும் பணிவுடன் கேட்டுக் கொண்டார். எல்லோருமே 'இது நல்ல யோசனை' என்றனர். அதைக் கேட்ட இராவணன், 'நான் எல்லோருக்குமே இதைத் தெளிவுபடுத்துகிறேன். குரங்குக்கு வால் மீது பிரியம். எனவே, துணியை எண்ணெயில் நனைத்து, இவன் வாலில் கட்டி நெருப்பை வைத்துவிடுங்கள். வாலின்றி இவன் அங்கே போவான். பிறகு, பிடிவாதமுள்ள இந்த அசடு, தன்னுடைய யஜமானனையும் அழைத்து வருவான். எவன் பெருமையை இவன் புகழ்ந்தானோ, அவனது வலிமையையும் நான் பார்த்து விடுகிறேன்'' என்று சொன்னதாக மானசம் வர்ணிக்கிறது.

அத்யாத்ம ராமாயணத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது—''இதைக் கேட்ட அனுமான், 'சரி, நமது நோக்கம்

நிறைவேறிற்று' என்று எண்ணிக் கொண்டார். அரக்கர்கள் இராவணனது கட்டளையைப் பெற்றுத் துணிகளை நெய்யிலும் எண்ணெயிலும் நனைத்து நனைத்து, அவரது வாலில் கட்டி வாலின் நுனியில் நெருப்பை வைத்தனர். அவரை நகரெங்கும் கட்டி இழுத்துச் சென்று, 'இவன் திருடன். அதனால்தான் இவனுக்கு இந்தத் தண்டனை' என்று பறைசாற்றினர். சிறிது தூரம் சென்றவுடன் அனுமான், தமது உடலைக் குறுக்கிக் கொண்டு எல்லாக் கட்டுக்களையும் கழற்றி எறிந்தார். பிறகு, மலைபோல உடலை வளர்த்துக் கொண்டார். இலங்கை முழுவதையும் எரித்துப் பொசுக்கினார்.''

''ஒரு வீட்டிலிருந்து மற்றொரு வீட்டுக்குத் தாண்டிக் குதித்து, அனுமன் தன் பெரிய வாலின் துணியில் உள்ள எரிகின்ற தீயினால் மாடிகள், அரண்மனைகள், தோரணங்கள் ஆகியவற்றுடன் கூடிய இலங்கை முழுவதையும் எரித்து விட்டார். அப்போது 'அப்பா, அய்யோ, மகனே, நாதா' என்று கத்திக் கொண்டு அரக்கர்களின் மனைவியரும், அரக்கப் பெண்களும் நாற்புறங்களிலும் ஓடினர். அரண்மனைகளின் உச்சியிலும் ஏறிவிட்டனர்.'' [அத்யாத்ம. சுந்தர. 4/42,43]

''வானரன் அனுமான் எழும்பிக் குதித்துத் தங்க உப்பரிகைகளில் ஏறினார். அரக்க மகளிர் அஞ்சி நடுங்கினர். ஒரே நொடியில் நகரம் முழுவதையும் எரித்தார். விபீஷணனின் மாளிகை ஒன்றை மட்டும் எரிக்கவில்லை. [ஆம், அசோக வனத்தையும் விட்டு வைத்தார்.] இங்குமங்கும் சுற்றி வந்து இலங்கை முழுவதையும் கொளுத்தினார். பிறகு கடல் நடுவில் குதித்தார். வாலை நனைத்துச் சூட்டைப் போக்கிக் கொண்டார். பிறகு சிறிய உருவத்தை எடுத்துக் கொண்டு மைதிலியின் எதிரே கை கூப்பியவராக வந்து நின்றார்'' என மானசம் வர்ணிக்கிறது.

அனுமான், இவ்வாறாக ஜானகியின் எதிரே வந்து, அவருக்கு வணக்கம் செலுத்தினார். இராமபிரானிடம்

செல்வதற்கு அனுமதி கேட்டார். அப்போது அன்னை சீதாதேவி, ''அனுமானே! நான், உன்னைப் பார்த்த பிறகு, என் துயரத்தைச் சிறிது மறந்திருந்தேன். இப்போது நீயும் போய்விடுவாய்! சொல், பகவான் ஸ்ரீராமனைப் பற்றிய செய்திகளைக் கேள்விப்படாமல் நான் எப்படி இருப்பேன்?'' என்று சொல்லி வருந்தினார். அப்போது அனுமானின் சொற்கள் இவ்விதம் அமைந்துள்ளன என்று அத்யாத்ம ராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது— ''ஜானகிதேவியே! அப்படியென்றால், நீங்கள் என் தோள் மேல் ஏறி அமருங்கள். நான் ஒரே கணத்தில் உங்களை ஸ்ரீராமனுடன் சேர்த்து விடுகிறேன்.'' [அத்யாத்ம. சுந்தர. 5/6]

வால்மீகி ராமாயணத்தில் உள்ள வர்ணனை இதைவிட விரிவாக இருக்கிறது. இதைக் கேட்ட ஜானகிதேவி, ''அனுமானே! மனமொப்பி நான், வேறு ஓர் ஆண் மகனை எப்படித் தொடுவேன்? ஸ்ரீராமன், வானரர்களுடன் வந்து இராவணனைக் கொன்று, என்னை அழைத்துப் போகட்டும். அப்படிச் செய்வதுதான் அவருக்கு அழகு. எனவே, நீ போ. இன்னும் கொஞ்ச நாட்கள்தானே. நான், எப்படியோ உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்.''

இதற்குப் பிறகு அனுமான் மொழிந்ததை ஸ்ரீராமசரித மானசம் பின்வருமாறு தெரிவிக்கிறது— ''தாயே! ரகுநாயகர் என்னிடம் கொடுத்ததுபோல ஏதாவது அடையாளப் பொருள் கொடுங்கள்.'' அப்போது சீதாதேவி அனுமானிடம் தமது சூடாமணியைக் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்ட அனுமான் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்.

அதற்குப் பிறகு, ஜயந்தன் காகத்தின் உருவம் எடுத்துக் கொண்டு அலகால் கொத்தியது, பகவான் ஸ்ரீராமன் அவன் மீது கோபம் கொண்டது ஆகிய நிகழ்ச்சிகளை சீதாதேவி, அனுமானிடம் விவரித்துச் சொன்னார்.

இப்படியாக அனுமான், சீதாதேவி கொடுத்த செய்திகளை எடுத்துக் கொண்டு அவரை வணங்கிவிட்டு அங்கிருந்து

புறப்பட்டார். அவரது மனத்தில் இராமபிரானைத் தரிசிக்கப் பெரும் ஆர்வம் ஏற்பட்டது. எனவே, அவர் வேகமாக மலை ஏறத் தொடங்கினார். அவர் பாதங்களை வைத்ததால் மலையின் பாறைகள் பொடிப்பொடியாயின. மிகவும் உயரமான சிகரத்தின் மேலேறி நின்று, தம் உடலை வளர்த்துக் கொண்டார். கடலைத் தாண்டி வடக்குக் கரையை அடையும் பொருட்டு, மலையிலிருந்து எழும்பிக் காற்றைப் போல் ஆகாயத்தைச் சென்றடைந்தார். அவர் கால்களை அழுத்தி வைத்து எழும்போது, அந்த மலை அவர் வேகத்தையும் பாரத்தையும் தாங்காமல் பெரும் ஒலியுடன் தன் மேல் இருந்த பிராணிகள், வளர்ந்திருந்த மரம்—செடி—கொடிகள் ஆகியவற்றுடன் பூமியில் அழுந்தியது!

அனுமான் ஆகாயமார்க்கமாகச் சென்று வடகரையை அடைந்து, பெரியதொரு முழக்கம் செய்தார். அந்த கர்ஜனை திசைகள் எல்லாவற்றிலும் எதிரொலித்தது! அதைக் கேட்டதும் வானரர்கள் அனைவரும் அவரைச் சந்திக்க விரைந்தனர். ஜாம்பவானின் மனத்தில் மகிழ்ச்சி பொங்கியது. அவர் எல்லோரிடமும் கூறினார்— ‘‘அனுமன், தமது காரியத்தைச் செவ்வனே முடித்துக் கொண்டு வெற்றியுடன் வந்து கொண்டிருக்கிறார். இல்லையென்றால் அவரால் இவ்விதம் முழக்கமிட இயலாது.’’

இவ்வளவில் மிகவும் வேகம் கொண்டவரும், மலை போன்ற வடிவம் கொண்டவருமான மாருதி, மகேந்திர பர்வதத்தின் சிகரத்தின் மேல் குதித்தார். அப்போது வானரர்கள் அனைவரும் பெரும் மகிழ்ச்சி கொண்டனர். மகாத்மாவான அனுமானை நாற்புறமும் சூழ்ந்துகொண்டனர். அனுமான், ஜாம்பவான் முதலிய மூத்தோருக்கு வணக்கம் செலுத்தினார். மற்ற வானரர்களுடன் அன்புடன் அளவளாவினார். பிறகு அன்னை சீதையைச் சந்தித்ததையும், இலங்கையை எரித்ததையும், மேலும் நடந்தவற்றையெல்லாம் அவர்களுக்கு எடுத்துக் கூறினார். வால்மீகி ராமாயணத்தில் இந்தக் கட்டம் மிகவும் விரிவாக வர்ணிக்கப்படுகிறது.

பிறகு, அனைத்து வானரர்களுடனும் அனுமான் அங்கிருந்து புறப்பட்டு கிஷ்கிந்தையை அடைந்தார். அங்கே சுக்ரீவனுக்குச் சொந்தமான மதுவனத்தில் புகுந்து, அங்கதனின் அனுமதி பெற்று, எல்லா வானரர்களும் களிப்புடன் மதுவருந்தினர். காவலர்கள், சுக்ரீவனிடம் சென்று முறையிட்டனர். அப்போது லட்சுமணன் ''என்ன செய்தி?'' என்று கேட்க, சுக்ரீவன், ''தம்பி! இவர்கள் சொல்வதிலிருந்து, அனுமான், தேவி சீதையைத் தரிசித்தே வந்திருக்கிறான் என்பது சிறிதுகூடச் சந்தேகமின்றித் தெளிவாகவே புலனாகிறது. வானரர் தலைவனான அனுமானிடம் செயலை முடிக்கத் தேவையான சக்தி, புத்தி, முயற்சி, பராக்கிரமம் மேலும் சாஸ்திர அறிவு எல்லாமே இருக்கின்றன'' என்றார். மேலும் பல உண்மைகளை எடுத்துக் கூறினார். அவற்றிலிருந்தெல்லாம் ஆஞ்சநேயரது பிரபாவம் நன்கு தெளிவாகத் தெரிய வருகிறது.

பிறகு சுக்ரீவன், அனுமானையும் மற்ற வானரர்களையும் சீக்கிரமாக அழைத்துவரச் செய்து, அவர்கள் நலன்களைக் கேட்டறிந்து மனம் மகிழ்ச்சியுற்றான். எல்லோரும் ஒன்றுசேர்ந்து இராமபிரானிடம் வந்தனர். அப்போது ஜாம்பவான், அனுமானுடைய பெருமை அனைத்தையும் வர்ணித்தார். ஸ்ரீராமசரிதமானசத்தில் வர்ணனை இவ்வாறு உள்ளது— ''இறைவா! வாயுவின் மகன் செய்திருக்கிற இந்தக் காரியத்தின் பெருமையை ஆயிரம் நா கொண்ட ஆதிசேஷனாலும்கூட வர்ணிக்க முடியாது?''

இதற்குப் பிறகு அனுமான், பகவானுடைய பாதங்களில் விழுந்து வணங்க, அவரை ஸ்ரீராமன் அள்ளியெடுத்துத் தம் மார்போடு அணைத்துக் கொண்டார். அப்போது அனுமான், ''சீதாதேவி கற்பு நெறியின் மிகக் கடுமையான விதிகளைக் காத்துக் கொண்டு உடலளவில் சுகமாக இருக்கிறார். நான், அவரைத் தரிசித்து வந்தேன்'' என்று சொன்னார். அனுமான் சொன்ன அமுதம் போன்ற இச்சொற்களைச் செவிமடுத்த இராமபிரானுக்கும் லட்சுமணனுக்கும் எல்லையற்ற மகிழ்ச்சி

உண்டாயிற்று. பகவானது மனத்தின் உட்கிடக்கையை அறிந்துகொண்டு ஜானகிதேவியைத் தரிசிப்பது எவ்வாறு சாத்தியமாயிற்று? என்பது போன்ற எல்லா நிகழ்ச்சிகளையும் அனுமான் எடுத்துக் கூறிவிட்டு, அன்னை கொடுத்திருந்த சூடாமணியையும் பகவானிடம் அர்ப்பணம் செய்தார். ஸ்ரீராமன் அந்த மணியை வாங்கித் தன் மார்புடன் அணைத்துக் கொண்டு, பிரிவாற்றாமையால் வாடத் தொடங்கினார்.

அன்னை வைதேகியின் செய்தியைச் சொல்லும்போது, தேவியின் அன்பைப் பற்றி அனுமான் கூறுவதாக ஸ்ரீராமசரிதமானசத்தில் அமைந்துள்ளது.

''தங்கள் திருநாமமே காவற்காரனாக உள்ளது. இரவும் பகலும் தங்களை நினைப்பதே கதவு போல் உள்ளது. கண்களோ தங்கள் திருவடிகளிலேயே கட்டுண்டு உள்ளது. அதுவே பூட்டு. இவ்வாறு இருக்க, உயிர் எந்த வழியே போகும்?'' என்றெல்லாம் சொல்லி, இறுதியில் இவ்வாறு சொல்லிவிட்டார்— ''சீதாதேவியின் துன்பம் மிகவும் கொடுமையானது. அதைச் சொல்லாதிருப்பதே மேலாம்.''

அத்யாத்ம ராமாயணத்தில் உள்ள வர்ணனை இவ்வாறு உள்ளது. சீதாதேவியைக் குறித்த தகவல்களைச் சொல்லும் போது, அனுமான் பின்வருமாறு சொல்கிறார்— ''இலங்கையிலிருந்து திரும்பி வரும்போது நான் சீதாதேவியிடம், 'தேவி! எதன் மூலம் ஸ்ரீராமபிரானுக்கு என்னிடம் நம்பிக்கை ஏற்படுமோ, அப்படி ஓர் அடையாளம் கொடுங்கள்' என்று கேட்டேன். இவ்விதம் நான் கேட்டவுடன், அவர் தம் கூந்தல் பின்னலிலிருந்து தமக்கு மிகவும் பிரியமான சூடாமணியை எடுத்து என்னிடம் தந்தார். முன்பு சித்திரகூடத்தில் காகத்தினால் நேரிட்ட அனுபவத்தையும் எனக்குச் சொல்லிவிட்டு, நீர் பெருகும் கண்களுடன் அவர் பின்வருமாறு சொன்னார்— 'ஸ்ரீரகுநாதனிடம், நான் நலமாக இருப்பதைச் சொல். ஸ்ரீலட்சுமணனிடம், குலத்தை மகிழ்விப்பவனே! நான் முன்பு

கொடுஞ்சொற்களை அறியாமையால் கூறினேன். அவற்றை மறந்து என்னை மன்னித்து விடு. மேலும், ஸ்ரீரகுநாதன் என் மீது கருணை கூர்ந்து, என்னைக் கைதூக்கி விடத்தக்க முயற்சியை மேற்கொள் என்று சொல்.'

அவர் தந்த இச்செய்தியை தாங்கிக் கொண்டு அவரால் அனுப்பப்பட்டு நான், உங்களிடம் வந்தேன். வரும்போது இராவணனுக்கு மிகவும் பிரியமான அவனது அசோக வனத்தை அழித்துவிட்டு, ஒரே கணத்தில் அவனுடைய அரக்கர்கள் பலரைக் கொன்றேன். இராவணன் மகனான அட்சகுமாரனையும் கொன்றேன். இராவணனுடன் பேசிவிட்டு, இலங்கையின் எல்லாப் பகுதிகளையும் எரித்துவிட்டு, உடனே அங்கிருந்து புறப்பட்டு இங்கே வந்துவிட்டேன்.'' [அத்யாத்ம. சுந்தர. 5/52–55,57–59]

சீதாதேவியைப் பற்றிய எல்லாத் தகவல்களையும் அனுமானிடமிருந்து அறிந்துகொண்ட ஸ்ரீராமபிரான் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். பிறகு கூறினார்— ''வாயுநந்தனா! நீ செய்திருக்கிற காரியம் தேவர்களாலும் செயற்கரியது. இதற்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்? எனக்குத் தெரியவில்லை. இப்போது நான், என்னுடைய எல்லாவற்றையும் உனக்குக் கொடுத்துவிடுகிறேன்'' [அத்யாத்ம. சுந்தர. 5/60–62] என்று சொல்லிவிட்டு ரகுகுலோத்தமரான ஸ்ரீகாகுத்தன் வானரோத்தமரான அனுமானை இழுத்து இறுகத் தழுவிக் கொண்டார். அவர் கண்களில் அன்புக் கண்ணீர் நிறைந்துவிட்டது. அவர் அன்புக் கடலில் மூழ்கிவிட்டார்.

அனைத்து இராமாயணங்களிலுமே இந்தக் கட்டத்தில் அனுமானுடைய வலிமை, பராக்கிரமம், செயல்திறன், துணிவு, தூய அன்பு ஆகியவை பற்றிய அழகான வர்ணனை காணப்படுகிறது. வால்மீகி ராமாயணத்தில் யுத்த காண்டத்திலும் கூட, அனுமானது ஆற்றல் மிக அழகாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. அதை நாம் இங்கே சுருக்கமாக எடுத்துக்காட்டுகிறோம்.

ஒரு நாள் மிகவும் கோரமான யுத்தத்தில், இராவணனுடைய முக்கிய சேனாதிபதிகள் பலரும் கொல்லப்பட்டனர். அரக்கர்கள் நம்பிக்கை இழந்துவிட்டனர். புதல்வர்களும் தம்பிகளும் மாண்ட செய்தியையறிந்து, இராவணனுக்கு மிகவும் வருத்தமும் கவலையும் ஏற்பட்டது. அவனது நிலையைக் கண்ட மேகநாதனுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. அவன் தந்தையிடம் தன் பலம், திறமை ஆகியவை பற்றி வர்ணித்து, அவருக்குத் தைரியம் சொல்லிவிட்டு, பயங்கரமாகப் போரிடும் எண்ணத்துடன் போர்க்களம் புகுந்தான். அங்கு வந்த அவன், யாவரும் அஞ்சும்வண்ணம் உக்கிரமாகப் போரிட்டான். எண்ணிலா வானரர்களைக் கொன்று குவித்தான். அவன் விட்ட பிரம்மாஸ்திரத்தின் ஆற்றலால் ஸ்ரீராமனும் லட்சுமணனும் நினைவிழந்து விழுந்தனர். எஞ்சியிருந்த முக்கியமான கரடிகளும் வானரர்களும் கவலையில் ஆழ்ந்தனர்.

அப்போது விபீஷணன் எல்லோரையும் சமாதானம் செய்து, அனுமானை அழைத்துக் கொண்டு ஜாம்பவான் விழுந்திருந்த இடத்திற்குச் சென்றார். அங்கே சென்று ஜாம்பவானின் உடல்நிலையைப் பற்றி விசாரித்தார். ஜாம்பவான், தமது உடல் வலியை விவரித்துவிட்டு, ''குரல் மூலமே நான் உங்களை அறிந்துகொண்டேன். பார்க்கும் சக்தி என்னிடம் இல்லாமல் போய்விட்டது! அது சரி, முதலில் அனுமான் தப்பிப் பிழைத்து உயிருடன் இருக்கிறானா, அதைச் சொல்'' என்று கேட்டார். விபீஷணன், ''கரடியரசே! நீங்கள் ஸ்ரீராம—லட்சுமணர்கள் நிலையைப் பற்றிக்கூடக் கேட்காமல் அனுமானைப் பற்றிக் கேட்கிறீர்களே, இது எதனால்? வாயு புத்திரனிடம் உங்களுக்கு உள்ள ஆர்வமும் அன்பும், அரசன் சுக்ரீவன், அங்கதன், ஸ்ரீராமன், லட்சுமணன் ஆகியோரிடத்தில்கூடக் காணப்படவில்லையே! இதற்குக் காரணம் யாது?'' என்று கேட்டார்.

அப்போது ஜாம்பவான் கூறினார்— ''அரக்கர் குலவேந்தே! நான் ஏன் மாருதியைப் பற்றி அக்கறையுடன்

கேட்கிறேன்? என்பதைக் கேள். இந்த நிலையில், வீரர்களுள் சிறந்த அனுமான் உயிருடன் இருந்தால், இறந்துவிட்ட இந்தச் சேனையும் உயிர் பெற இயலும். ஆனால், அனுமான் உயிர்விட்டிருந்தால், நாம் உயிரோடிருந்தாலும் உயிரற்றவர்கள்தான்.'' [வால்மீகி. யுத்த. 74/21,22]

இதற்குப் பிறகு அனுமன், அவருக்கு நமஸ்காரம் செய்தார். அனுமானது குரலைக் கேட்டு, ஜாம்பவானுக்குப் புதிய உயிரே வந்துவிட்டது. அவர், அனுமானுக்குச் சஞ்ஜீவனீ மூலிகையின் அடையாளத்தைச் சொல்லி, அதைக் கொண்டு வரும்படி இமயமலைக்கு அனுப்பினார். அவர் சொல்லியபடி மாருதி அங்கே சென்று மூலிகையைத் தேடினார். ஆனால், அது மறைந்திருந்ததால் அவருக்குக் கிடைக்கவில்லை. ஆகவே அவர், அந்த மலையையே பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்துவிட்டார். அவர், எல்லா வானரர்களுக்கும் மீண்டும் 'பிராணதானம்' செய்தார். ஸ்ரீராமனும் லட்சுமணனும் மூர்ச்சை தெளிந்து சுயநிலையை அடைந்தனர்.

இராவணனால் விடப்பட்ட வீணாகாத 'சக்தி ஆயுத'த்தை, தன் அருகில் இருந்த விபீஷணனைக் காக்கும் பொருட்டு லட்சுமணன், தன் மார்பில் தாங்கினார். மனிதலீலையை நடத்துவதற்காக மூர்ச்சையும் அடைந்தார். அப்போது இராவணன், லட்சுமணனின் அருகே சென்று, அவரைத் தூக்கியெடுத்துச் செல்ல முயன்றான். ஆனால், அனைத்து உலகுக்கும் ஆதாரமான [ஆதிசேஷனுடைய அவதாரமான] லட்சுமணனை அவனால் எப்படித் தூக்க முடியும்?

அத்யாத்ம ராமாயணத்தில், ''அப்போது இராவணன், 'லட்சுமணனை எடுத்துப் போக விரும்புகிறான்' என்பதை அனுமான் பார்த்து கோபமுற்றார். உடனே, வஜ்ராயுதம் போன்ற தன் முஷ்டியினால் அவனுடைய மார்பில் குத்தினார். அந்தக் குத்தினால் அவன் நிலைகுலைந்து முழங்கால்கள் மடங்கக் கீழே விழுந்தான்'' [அத்யாத்ம. யுத்த. 6/12,13] என்று சொல்லப்பட்டிருக்கிறது. அனுமான், லட்சுமணனைத்

தூக்கி எடுத்துக் கொண்டு ஸ்ரீராமனிடம் கொண்டு போனார். இந்த நேரத்திலும்கூட அனுமான், திரோணபர்வதத்திலிருந்து பச்சிலை கொண்டு வரச் சென்றவர், மலையையே பெயர்த்து எடுத்து வந்துவிட்டார். இந்தக் கட்டத்தைச் சொல்கிற எல்லா இராமாயணங்களிலுமே அனுமானுடைய வியக்கத்தக்க பலம், வீரியம், அறிவுத்திறன், மேலும் அதிசய ஆற்றல் முதலியவை நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீராமசரிதமானசத்தில், மேகநாதனது சக்தி ஆயுதத்தால் லட்சுமணன் மயங்கி விழும் செய்தி வருகிறது. அங்கே அனுமான், ஜாம்பவான் கூறியவாறு இலங்கையிலிருந்து சுஷேணன் என்கிற மருத்துவரை, வீட்டுடன் பெயர்த்து எடுத்து வந்துவிடுகிறார். பிறகு சுஷேணன் சொல்லியபடி அவர் சஞ்ஜீவனி மூலிகையைக் கொண்டு வரச் செய்கிறார். மலையையே எடுத்து வருகிறார். அனுமானது சேவை மனப்பாங்கு மிகவும் விசித்திரமானது. இவரது சேவையின் காரணமாக, பகவான் ஸ்ரீராமன், தம்மை அவருக்கு நன்றிக்கடன்பட்டவராக எண்ணுகிறார். அன்னை ஜானகி தேவியும் அவ்வாறே சொன்னார். லட்சுமணனும் பிற வானரர்களும் உயிர் பிழைத்தனர். இவ்விதமே அண்ணனைப் பிரிந்து துயருற்றிருந்த பரதனுக்கு, ஸ்ரீராமச்சந்திரன் வருகின்ற சேதியைச் சொல்லி, அவரது உயிரைக் காக்கும் நற்பணியையும் அனுமானேதான் செய்தார்!

ஸ்ரீராமசரிதமானசத்தில் தரப்பட்டிருக்கும் வர்ணனை— ஸ்ரீராமனின் பிரிவாற்றாமை கடலில் பரதனின் மனம் மூழ்கிக் கொண்டிருந்தது. அப்போது அந்தண வேடத்தில் ஆஞ்சநேயர், கடலில் ஒரு தோணி வருவது போன்று வந்து சேர்ந்தார். அங்கே அனுமான், பரதனது அன்பு நிலையைப் பார்த்துச் சொல்கிறார்— ''எவரது பிரிவை இரவும் பகலும் எண்ணித் துயருறுகிறீர்களோ, எவருடைய குணநலன்களை நினைந்து நினைந்து உருகிக் கூறிக் கொண்டிருக்கிறீர்களோ, அந்த ரகுகுல திலகன், நல்லோருக்கு மகிழ்ச்சி தருபவர், தேவர்–முனிவரைக் காப்பவர்; நலத்துடன் வருகிறார்.''

இவ்விதம் இராமபிரான் திரும்பி வரும் நற்செய்தியைக் கேட்டவுடன் பரதனிடத்தில் உயிர் துளிர்த்துப் பரவிற்று. அவர் கேட்டபிறகு, அனுமான் தம்மைப் பற்றிய அறிமுகம் தருகிறார்— ''நான் வாயுகுமாரன். உடலமைப்பில் ஒரு வானரன். 'அனுமான்' என்பது என் பெயர். கருணைக்கு இருப்பிடமே! கேட்டுக் கொள்ளுங்கள். ஏழைபங்காளனான ரகுநந்தனின் சேவகன் நான்.''

எவ்வளவு பணிவு! இதைக் கேட்ட உடனே பரதன் எழுந்து ஆனந்தத்துடனும் பரிவுடனும் அவரை நோக்குகிறார். தமது சந்தோஷத்தை விவரித்து, அவர் இறுதியில் இவ்விதமே சொல்லிவிட்டார்— ''நான், உனக்குக் கடன்பட்டவனாக ஆகிவிட்டேன். என்னால் அந்தக் கடனைத் தீர்க்கவே முடியாது. இப்போது நீ, எனக்குப் பிரபுவின் கதையைச் சொல்.''

இவ்விதம் வாயுபுத்திரர் எல்லோருக்கும் சேவை செய்தார். அதன் பயனாய் எல்லோருமே அவரிடம் கடன்பட்டவராகத் தங்களை எண்ணினார்கள். பகவான் ஸ்ரீராமன் அரியாசனம் ஏறிய பிறகும் அனுமான், அவரது சேவையிலேயே ஈடுபட்டிருந்தார். மற்ற எல்லா வானரர்களும் மற்றும் அரக்கர்களும், தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பச் சென்றுவிட்டார்கள். ஆனால், மாருதி மட்டும் போகவில்லை. பகவான் ஸ்ரீராமன் அசுவமேதயாகம் செய்தபோதும், அனுமான் குதிரைக்குக் காவலாக சத்ருக்னனுடன் சென்றார்.

பத்மபுராணத்தில் பாதாள காண்டத்தில் ஸ்ரீராமன் செய்த அசுவமேத யாகத்தின் கதை விரிவாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அங்கேயும் அனுமானுடைய பெருமையின் மிக அழகான வர்ணனை வருகிறது. ஸ்ரீராமனுடைய அசுவமேத குதிரை பல நாடுகளில் சுற்றிக் கொண்டு, சுபாகு என்ற அரசனின் தலைநகராகிய சக்கராங்க நகரின் அருகில் வந்தபோது, அந்த அரசனின் மகன் தமனன் என்பவன், அந்தக் குதிரையைப் பிடித்துவிட்டான். அந்த அரசனுக்குச் சூரவீரர்களான பல புதல்வர்களும்

சகோதரர்களும் உண்டு. அரசன்கூடப் பெரிய போர் வீரனாவான்.

அங்கே இரு அணியினருக்குமிடையே கடும் போர் நிகழ்ந்தது. இறுதியில் அரசன் சுபாகுவுக்கும் அனுமானுக்கும் இடையே மிகப் பயங்கரமான போர் நடந்தது. அப்போது அனுமான் அரசனை மீண்டும் மீண்டும் கலங்கடித்தார். அவனது தேரைக் குதிரைகளுடன் அழித்தார். வெகு உக்கிரமாக அரசனுடைய மார்பில் உதைத்தார்; உதைத்தவுடன் அரசன் மூர்ச்சித்துத் தரையில் விழுந்தான். அவர் பாதம் பட்டவுடன் அவன் மோகம் நீங்கிற்று. அவனது மனத்தில் ஸ்ரீராமனிடம் பக்தி ஏற்பட்டுவிட்டது.

அவன் பின்வருமாறு கனவு காண்கிறான்— ''அயோத்தி நகரில் சரயூ நதிக்கரையில் ஸ்ரீராமச்சந்திர பிரபு, வேள்விச்சாலையின் உள்ளே இருக்கிறார். யாகம் நடத்தி வைப்பவர்களாகிய பல சிறந்த பிராமணர்கள், அவரைச் சுற்றி அமர்ந்திருக்கிறார்கள். கோடிக்கணக்கான பிரம்மாண்டங்களின் பிரம்மாக்களும், பிற தேவதைகளும் கைகளைக் கூப்பிக் கொண்டு நிற்கிறார்கள். மேலும் அவர்கள் அடிக்கடி இராமபிரானைத் துதிக்கிறார்கள்.'' [பத்மபுராணம் 28/49,50]

இந்த அற்புதமான கனவைக் கண்டவுடனே அரசனுக்கு 'இராமத்தத்துவம்' பற்றிய ஞானம் ஏற்பட்டுவிட்டது. அவன் மயக்கத்திலிருந்து விழித்து எழுந்தான். சத்ருக்னனின் திருவடிகளை நோக்கிக் கால்நடையாக நடந்தே சென்றான். போரை நிறுத்தச் சொல்லிக் கட்டளையிட்ட அவன், தன்னுடைய உறவினர்களிடமும், அண்ணன்–தம்பிகளிடமும் பின்வருமாறு சொன்னான்— ''இந்த இராமச்சந்திர பிரபு காரியம்–காரணம் இரண்டுக்கும் அப்பாற்பட்ட 'பரப்பிரம்ம'மேதான். இவர், சராசரமான இந்த உலகம் முழுமைக்கும் யஜமானர். மனித உடலை ஏற்றுக் கொண்டிருந்தாலும் உண்மையில் இவர் மனிதரல்லர். இவரை

இந்த நிலையில் அறிந்து கொள்வதே பிரம்மஞானமாகும். இந்த உண்மையை நான் இப்போது அறிந்து கொண்டு விட்டேன்.'' [பத்ம புராணம் 28/59,60]

இவ்விதம் சொல்லிவிட்டு அவன், தன் புதல்வர்களிடம் தனக்கு அஸிதாங்க முனிவர் தந்த சாபத்தைப் பற்றி எடுத்துக் கூறினான். பிறகு குதிரையின் மேலேறி அண்ணன், தம்பிகள், உறவினர்கள் எல்லோருடன்கூட சத்ருக்னனிடம் புகலடைந்தான். அங்கே அவன், தன்னுடைய நன்றியுணர்வை வெளிப்படுத்தும் போது, அனுமானைப் பற்றிப் பின்வருமாறு சொன்னான்— ''இராமபிரானுடைய திருவடித்தாமரைகளில் வண்டான அனுமான் எங்கே இருக்கிறார்? அவர் கிருபையால் நான் அரசருக்கரசரான இராமபிரானைத் தரிசிப்பேன். சாதுக்களுடைய சேர்க்கை கிடைத்துவிட்டால், உலகில் மனிதனுக்கு என்னதான் கிடைக்காது? நான் மாமூடனாக இருந்தேன். ஆனால் சத்சங்கத்தின் பயனாக, இன்று நான் பயங்கரமான பிரம்ம சாபத்திலிருந்து விடுபட்டுவிட்டேன்.'' [பத்ம புராணம் 29/32,33]

அதற்குப் பிறகு பல தேசங்களை வெற்றிகொண்டு, அரசனான சத்தியவானுடைய நகரத்திலிருந்து வேள்விக் குதிரை தொடர்ந்து சென்றுகொண்டிருந்தபோது, வித்யுன்மாலி என்ற அரக்கன் ஒருவன், வழியில் அந்தக் குதிரையைக் களவாடிவிட்டான். பிறகு அரக்கர் படையுடன் விமானத்தில் அமர்ந்து கொண்டு ஆகாயத்தில் வெளிப்பட்டான். அப்போது சத்ருக்னனின் படைக்கும், அந்த அரக்கர் படைக்கும் கடும் போர் நிகழ்ந்தது. அவ்வமயம் ஆஞ்சநேயர், அந்த அரக்கனுக்குத் தமது பராக்கிரமத்தைக் காட்டுவதாகச் சபதம் செய்தார். இதன் மூலம் அவர், இராமபிரானிடம் வைத்திருந்த நம்பிக்கையின் சிறப்பு நன்கு புலனாகிறது.

ஸ்ரீராமனிடம் வைத்திருந்த நம்பிக்கையின் பயனாகவே தமக்கு அற்புதமான ஆற்றல் கிடைப்பதாக மாருதி நம்பினார். போரிலும் அவர், தாம் பிரதிக்ஞை செய்தவண்ணமே

அற்புதமான பராக்கிரமத்தையும் காட்டினார். அவர் வானத்திலேயே சென்று பகைவர் அணியிலிருந்த மிகப் பெரிய போர்வீரர்களையெல்லாம் நகங்களாலேயே கிழித்துச் சாகடித்தார். பலரை வாலினாலேயே அடித்துக் கொன்றார். பலரைக் கால்களால் தேய்த்துக் கொன்றார். சிலரைக் கைகளினால் இடித்துத் தள்ளினார்.

அரக்க அரசன் வித்யுன்மாலி மிகவும் கோபம் கொண்டு மிகவும் பலம் வாய்ந்த திரிசூலத்தினால் அனுமனைத் தாக்கினான். அப்போது அனுமான், அந்தத் திரிசூலத்தை வாயால் கௌவிப் பற்களால் கடித்துத் துண்டு துண்டாக்கி விட்டார். மேலும், அந்த அரக்கர் தலைவனைக் கைகளால் அடித்துக் கதிகலங்க வைத்துவிட்டார். இதற்குப் பிறகு சத்ருக்னன், வித்யுன்மாலியையும் வஜ்ரதம்ஷ்ட்ரனையும் அடித்து வீழ்த்தினார். எஞ்சியிருந்த அரக்கர்கள் அவரிடம் சரணடைந்துவிட்டனர்.

அங்கிருந்து சென்று, அவர்கள் ஆரண்யக முனிவரைச் சந்தித்தனர். இதற்குப் பிறகு அந்தக் குதிரை தேவபுரத்திற்கு அருகே சென்றது. அங்கே அரசன் வீரமணி, தன் புதல்வருடன் சத்ருக்னனின் படையோடு பயங்கரமான போர் நிகழ்த்தினான். வீரமணி, பகவான் சிவபெருமானுடைய சிறந்த பக்தன். எனவே, தன் பக்தனுக்கு உதவ பகவான் ஸ்ரீசங்கரர் சிவகணங்களுடன் போர் புரிய வந்தார். அப்போது நடந்த கடும்போரில் அரசனின் குமாரனான புஷ்கலன் கொல்லப்பட்டான்; சத்ருக்னனும் மயக்கமடைந்துவிட்டார்.

அப்போது அனுமான் வியக்கத்தக்க வீரத்தைக் காட்டி, பகவான் ஸ்ரீசங்கரருடன் நேர்நேராக நின்று போர் புரிந்தார். அவரது தேரில் பூட்டியிருந்த குதிரைகளையும் சாரதியையும் சேர்த்துத் தேரைப் பொடிப் பொடியாக்கினார். அதனால் பரமசிவன், நந்தியின் மேல் ஏறிப் போரிடத் தொடங்கினார். அப்போது அனுமான், சிவபெருமானை ஒரு சால மரத்தால் அடித்து, அவரைக் கலங்க வைத்தார். அப்போது கங்காதரர்,

அவர் மேல் தம் திரிசூலத்தை ஏவினார். அனுமான், அதைப் பிடித்து ஒரு கணத்தில் ஒடித்துத் துண்டு துண்டாக்கி எறிந்தார். பலவிதங்களில் சிவபெருமானைத் தாக்கி, இறுதியில் அவரைத் தம் வாலால் கட்டியும் விட்டார். இதைக் கண்டு நந்திக்கு அச்சம் தோன்றிவிட்டது. அனுமான் இவ்விதம் பரமசிவனைக் கலங்க அடித்ததும் பகவான் ஸ்ரீசங்கரர், ''ரகுநாதனின் சேவகனான அனுமானே! நீ பாராட்டுக்குரியவன். நான் மகிழ்ந்தேன். என்னிடமிருந்து வேண்டிய வரத்தைப் பெற்றுக் கொள்'' என்று சொன்னார்.

அதைக் கேட்ட அனுமான் சிறிதும் தயக்கமோ அச்சமோ இல்லாமல், ''மகேசுவரா! ஸ்ரீரகுநந்தனரது அருளால் எனக்கு எல்லாம் கிடைத்திருக்கின்றன. இருப்பினும், தங்களுடைய மகிழ்ச்சிக்காக ஒரு வரம் கேட்கிறேன். நான் துரோண பர்வதம் போய் மூலிகை கொண்டு வரவேண்டும். நான் வரும்வரை நீங்கள், தங்கள் கணங்களுடன் இறந்து கிடக்கும் எங்களுடைய வீரர்களைப் பத்திரமாகப் பார்த்துக் கொண்டிருங்கள். அவர்களை யாரும் வெட்டித் துண்டு துண்டாக்கிவிடக் கூடாது'' என்று கேட்டுக் கொண்டார்.

பரமசிவன், அவரது கோரிக்கையை ஏற்றுக்கொண்டார். அனுமான், ஏற்கனவே இலங்கைப் போரினிடையே சென்று கொண்டு வந்த சஞ்ஜீவனி மூலிகையை இப்போது கொண்டு வந்தார். முதலில் அரசகுமாரனான புஷ்கலனைப் பிழைக்கச் செய்தார். அதற்குப் பிறகு சத்ருக்னனின் மயக்கத்தையும் தெளிவித்தார். அதற்கப்பால் இறந்த எல்லா வீரர்களையும் உயிர் பெறச் செய்தார். இவ்விதம் மாருதி, தன் பராக்கிரமத்தினால் அந்தப் பயங்கரமான போரில் இறந்துபோன மற்றும் அடிபட்டு மயக்கமுற்ற எல்லா வீரர்களையும் உயிர் பிழைக்கச் செய்தார். இறுதியில் பகவான் ஸ்ரீராமன் தாமே வந்தார். பகவான் சிவபிரான், அரசன் வீரமணிக்கு விஷயங்களை எடுத்துக் கூறி, அவனை இராமபிரானின் பக்தனாக ஆக்கினார்.

இதற்குப் பிறகு, அந்த வேள்விக் குதிரை பல நாடுகளில் திரிந்து கொண்டு அரசன் சுரதனின் பாதுகாப்பில் இருந்த குண்டல நகருக்கு அருகே வந்தது. சுரதன், பகவான் ஸ்ரீராமனுடைய சிறந்த பக்தன். அவன், அவரைத் தரிசிக்கும் எண்ணம் கொண்டு குதிரையைப் பிடித்துக் கொண்டான். அங்கே சுரதனுக்கும் சத்ருக்னனுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. அந்தச் சண்டையில் சுரதனின் புத்திரன் சம்பகன், ராஜகுமாரன் புஷ்கலனை [சத்ருக்னனின் புதல்வனை]க் கட்டியிழுத்து நகருக்கு இட்டுச் சென்று விட்டான்.

அப்போது சத்ருக்னன் அனுப்ப, அனுமான் நகருக்குள் சென்றார். சென்றவர் தேரிலிருந்த சம்பகனைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் ஏறிவிட்டார். அவன் வானத்திலேயே அனுமானுடன் கைகளால் சண்டையிடத் தொடங்கினான். சம்பகனுடைய பராக்கிரமத்தைக் கண்டு அனுமான் நகைத்துக் கொண்டே, அவனுடைய கால்களைப் பிடித்துத் தூக்கி, ஆகாயத்தில் நூறு தடவை சுழற்றிப் பூமியில் எறிந்தார். அரசகுமாரன் மூர்ச்சை அடைந்துவிட்டான்.

தன்னுடைய மகன் நினைவிழந்ததைக் கண்ட அரசன், தானே அனுமானுடன் போரிட வந்தான். அவன் அனுமானுடைய பலம், பராக்கிரமம், மேலும் அவருடைய ஸ்ரீராமபக்தி எல்லாவற்றையும் மனப்பூர்வமாகப் புகழ்ந்து விட்டு, ''நான், உன்னைக் கட்டி, நகருக்கு இழுத்துச் செல்வேன்'' என்று சபதம் செய்தான்.

அவனுக்கு விடையாக அனுமான், ''அரசே! நீங்கள், ரகுநந்தருடைய பாதங்களை எப்போதும் சிந்தித்திருப்பவர். நான் அவருடைய பக்தன். நீங்கள் என்னைக் கட்டிச் சென்றுவிட்டீர்களானால், என் இறைவன் தாமே வந்து என்னை விடுவித்துவிடுவார். வீரரே! தாங்கள், தங்கள் பிரதிக்ஞையை நிறைவேற்றுங்கள். இராமபிரானின் பாதங்களை எண்ணியிருப்பவர்களுக்கு ஒரு துயரமும் ஏற்படாது'' என்றார்.

இவ்விதம் பேச்சு வார்த்தை நடந்த பிறகு அரசன் சுரதனுக்கும் அனுமானுக்கும் பயங்கரமான போர் நிகழ்ந்தது. அந்த யுத்தத்தில் அனுமான், சுரதனுடைய நாற்பத்தொன்பது தேர்களையும் ஒவ்வொன்றாக உடைத்து நொறுக்கினார். அரசனது படை கலங்கிற்று. அரசனே வியப்படைந்து விட்டான். அனுமானின் பலத்தை வாயாரப் பாராட்டினான். அவன் 'பாசுபதாஸ்திர'த்தைக் கொண்டு அனுமானைக் கட்ட முயன்றான். ஒரு முறை 'அனுமான் கட்டப்பட்டு விட்டார்' என்றே மக்கள் கருதினர். ஆனால் ஆஞ்சநேயர், இராமபிரானை மனத்தில் தியானித்திருந்ததனால், எளிதாக அந்தக் கட்டை அறுத்துவிட்டார். அரசன் பிரம்மாஸ்திரத்தைச் செலுத்தினான். அனுமான், அதையும் விழுங்கிவிட்டார். இறுதியில் அரசன், ஸ்ரீராமாஸ்திரத்தைச் செலுத்திக் கொண்டு, "வானரமே! நீ இப்போது கட்டுண்டாய்!" என்றான். அனுமானும், "அரசே! நீங்கள் இராமாஸ்திரத்தால் கட்ட முயன்றீர்கள். அவர், என் இறைவன். நீங்கள், வேறு அஸ்திரம் விட்டிருந்தால், என்னைக் கட்ட முடியாது. அதனால் பணிகிறேன். இதற்கு நான் உரிய மரியாதை காட்டுவேன். இப்பொழுது நீங்கள், என்னை நகரத்திற்குக் கூட்டிச் செல்லலாம்" என்றார்.

சுரதனுடன் அனுமான் நிகழ்த்திய உரையாடலில் அற்புதமான அன்பு நிறைந்து நிற்கிறது. அனுமானை யார்தான் கட்ட முடியும்? அவர், தமது விருப்பத்தாலேயே பகவானுடைய பரமபக்தனான சுரதனின் சபதத்தை நிறைவேற்றித் தரவும், தம்முடைய இறைவனின் பெயர் கொண்ட படைக்கலத்திற்கு மதிப்புத் தரவுமே கட்டுண்டார்.

இதற்குப் பிறகு அனுமன் அழைக்க, பகவான் ஸ்ரீராமன் தாமே எழுந்தருளி, சுரதனுக்குத் தரிசனம் தந்து, அவனைப் பேறு பெற்றவனாக்கினார். இவ்விதம் பத்மபுராணம் பாதாள கண்டத்தில் வாயு மைந்தரின் மகத்துவம் பற்றிய அழகிய வர்ணனை வருகிறது. இங்கே அது சுருக்கித் தரப்பட்டிருக்கிறது.

*பரமபதம் எழுந்தருளும்போது பகவான் ஸ்ரீராமச்சந்திரன் உலகின் நன்மைக்காக, அனுமானை இங்கே இந்த உலகிலேயே இருக்கப் பணித்துவிட்டுச் சென்றார். வால்மீகி ராமாயணத்தில் அப்போது இராமபிரான் அனுமானிடம் சொல்கிறார்— ''வானரோத்தமரே! என்னுடைய கதைகள் எவ்வளவு காலம்வரை உலகில் பேசப்படுகின்றனவோ, அவ்வளவு காலம் என் கட்டளையை நினைவிற்கொண்டு, மனநிறைவுடன் இன்பமாக இரு'' [வால்மீகி. உத்தர. 108/31] என்றார்.*

*மகாத்மா ஸ்ரீராமன் சொன்னதைக் கேட்டுக் களிகூர்ந்த அனுமான் சொல்கிறார்— ''எம்பெருமானே! உலகில் எந்நாள்வரை தங்களது புனிதமான சரித்திரம் பிரசாரத்தில் இருக்குமோ, அன்றுவரை தங்களுடைய ஆணையை நிறைவேற்றிக் கொண்டு இந்த உலகில் இருப்பேன்.'' [வால்மீகி. உத்தர. 108/33]*

*துவாபர யுகத்தில் ஆஞ்சநேயர் பீமசேனனுக்கும் அர்ஜுனனுக்கும் தரிசனம் கொடுத்தார். கலியுகத்திலும் அவர், ஆங்காங்கு பக்தர்களுக்குத் தரிசனம் தந்த நிகழ்ச்சிகளைக் கேள்விப்படுகிறோம். அவருடைய குணம், பெருமை, மகிமை – இவை மிகவும் பரந்தவை. இங்கே மிகவும் சுருக்கமாக, அதைக் குறிப்பாக மட்டும் காட்டியிருக்கிறோம். இந்தக் கட்டுரையை அனுமானின் அளப்பரிய குணங்களைச் சிந்திக்க வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அவரை ஆதர்சமாக [எடுத்துக்காட்டாக]க் கொண்டு நிலைகுலையாத பிரம்மசரியம், நிலையான பக்தி, வீரம், தைரியம், பலம், ஆண்மை, கல்வி, துணிவு, அறிவு முதலிய குணங்களை வளர்த்து, வாழ்வில் நிலைநாட்டிக் கொள்ள அனைவரும் எப்போதும் முயன்று கொண்டே இருக்கவேண்டும்.*

**ஸ்ரீராம்! ஜய ராம்!! ஜய ஜய ராம்!!!**



॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| Code No. | | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதை மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதை [தமிழ் மூலம்] & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதை – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் – பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை–பொழிப்புரை] |
| 6. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதை –தத்துவவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – பொழிப்புரை – விளக்கவுரை] |
| 7. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதை - வினா-விடை] |
| 8. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதை – ஸாதக ஸஞ்ஜீவநீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 9. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 10. | 600 | ஸ்ரீஹநுமாந் சாலீஸா [கையடக்கப் பிரதி] [மூலம் – தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 11. | அச்சில் | ஸ்ரீஹநுமாந் சாலீஸா (Small Size) |
| 12. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 13. | 1256 | அத்யாத்ம ராமாயணம் [தமிழ் மொழிபெயர்ப்பு] |
| 14. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் [தமிழ் மூலம்–விளக்கவுரை] |
| 15. | 1904 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 16. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 17. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 18. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 19. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 20. | 1912 | பூஜை முறைகள் [ஸ்ரீவிநாயகர், ஸ்ரீமஹாலக்ஷ்மி, ஸ்ரீசரஸ்வதி] |

21. — தெய்வ ஸ்துதி மஞ்சரி [அச்சில்]
[ஸ்தோத்திரத் தொகுப்பு]
22. — தெய்வ ஸ்துதி மாலை [அச்சில்]
[தமிழ் தோத்திரத் தொகுப்பு]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

23. 1902–1906 ஐந்து பாகங்கள் [பால காண்டம் முதல் உத்தர காண்டம் வரை]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மொழிபெயர்ப்பு ]

24. 1961 முதல் பாகம் [பால–கிஷ்கிந்தா காண்டம்]
25. 1962 இரண்டாவது பாகம் [சுந்தர–உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

26. 1966 முதல் பாகம் [1 முதல் 4வது ஸ்கந்தம் வரை]
27. 1967 2வது பாகம் [5 முதல் 9வது ஸ்கந்தம் வரை]
28. 1968 3வது பாகம் [10 முதல் 12வது ஸ்கந்தம் வரை]

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம், சம்ஸ்கிருதம், உருது, குஜராத்தி, மராத்தி, பெங்காலி, ஒரியா, அஸ்ஸாமியா மற்றும் நேபாளி மொழிகளில் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**எங்களது தமிழ்நாடு கிளை :**

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்–ஸ்டாப் அருகில்),
கோயம்புத்தூர் – **641 018.**
**Ph. : 0422–3202521, Mobile : 9362202521**

website : **www.gitapress.org** | e-mail : **booksales @ gitapress.org**